## லா. ச. ராவின்

# இதழ்கள்

லா. ச. ராமாமிருதம்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# பூ

நினைவின் அடிவாரத்தில் இக்கதைகள் கருவூன்றும் நெஞ்சக் கிளர்ச்சியாக முதன் முதலாய் நான் உணர்ந்தது, குழந்தையின் கன்ன மிருதுவும், குஞ்சுக் கைகளின் பஞ்சும், கொழ கொழ உடலின் மெத்தும், தொடைகளின் அடிச் சதையின் பூ நயமும்தான். அவையும்தானோ இவைகளுக்கு இதழ்கள் எனும் பொதுத் தலைப்பும் நேர்ந்தது.

இக்கதைகள் முழுக்க முழுக்கக் குழந்தைகளைப் பற்றியே இருக்கவேண்டும் என என் ஆரம்ப அவா. ஆனால் காரியத்தை மேற்கொண்ட பின்னரே அது எவ்வளவு எட்டாக் கனியெனத் தெரிந்தது. வயதுவாக்கில் உப்பும் ஜலமும் உடலில் ஊற ஊற, கோபதாபங்களும், நானாய் இழைக்கும் தவறுகளும், பிறர் கண்டுபிடிக்கும் குற்றங்களும் நெஞ்சை விஷமாக்கி, என் கன்னித் தன்மையையும் இழந்தபின், குழந்தைகளின் உலகில் என்னால் எப்படிப் புகமுடியும்?

ஆயினும் என் அவாவின் சாயைகளாய், இக்கதைகளின் இடையிடையே குழந்தைகளும் குழந்தைகளைப் பற்றிய எண்ணங்களும் நடமாடுகின்றன. சில இடங்களில் வெளிச்ச மாய் உலாவுகின்றன; சில இடங்களில் வெறும் நிழலாட்டமே நடுங்குகிறது; பல இடங்களில், துருவன் எவர்க்கும் எட்டாத் தன் நக்ஷத்திர பதவியினின்று பூக்கும் புன்னகை என்னைத் திகைக்க அடித்துத் திகைப்பூண்டில் தள்ளுகிறது.

ஆனால் எழுதிக்கொண்டே வருகையில் வேறும் சில நேர்ந்தன.

‘நான் குழந்தையா யிருந்தேனே!’ எனும் ஏக்கம் கொஞ்சம் கொஞ்சமாய் ‘நானும் ஒரு நாள் குழந்தையாய்

இருந்தவன்தான்' எனும் ஆறுதலாய்ச் சமயங்களில் மாறிற்று. அவ்வாறுதலை ஒட்டி, கத்தரி வெய்யிலில் விட்டு விட்டு வீசும் தென்றல்போல் ஒரு இன்பம் மிளிராமல் இல்லை. இன்னும் ஏதோ ரஸாயனம், இந்த ஈடுபாடில் என்னுள் நேர்ந்து கொண்டிருந்தது. அதன் ஆராய்ச்சியைத்தான், இப்பக்கங்களில் நீங்கள் காண்கிறீர்கள் என்று கூறின் மிகையாகாது.

**இ**தழ்கள் பூவின் உள் ரகஸ்யத்துக்கு அரணாயும், வெளிக்கு அழகாயும், வண்டுகளை ஈர்க்கவும் அவை தேனைப் பருகுகையில் அவைகளை ஏந்தவும் அமைந்திருக்கிறனவே தவிர, இதழ்கள் பூவின் ஆதார பாகம் அல்ல என்று என் மருமாள் கூறுகிறாள். இதழ்களிலேயே அகஇதழ் புறஇதழ் எனப் பிரிவுகள் உண்டு என்று மேலும் விவரிக்கிறாள். காலையிலே திறந்து மாலையிலே குவியும் பூ, மணமற்று அழகுற்ற பூ, அழகிலாது மணம் நிறைந்த பூ, பூப்பதே தெரியாத பூ, ஒரு குடம் தண்ணி வார்த்து ஒரே பூ, ஒரே குடம் தண்ணி வார்த்து ஒரு பூ, பறிக்க இயலாத பூ, உதிர்ந்த பூ, பாறை மேல் பூ, பாலையில் பூ, குடலை நிறையக் குலுக்கிக் குலுக்கிப் பூ, நெருங்கினாலே நடுங்கிவிடும் பூ, காகிதப் பூ, ஆடும் பூ, சூடும் பூ, சூடாத பூ—இன்னும் அடுக்கிக்கொண்டே போகிறாள்; நான் உள் சுருங்குகிறேன்.

நேற்றுப்போல் இருக்கிறது; சரியாய் ஒரு வயதில் என்னிடம் வந்து, என் இருண்ட நேரங்களின் துணை வெளிச்சமாய். அவ்வெளிச்சத்திலேயே நான் படிக்கும் பாடமாயும் இருந்து, வளர்ந்து, மணந்து, இப்போது இரு குழந்தைகளுக்கு தானே தாயாய் விளங்குகிறாள். என் கண்ணெதிரிலேயே கருவாகி, உருவாகி, பூவாகி, பிஞ்சாகி, காயாகி, கனியாகி, இப்பொழுது தானே ஒரு இல்லத்தின் கிழத்தியாகி—அன்று நான் ஆபிஸிலிருந்து வரும்போது வாசற்படியிலேயே முழங்காலைக் கட்டித் தொங்கிக்கொண்டு அப்படித் தொங்கிய படியே, அவளை நடையோடு இழுத்துக்கொண்டு, நான் உள்

செல்கையில் சோழிப்பற்கள் தெரியச் சிரித்த குழந்தை அவளேயா இவள், தானே தாயாய், தன் பாஷையில் மலர்களைக் கொட்டிக்கொண்டு, எனக்குப் பாடம் படிப்பிக்கின்றாள்! நினைக்கையிலே உவகை பூக்கிறது. மனம் மணக்கிறது. என் வாணாள் முற்றிலும் வீணாள் ஆகவில்லையெனத் தெளிவு மலர்கிறது.

சென்ற மாதம் சேகர் ஆஸ்பத்திரியில் கிடந்தான். சுவாசப் பைகளில் ஜளி உராய்ந்து, குழந்தை மூச்சுவிட முடியாது, பிராண வாயுவை மூக்கில் குழாய் மூலம் செலுத்தியாகிறது. அவன் அசையாதபடி அவன் கரங்களை நான் பிடித்துக்கொண்டிருக்கிறேன். என் மனைவி, சிறகுகளை விரித்த கோழிபோல், கட்டிலைச் சுற்றிச் சுற்றி வந்து, தாய்மையில் தவிக்கிறாள். குழந்தையின் அந்நிலைமையில் அவனை அணைத்துக்கொள்ள முடியாதாகையால், தன் மார்பிலிருந்து ஒரு ஒரு ஸ்பூனாய்ப் பாலைக் கறந்து அவன் வாயுள் ஊற்றுகிறாள். அவள் மறு ஸ்பூனில் கறக்கும் வரை குழந்தைக்கு அவசரம் தாங்கவில்லை. இலைபோல் தளிர் நாக்கை நீட்டிக் காட்டி 'ஆ ஆ' என்கிறான். அக்காட்சி நெஞ்சைப் பிழியும் அப்பவே என் குழந்தையின் அருமை என் நெஞ்சில் இதழ் விரிகின்றது—என்ன சொன்னேன்? பூத்தேனா, மணத்தேனா, மலர்ந்தேனா, விரிந்தேனா? ஓ, விஷயமே இதுதானா! விஷயத்தின் விஷயம். நெஞ்சின் மலர்ச்சி, மலரின் நெஞ்சம். பிறர் மணம் என்மேல் வீசியதே காரணம்தான் என் மலர்ச்சியா?

ஆனால் நான் பூவல்ல, இதழ்; இதழுமில்லை; பூவோடு சேர்ந்த நார். இதை இப்போது, அல்லது இம்மாதிரி சமயங்களில், அறிந்து கொள்ள முடிந்தவரை அறிந்து கொண்டதே என் செருக்கு. என் செருக்கே என் மலர்ச்சி. இது இளமையின் புது மலர்ச்சியல்ல; முதுமையின் மறுமலர்ச்சி. புற இதழுள், அக இதழ் இம்முறையில் எல்லோரும் இதழ்களே.

பூவின் மலர்ச்சியில், அதனின்று கமழும் மணத்தில் நமக்கும் பங்கு உண்டு. இதழ் மேல் தங்கி வண்டுகள் பருகும் தேன் நம் மேலும் சிந்துகிறது. நாம் பாக்யவான்கள். நம்முடைய இந்தப் பரஸ்பரத் தன்மையை இக்கதைகள் வெளியிடின் இவை வீணாகவில்லை.

இவைகளை ஒன்றாய்த் தொடுத்துத் தந்திருக்கும் பதிப்பகத்தாருக்கும், இவைகளைத் திரட்டுவதில் சிரத்தை யெடுத்துக்கொண்ட மற்ற என் நண்பர்களுக்கும் நான் கடமைப் பட்டுள்ளேன். இது ஒருவரே ஏற்றுச் செய்துமுடித்து மார் தட்டிக்கொள்ளும் காரியமல்ல. இரு இதழ் பூவாகிவிட முடியாது. நாம் எல்லோரும் இதழ்களே.

**லா. ச. ராமாமிருதம்**

# 1. இதழ்கள்

இரண்டு தடவை குரு எட்டி எட்டிப் பார்த்துவிட்டுப் போனான்.

'பிருகா எங்கே?'

'யார் கண்டா? இங்கேதான் எங்கேயாவது வெய்யில் வீணாய்ப் போகாமல் அலைஞ்சிண்டிருக்கும்.' அடுப்பில் கிளறிக் கொண்டிருக்கும் பண்டத்திலிருந்து ஆவியடித்து; சின்னாவுக்குக் கண்கள் தஹித்தன. 'அடியே! அடுப்பு ஒழிஞ்சு போறது. குழந்தையை சற்றே பிடியேண்'டின்னு கெஞ்சறேன், காதிலே வாங்கிக்காமலே போயிடுத்து. வரட்டும் வரட்டும் சொல்றேன் காலை ஒடிச்சுப் போட்டுடறேன். கட்டை துளுத்துப் போச்சு. இன்னும் மாசாந்திர மண்டகப் படி அவளுக்கு ஆகல்லே. வரவர அது அடிக்கற 'லூட்டி' தாங்க முடியல்லே—'

'சரி சரி; நான் ஏதாவது கேட்டால், நீ ஏதாவது சொல் விண்டிரு.'

'ஒரு ரெண்டு நிமிஷம் நீங்கள்தான் தூக்கிக்கோங்களேன். தொண்டையைக் கிழிச்சுக்கறேனே, உங்களுக்கு மாத்திரம் காது கேக்கல்லையா?'

'காது கேட்கத்தான் இல்லே. உன் இரைச்சலில் செவிடாய்ப் போய்விட்டது. அட பயலே, என்னடா கத்தறே? உங்கம்மாவோடு போட்டி போடறையா, போட முடியுமாடா?' அப்பாவைக் கண்டதும் பாப்பாவுக்குக் கை கால்கள் பரபரத்தன. 'குகுகுகுகூ — பெப்பே' — அதன் வாயில் சப்தங்கள் குழறின. தூக்கினதும் சந்தோஷம் தாங்கவில்லை. கொக்கரித்துக் கொண்டு 'பட்பட்' என இறக்கைகள் போல் கைகளை அப்பா முகத்தில் அடித்து, குருவின் மூக்குக் கண்ணாடி கோணிச் சரித்தது.

'போடுடா போடு, இன்னும் ரெண்டு போடு!' எதிர்க் கட்டுப் பாட்டி தாழ்வாரத்திலிருந்து கத்தினாள்.

'என்ன பாட்டி இப்பவே பழக்கிக்கச் சொல்கிறீர்களா? சின்னா, என்ன இதுக்கு இப்படி 'ஜோர்' கொட்டுகிறதே, ஐயே கக்கிட்டானே தூ—!'

'உஷ்! அபராதம் அபராதம்! கன்னத்தில் போட்டுக் கோங்காணும் ஓய்! கங்கா ஸ்தானம் பண்ணின பலன் ஓய், தேன் ஓய் தேன்!!'

'சாப்பிட வரலாம்—!'

குரு குழந்தையைத் தொட்டிலில் விட்டான். உடனே அது முகத்தைக் கசக்கிக்கொண்டு அழுகைக்கு ஆயத்தமாய், உறும ஆரம்பித்தது.

'என்னமோ நமாஸுக்குக் கூப்பிடறமாதிரி கத்தினையே, தாலம் கீலம் கிடையாதா? இல்லை, 'உங்கம்மாவுக்குப் பிறகு நான்தான்' என்று கையில் பிசைந்து போடப் போகிறாயா?'

'இப்படி நெருப்பு மிதிச்சா என்ன பண்றது? சாப்பிட வரலாம்னா சமையலாச்சுன்னு அர்த்தம்.'

'ஓஹோ! அப்போ தட்டுப் போட்டாச்சு என்றால் சாப்பிட்டாச்சு என்று அர்த்தமாக்கும்! அப்போ நான் சட்டையை மாட்டிக்க வேண்டியதுதான்.'

'என்ன இப்படி முரண்டறேள் இன்னிக்கு? இந்த ஒன்பது மணிக்குள் ஏன் இப்படி கொள்ளை போறதோ?'

'அப்புறம் நாயும் நரியும் ஓடறதே, அதையும் ஞாபகம் வைக்கணும்!'

'எல்லாம் சொல்ல வேண்டியதுதான். சொல்றவாளுக் கென்ன? இந்த மாதிரி குழந்தைகளைப் பெற்றுவிட்டு ஓய்ச்ச லேது, ஒழிவேது? என் முதுகு பிளக்கிறது எனக்குன்னா தெரியும்? இடத்தைப் பெருக்கி இலையைப் போடறேன். அது வரைக்கும் பாப்பாவை ரெண்டு நிமிஷம்—'

'சின்னா நீ மணிக்கணக்காய் நிமிஷங்களை கொசுறிக் கொண்டிரு, ஒரு நாளைக்கு என்ன நேரப் போகிறது தெரியுமா?''

'தெரியல்லியே என்ன?'

'மிஸ்டர் குருமூர்த்தி, உங்கள் கஷ்டம் எங்களுக்குப் புரிகிறது. ஆனால், எங்கள் கஷ்டம் உங்களுக்குப் புரிய வில்லை. 'நீங்கள் குழந்தையையே பார்த்துக் கொண்டிருங் கள்' என்று படியளக்கிறவன் சீட்டைக் கிழித்து வீட்டுக் கனுப்பிவிடப் போகிறான், நானும் மத்தியானமே வந்து விடுவேன் குழந்தையைப் பார்த்துக் கொள்ள; உனக்கும் பகல் தூக்கம் கெடாது.'

எதிர்க்கட்டுப் பாட்டிக்குத் தாங்க முடியவில்லை. பிடித்து நறுக்கும் கீரையைக்கூடக் கீழே வைத்துவிட்டாள். வெல்லப் பொதிமாதிரி உடல் குலுங்கிற்று. பொக்கை வாய் முகத்தை இருகூறாய் வெட்டிற்று. மார்க் கபம் 'கிண்'ணென்றது. சிரிப்புத் தாங்காமல் புரைக்கேறி இருமிக்கொண்டே உச்சந் தலையைத் தட்டிக்கொண்டாள். கண்களில் நீர் கொட்டிற்று.

சின்னாவுக்கு ரோஸக் கண்ணீர் துளும்பிற்று. ஆனால், குருவுக்கு இரக்கமில்லை.

'இரு இரு, கண்ணீரையெல்லாம் இப்பவே கொட்டி விடாதே. அப்புறம் சாப்பிடும்போது குழம்பு ரஸத்துக்கு உப்புப் போறாமல் இருக்கும். அப்போ இந்த வீட்டில் எதுவும் வீண் போகக்கூடாது—'

'வீண் போகாது—' சின்னாவின் குரல் இறுகிற்று,

'ஓஹோ! பிடி சாபமா? இம்மண்ணகத்தின் பெண்ணகக் கண்ணகம் கண்ணகியா நீ?'

'குழந்தையைப் பிடிங்கோன்னா நேரமாறது. இப்படி வம்படித்து வம்புக்கிழுக்க நேரமாகல்லையாக்கும்''

'மணியென்ன?—ஓ மை காட்—போடு போடு, ஆன வரைக்கும் போடு—'

'எல்லாம் ஆயாச்சு? ஆனவரைக்கும்னு சொட்டைச் சொல் வேறேயாக்கும்! ஏன் குளிக்கல்லையா?'

'போடு போடு...குளியாவது இனிமேல்! இன்னிக்குக் குளிக்கு முழுக்கு. இன்று கழுத்து மட்டும் 'மேக்அப்'போடு சரி. எப்படியோ எங்களையும் உங்கள் மாதிரி ஆக்கி விடுகிறீர்கள்! என்ன இன்னும் பிருகாவைக் காணோம்! பசி வேளைக்கு ஒரு நிமிஷம் தப்பினால் ஊரைக் கூட்டுவாளே!'

'தானா வரது கழுதை. அதைத் தேடிண்டு எத்தனை வாண்டுகள் வரது...அதுகளோடு எங்கேயாவது கொட்ட மடித்துக் கொண்டிருப்பாள். வரப்போ வரட்டும். வீட்டி லாவது கொஞ்ச நேரம் ரகளை ஓஞ்சிருக்கும்.'

x x x

'ஸார், உங்களை யாரோ ஒரு அம்மா தேடி வந்திருக் காங்க.'

'அம்மாவா?'

எழுந்து நடந்து அறைக் கதவைத் திறக்கும் அந்த நேரத் துக்குள் மண்டையுள் ஆயிரம் எண்ணங்கள் நீந்தின.

'யாராயிருக்கலாம்? தினம் கட்டு நோட்புக்கும் டிபன் டப்பாவையும் மார்போடு அணைத்துக்கொண்டு தன்னுடன் பஸ்ஸுக்குக் காத்திருக்கும் அந்த வாத்தியாரம்மாவா?'

நேற்று மாலை வழி மறித்து 'மூஸ்பர்ஜங் பகதூர் தெரு வுக்கு எப்படி போகிறது?' என்று கேட்டாளே அந்த 'லேடி'யா? நிஜமாகவே அவன் 'ஸ்டன்னிங்'—

இல்லை மூணு நாளுக்குமுன், சின்னா இலையில் சுருட்டிக் கொடுத்திருந்த 'மோர்க்கூழ்' பொட்டலத்தை அசதி மறதி யாய் பக்கத்தில் வைத்துக் கொண்டதால், அதன்மேல் உட்கார்ந்து அதைச் சப்பையாக்கிவிட்டு அவசர அவசரமாய் எழுந்து, 'ஓ! உங்களதா! எக்ஸ்க்யூஸ் மி. ஐ ஆம் ஸாரி —' என்று குழல் போன்ற குரலில் தெரிவித்துக் கொண்ட அந்த இரட்டைப் பின்னல்காரியா?

அல்லது—

இம்மாதிரி நினைவில் பத்திரமாய் ரகஸ்யமாய்ச் சேமித்துப் புதைத்த சம்பவங்கள், முகங்கள், மேட்டு வெள்ளை விழிகள், மேல் மிரளும் கருவிழிகள், கன்னங் குழிந்த புன்ன கைகள்—எல்லாம் ஒருங்கே தலைநீட்டி எழுந்தன.

குருவுக்குத் தன்னுடைய கவர்ச்சியில் என்றுமே ஒரு அபார நம்பிக்கை. தன் பகற் கனவுகளில் தன்னோடு வளைய வரும் அப்ஸரஸ்கள் அத்தனை பேரும் அல்லது அத்தனை

பேரிடமும் தனித்தனியாய் இருக்கும் சிறப்புகளையெல்லாம் ஒன்று திரட்டி அத்தனை பேரின் அடையாள உருவான ஒருத்தி ஒருநாள் நனவிலேயே, தானாவே அவன் மடியில் பட்சி மாதிரி வந்து விழுந்து விடுவாள் என்ற எதிர்பார்த்தலிலேயே தீர்மானமாகிவிட்ட ஒரு எண்ணம். ஆனால், அத்துடன், இத்தனை பேர் எனக்காக இப்படிக் காத்திருந்தும் நான் சின்னாவுக்குத் துரோகம் பண்ணாமல் இருக்கிறேனே, என்னைப் போலும் இவ்வுலகத்தில் உண்டா?' என்று தன் காலில் தானே பூப்போட்டுக் கொண்டு, தன்னைக் கண்டே தனக்கு ஒரு பிரமிப்பு, மகிழ்ச்சி, 'ஆஹா!'

இப்படித் தான் ஏற்படுத்திக் கொண்ட மன நிலையில் கதவைத் திறந்து, தேடி வந்தவளைக் கண்டதும் கொஞ்சம் ஏமாற்றமாயிருந்தது. அவனையுமறியாமல் முகம்கூட சற்று கடுத்ததோ என்னவோ?

'என்னா சின்னா?'

சின்னா கையைப் பிசைந்து கொண்டு நின்றாள். பயத்தில் கண்கள் வளையங்களாயிருந்தன.

'பிருகாவைக் காணோமே!'

அவள் குரல் அழாத அழுகையில் நடுங்கிற்று.

'காணோமா?

குருவுக்கு இடது கண்ணின்கீழ், கன்னத்துச் சதை 'பட்பட்' என அடித்துக் கொண்டது. ஒரு கையால் அந்த இடத்தை அமுக்கிப் பொத்திக் கொண்டான். எதிர் பாராதது ஏதேனும் கண்டாலோ கேட்டாலோ அவனுக்கு அப்படித் துடிக்கும்.

'பயப்படாதே சின்னா!' ஆனால், அவன் வயிற்றை குதிரைக் குட்டி 'விலுக் விலுக்'கென்று உதைத்தது. 'வா உள்ளே, எப்போலேருந்து காணோம்?'

'நீங்கள் கேட்டேளே அப்போதிருந்தே!—'

அவனையுமறியாமல் பார்வை கைக்கடியாரத்தின்மேல் சென்றது. நேரத்தைக் கண்டு அமுக்கி வைத்திருந்த எஃகுச்

சுருள்போல் திகில் அடி வயிற்றிலிருந்து விசிறிக்கொண்டு கிளம்பியதும் குருவுக்கு முகம் சாம்பலாய் வெளுத்தது.

'நீங்கள் ஆபீஸுக்குப் போனதும் எச்சில்கூட இடல்லே' காரியத்தை அப்படியே விட்டுவிட்டு முதுகுவலிக்கு உடம்பைப் போட்டுப் பிரட்டிக்கலாம்னு ஊஞ்சலில் சாஞ்சதுதான் தெரியும். உச்சி வெய்யில் ஓட்டு சந்திலிருந்து கண்ணைச் சுட்டப்போது தான் முழிச்சுண்டேன். கண்ணைக் கசக்கிண்டு பார்த்தால் எல்லாம் போட்டது போட்டபடி வீடு 'ஜோ'ன்னு கிடக்கு. வாசல் கதவைத் திறந்துண்டு, குடித்தனக்காரப் பாட்டி பக்கத்தாத்துக்கு பேசப் போயிட்டா. 'பிருகா பிருகா'ன்னா எங்கேயிருக்கா? எனக்குத் தெரிஞ்ச அண்டையாம் எதிராளாம் எல்லாம் தேடியாச்சு. 'உன் பெண் இன்னிக் காலையிலிருந்தே கண்ணுலே படலையே அம்மா'ன்னு எல்லாரும் கைவிரிச்சுட்டா. நான் கைக் குழந்தையை பாட்டிகிட்ட கொடுத்துட்டு—எனக்கு ஒண்ணுந் தோணல்லே, அப்படியே ஓடி வந்துட்டேன்—'

திடீரென சின்னா ஜன்னி கண்டவளாகிவிட்டாள். அவன் கையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டாள். 'ஐயோ, என் குழந்தைக்கு என்னவாவது நேர்ந்திருக்குமோ. என் வயிற்றை சங்கடம் பண்றதே-என் குழந்தையை எனக்குத் தேடிக் கொடுங்களேன்—'

குரு அவள் தோளையணைத்துக் கொண்டான். அவள் குழந்தையாய்த்தானிருந்தாள். குழந்தைக்குக் குழந்தை!

'சின்னா, பயப்படாதே! இப்போ எல்லாம் பழைய நாட்கள் மாதிரியில்லே. போலீஸ், ரேடியோ, தினசரிப் பத்திரிகைகள், விளம்பரங்கள் இன்னும் என்னென்னவோ வழிகள் எல்லாம் இருக்கின்றன. வா வீட்டுக்குப் போவோம்.'

அவன் அவளை நடத்திச் செல்ல, அவன் நடந்தான்.

எல்லாத்துக்கும் வழியிருக்கலாம். ஆனால், என் குழந்தையை உசிரோடு காண்பேனோ?

'என்னடி பேத்தறே?' திகிலின் சீற்றத்தில் அவளை அறையலாம் என்று இருந்தது. நடு வழியில் சட்டென நின்றான். 'பிருகா கழுத்தில் ஏதாவது போட்டிருக்கா?'

அவள் மலர மலர விழித்தாள். அப்போதுதான் அவன் கேள்வியின் அசட்டுத்தனம் தெரிந்தது. கூடவே அன்றைய காலைச் சம்பவங்களும் ஞாபகம் வந்தன.

இருவரும் அவரவர் யோசனையில் தரையைப் பார்த்துக் கொண்டு நடந்தனர்.

அப்போதுதான் புதிதாய்க் காண்பதுபோல் பிருகாவின் உருவம் நினைவில் எழுந்தது.

'அப்பா! அக்குண்டு சாமிக்கு இக்குண்டு நாமம்; என்னாதூ?' என்று பிருகா ராகம் போட்டுக்கொண்டு கேட்பாள்.

'அது நீ!—' என்று சுட்டு விரலால் அவன் வயிற்றில் குத்துவான்.

அப்பாவுக்கும் பெண்ணுக்கும் திரும்பத் திரும்ப இதே கேள்வியிலும் அதற்கு அதே பதிலிலும் அலுக்காத ஒரு தனி சந்தோஷம், அவர்களுக்கே சரியாய்ப் புரியாத ஒரு தனி சந்தோஷம், அவர்களுக்கே சரியாய்ப் புரியாத ஒரு ரகஸ்யத் தொனி.

பிருகா அப்படித்தானிருந்தாள். புறாப்போல் சின்ன முகம். அதற்குள் அதற்கேற்ற அவயவங்கள். நெட்டிபோல் லேசான, சிறிய உடல் அமைப்பு. அம்பி பாப்பாவே அவளை விடக் கனம்.

கிண்டி மூக்கிலிருந்து ஜலம் கொட்டுவதுபோல் சதா பேச்சு. வயதுக்கு மீறிய பேச்சு, 'மொச்சு மொச்சுன்னு அதென்ன பேச்சோ? பேசிப் பேசியே தேய்ஞ்சு தீசலாப் போறையேடி, அந்த வாய்க்குத்தான் கொஞ்சம் ஓய்ச்சல் கொடேன்!—' என்று அவள் அம்மை எரிச்சலுடன் அவள் பொத்தான் உதடுகளைத் திருகுவாள்.

'ஊ — ஊ — வலிக்குது — கையோடு வந்துடும்'-பிருகா கத்துவாள்.

பிருகாவுக்கு இன்னும் பெயர்கள் உண்டு.

சோனா (சோனியாயிருப்பதால்)

சூம்பா (சூம்பியிருப்பதால்)

விருச்சிகா (நின்றவிடத்தில் நில்லாமல் இருப்பதால்)

ஆனால், சாதாரணமாய் வழக்கில், இட்ட பெயர் பிரஹ்லாதாவை ஒட்டி, அவள் சுறுசுறுப்பையும் குறிப்பதாய் பிருகாவே நிலைத்தது.

பிருகாவுக்கு வாய் ஒரு நிமிஷம் சும்மாயிருக்க முடியாது. அதில் எதையாவது போட்டு அசைத்துக் கொண்டிராத வேளைக்கு ஏதாவது பேசியாகணும்.

இன்று காலை எழுந்ததும் வழக்கம்போல் ஏதோ ஆரம்பித்தாள்—'உன் மேலே எனக்கு ஆசையாயிருக்கம்மா—' என்று அம்மா கழுத்தைக் கட்டிக்கொண்டு தொங்கினாள்.

'விடு நேரமாச்சு. குளிக்கப் போகணும்.'

'அம்மா உன்னைப் படுத்தமாட்டேம்மா—'

'அதான் ஏதுடாது மானம் மப்பு போட்டிண்டிருக்கேன்னு பார்த்தேன்—என்னை விடறையா?—'

'சாப்பிடறப்போ வெறி பிடிச்சு அழமாட்டேம்மா—'

'ஆகட்டும்; அப்போன்னா தெரியப் போறது. இன்னும் உலை நீருக்கே வழியில்லை. அடுப்பிலே பூனைக் குட்டி தூங்குகிறது. மணியோ ஓடறது. உங்கப்பா கடியாரத்தை என்ன திருசமம் பண்ணியிருக்காரோ? பிருகா விடறையா? இல்லை கொடுக்கறதை வாங்கிண்டுதான் விடுவையா?'

பிருகாவுக்குத் திடீரென அம்மா கழுத்துச் சங்கிலிமேல் கவனம் நழுவிற்று, அதை நெருடினாள். 'அம்மா...இது பொய்யாமே?'

சின்னா குளியை மறந்தாள். அரவம் கேட்ட விலங்கு போல் அவள் மனம் உஷாராயிற்று.

'யார் சொன்னா?'

'பட்டு மாமி சொன்னாள். நேத்திக்கு மாமிக்கு மாமா புதுஸ்ஸா கடையிலிருந்து உன்னுது மாதிரியே வாங்கிண்டு வந்தா, பளபளன்னுது. என் கழுத்துலேகூடப் போட்டுப் பார்த்தா. எனக்கு ஆசையாயிருந்ததம்மா. 'நல்லாயிருக்கு மாமி'ன்னேன், 'ஏன் உங்கம்மாது மாதிரின்னு நினைச்சை யா'ன்னு மாமி கண்ணைச் சிமிட்டினா. எல்லாரும் சிரிச்சா.'

'ஏன் மாமி, எங்கம்மா சங்கிலிக்கு என்ன?' கேட்டேன்.

'உங்கம்மா சங்கிலி 'பொய்', டூப் அளப்ஸ்,

'அப்போ—அப்போ அம்மாவுக்கு நிஜமாயில்லியா?' கேட்டேன்.

'இருக்கு. உனக்குக்கூட இருக்கு. அதெல்லாம் உங்கப்பா பத்திரமா 'பாங்கி'லே வெச்சிருக்கா. உங்கப்பாகூட எடுக்க முடியாது. அவ்வளவு பத்தரம்.'

'மறுபடியும் எல்லோரும் சிரிச்சா. எனக்குத்தான் புரியல்லே. ஆனால், ஏம்மா அந்த மாமி அப்படி கண்ணை சிமிட்டறா?'

சின்னா பதில் பேசவில்லை. சுவர்மேல் ஊரும் ஒரு மூட்டைப்பூச்சிமேல் அவள் நாட்டம் ஊன்றியது. மண்டை எரிந்தது.

'ஏம்மா, பாங்குன்னா என்னம்மா? அங்கே வெச்சதை எடுக்க முடியாதா? ஏன், அப்பாதானே வெச்சா,அப்பாவையே கேளேன்!'

'அப்பா நீ சொல்லப்பா!'

குருவும் மடியில் கோர்த்த கைகளுடன், அதே மூட்டைப் பூச்சியை சித்தித்துச் கொண்டிருந்தான். ரத்தத்தைக் குடித்து உப்பி அதனால் வேகமாய்ச் செல்ல முடியவில்லை. யார் ரத்தத்தைக் குடித்து யார் தூக்கம் கெட்டால் அதற்கென்ன? இப்போதைக்கு அதன் வயிறு நிரம்பியிருக்கிறது. இதை நசுக்க எத்தனை நாழியாகும்? இல்லை. நசுக்கமாட்டேன். நசுக்கக் கூடாது, நசுக்கினால் எனக்குத்தான் அசிங்கம். அத்துடன் இன்னும் விருத்தியாகும்.

திடீர் என கழுத்தினின்று பிருகாவின் கைகளைப் பிடுங்கி எறிந்து, சின்னா மகள் முகத்தில் அறைந்தாள்.

'எத்தனை தடவை படிச்சுப் படிச்சு சொல்லியிருக்கேன் அங்கெல்லாம் போக வேண்டாம்னு?'

சின்னா எழுந்து விடுவிடென சென்றாள்.

வெந்நீருள்ளில் அண்டாவும் சொம்பும் உருண்டன.

அப்பாவும் பெண்ணும் மௌனமாய் உட்கார்ந்திருந்தனர்.

பிருகாவுக்கு அடியைப்பற்றி அக்கறையில்லை. ஒண்ணா ரெண்டா, இதுவரை எத்தனையோ துடைத்தெறிந்திருக் கிறாள்! ஆனால், அம்மாவின் கோபம்தான் புரியவில்லை.

முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு, 'அப்பா! அம்மா அடிச்சுட்டாப்பா!' என்றாள்.

'போனால் போகிறது, இன்னிக்கோ நாளைக்கோ பௌர்ணமியோன்னா, இப்பொ, எல்லாம் உங்கம்மா அப்படித் தானிருப்பாள். நாம் கொஞ்சம் ஜாக்கிரதையாயிருக்கணும். எங்கே அடிக்சாள்.காண்பி!' அவள் கன்னத்தில் முத்தமிட் டான். 'இப்போ சரியாய்ப் போயிருக்கணுமே! சிரிப்பு வந்துடுத்து, தோ தொண்டையில் நிக்கறது, வாய்க்கு வந்தூடுத்து - அதோ உதட்டில் ஒளிஞ்சுண்டிருக்கு-அதோ ரெண்டு பல் தெரியறது-பக்'

பிருகாவுக்கு சிரிப்பு பீறிட்டது.

'அப்பா அம்பி பாப்பா முழிச்சுண்டுட்டான்' என்றாள்.

தூளி பலமாய் ஆடிற்று. அதனுள்ளிருந்து 'ப்பாப்பா–' என்று சப்தங்கள் கிளம்பின.

தங்க விமானத்தின் உரை கழன்று விழுந்தாற்போல், குழந்தை தூளி மடிகளிலிருந்து, குருவின் அணைப்பில் வெளிப் பட்டான். கொழ கொழத்த பால் சதையில் கொழுகொழு உடலும் முகமும் மார்மேல் அழுந்துகையில் குருவுக்கு இன்பம் தாங்கமுடியவில்லை. கண்கள் செருகின. இந்த அனுபவம் மேல் சதை மட்டில் நிற்கவில்லை. உடலை யூடுருவி, இதயத்தின் தன்மையின் உள் சத்தோடு சேர்ந்து, அங்கு வறண்ட இடங்களைக் கிளறி, ஈரத்தை வருவித்ததும் இதழ்கள் மலர்ந்தன.

அப்பா, இந்த சுகம் எத்தனை கஷ்டங்களும் தாங்கும்.

இது இல்லாவிடில் பிறகு வாழ்க்கையில் நோக்கே ஏது?

என் உயிர், இந்த ஸ்பரிசத்தில், இன்றைய உழலுக்கு வேண்டிய பலத்தைப் பெற்று, இன்றைய வெய்யிலுக்கும் மழைக்கும் புயலுக்கும் தயாராகிறது.

நாளைக்கு நாளைய உணர்வு. நாளைக்கு நாள் அப்படி அப்படி.

இந்த உணர்வில் நான் என்னையே உணர்கிறேன்.

'-ப்பா ப்பா-'

கைகளை ஆட்டிக்கொண்டு குழந்தை பலமாய்ச் சிரித்தான். மேல்வாயில் அப்போதுதான் வெளி வந்துகொண்டிருக்கும் பல் முத்துக்கள் இரண்டில், இகரின் நீரோட்டம் பளபளத்தது. கண்மேல் வழியும் மயிர் சரடுகளின் ஒளி ஒளிந்து விளையாடிற்று.

'பிருகா கண் முழிக்கிறபோதே ராகம் வைக்கிறாயே, உடனுடத்தவனைப் பார்-'

'அப்பா அப்பா எனக்கு ஆசையாயிருக்கப்பா, பாப்பாவை என் மடியிலே வைப்பா-'

'தெல்லாம் முடியாது' குரு,குழந்தையைத் தோள்மேல் போட்டுக் கொண்டு ஆட்டினான். 'உன்னைக் குடை சாய்த்து விடுவான்.'

பிருகாவைத் திடீரென அசூயை கவ்விற்று. கைகளை இறக்கை விரித்துக் கொண்டு நின்றாள்.

'என்ன பிருகா பறக்கப் போறையா?'

'தூக்கு அப்பா என்னை' பிருகா கட்டளையிட்டாள். அவள் புருவங்கள் நெறிந்தன.

'ஓஹ்ஹொஹ்ஹோ! அப்படியா சமாச்சாரம்? தெல்லாம் முடியாது.' குரு குழந்தையைத் தூக்கிப் பிடித்தான். பாப்பாவின் கிறீச்சிட்ட சிரிப்பு அவன் முகத்தில் பீச்சியடித்தது. பிருகாவுக்கு நெஞ்சில் பிராண்டல் தாங்க முடியவில்லை. பற்கள் நறநறத்தன.

'அப்பா தூக்கு என்னை-'

'உன்னை எதுக்குத் தூக்குகிறது?'

'அம்பிப் பாப்பாவை மாத்திரம் தூக்கிண்டிருக்கையே?'

'அம்பிப் பாப்பா தங்கப் பாப்பா. எவ்வளவு சிவப்பாயிருக்கிறான் பார். டேய், ரெக்கு தோற்றதுடா உனக்கு.'

'நான்தான் சேப்பு-' பிருகா சட்டையைத் தூக்கி, தன் உடம்பை சந்தேகத்திற்குப் பார்த்துக்கொண்டாள்.

'யார் சொன்னது? நீ கரிவிஷ்டைன்னா!'

அவளுக்குக் கெட்ட கோபம் வந்தது. 'நீதான் சொன்னே. நேத்திக்குத்தான் சொன்னே. 'அம்பிப் பாப்பா சிவப்பு ரோஜா, நான் வெள்ளை ரோஜா'ன்னு. அவள் அப்பா முகத்திலிருந்து திடீரென சிரிப்பு எல்லாம் பறந்தது. கெட்ட சமாசாரத்தைத் தெரிவிக்கத் தயாராபவன்போல் முகம் மாறிற்று.

'பிருகா, நான் சொன்னது தப்பு. நீ வெள்ளை ரோஜா யில்லை. நீ குழந்தையா யிரிக்கிறப்போ, உங்கம்மா உன்னைக் குப்பைத் தொட்டியிலிருந்து பொறுக்கிண்டு வந்தூட்டா.'

பிருகா சற்று நேரம் சும்மாயிருந்தாள். அப்பா முகத்தில் சிரிப்பை அவள் கண்கள் தேடின. அங்கு இல்லாத சிரிப்பைத் தான் தனக்கு வருவித்துக்கொண்டு பார்த்தாள்.

'சும்மா சொல்றே அப்பா நீ! ஒள்ளாட்டிக்கு சொல்றே!'

'நிஜம்மா' அப்பா முகத்தில் ஈ ஆடவில்லை. 'நீ வேணு மானால் பங்கஜத்தைக் கேட்டுப்பாரேன். பங்கஜம், பற்று அப்புறம் தேய்க்கலாம். ஒரு நிமிஷம்—இந்தப் பெண்ணைக் குப்பைத்தொட்டியிலிருந்துதானே எடுத்து வந்தது?'

'ஆமாமா, நான்தானே மேலே ஒட்டிக்கிட்டிருந்த குப்பை அழுக்கு எல்லாம் கழுவி அம்மாகிட்டே குடுத்தேன்!'

'ஆமாமா நான்கூடப் பார்த்தேனே!' பங்கஜத்தின் பிள்ளை காபாலி முற்றத்தில் பம்பரத்தை 'கோஸ்' எடுத்தபடி ஒற்றைக்காலில், கூத்தாடிக்கொண்டு, ஒத்துப்பாடினான்.

பயங்கரமான சந்தேகம் பிருகாவின் நெஞ்சில் விதை யூன்றிற்று.

'நிஜமாகவா?'

'நிஜமில்லாமல் பொய்யா, இதோ உங்கம்மாவே வரா கேளேன்! சின்னா, பிருகாவை குழந்தையா, குப்பைத் தொட்டியிலிருந்துதானே நீ தூக்கிண்டு வந்தே?'

சின்னா. கூந்தல் முடிச்சில் ஈரத் துணியுடன், மடி ஜலம் பிடிக்க குடத்துடன் குழாயடிக்கு வந்தாள். அவள் முகத்தி தின் கடுப்பு இன்னும் மாறவில்லை.

'அதுக்கு சந்தேகம் வேறேயா? நம் வீட்டுப் பெண்ணா யிருந்தால் ஊர் வம்பெல்லாம் இழுத்துண்டு வருமா? சரியான

கார்ப்போரேஷன் குப்பைத் தொட்டி. தெரியாத்தனமாகக் கொண்டு வந்தூட்டேன்.'

'நான் என்ன சொன்னேன் பிருகா? இப்போ திருப்தி தானே?'

பிருகாவின் கண்கள் உள்ளுக்கிழுத்த திரிபோல் ஒளி மங்கின. உதடுகள் நடுங்கின.

'நிஜமாவா அப்பா?'

குரு விசனத்துடன் கை விரித்தான். 'நான் என்னத் தையம்மா கண்டேன்? காலையில் உங்கம்மாவை ஆஸ்பத்திரி யில் விட்டு ஆபீஸுக்குப் போனேன். சாயந்திரம் பார்க்கப் போனேன், 'இதோ பாருங்கோ உங்கள் குழந்தை' என்று உன் அம்மா துணி மூட்டையிலிருந்து ஒரு முகத்தைக் காண் பித்தாள், எங்கேயிருந்து எடுத்து வந்தாள் என்று என்னத் தைக் கண்டேன். நீயே சொல்து.'

முற்றத்திலிருந்து பங்கஜம் சத்தமில்லாத சிரிப்பில் பல்லைக் காட்டிக்கொண்டிருந்தாள். புகையிலைக் காவியேறிய வாய் தக்காளியறிந்த மாதிரி செவேலென்றது. ஒரு நிமிஷம் கூட சும்மாயிருக்க முடியாத பிருகாவின் கைகள், மடியில் உயிரற்றுக் கிடந்தன.

'இப்போ உனக்கு யார் சொன்னா?' வார்த்தைகள் கிணற்றுள்ளிருந்து வந்தன.

'யார் சொன்னால் என்ன? ஒரு குருவி பறந்து வந்து காதுலே ஓதிவிட்டுப் போச்சுன்னு வெச்சுக்கேயேன். இல்லை உன் பட்டு மாமி மாதிரி ஒரு உண்மை விளம்பி போயேன். அடடா, சின்னா குழந்தையைப் பிடி,'பார்ட்டைம்'வேலைக்கு நேரமாய்விட்டது. ஒரு நாளைக்கு இருபத்திநாலு மணி நேரத் துக்கு முப்பத்தி ஆறு மணி உழைக்கிறேன். இந்த வீட்டுக்கு அப்பவும் போதவில்லை. அது என்ன சாபமோ?'

'வீட்டைக் குற்றம் சொல்லி என்ன பண்றது? அளவுக்கு மீறி பிறத்தியார் சுமையெல்லாம் தன் தலைமேல் வாங்கிண் டால், குபேரப் பட்டினம் கூட குடி முழுகித்தான் போகும்—'

ஏதோ சொல்ல வாயயடுத்து குரு அடக்கிக் கொண்டான். சண்டைக்கு இப்போது நேரமில்லை. அவசரமாய் சட்டையை மாட்டிக்கொண்டு வெளியே சென்றான்.

பிருகா உட்கார்ந்த இடத்தைவிட்டு நகரவில்லை. தெருவில் குப்பை வண்டி ஜன்னலுக்கெதிரே நின்றது. அதனுள் குப்பை மேட்டிலிருந்து செத்து விறைத்த ஒரு பூனையின் உடல் கிடந்தது. அதன் அடிவாய்ப் பற்கள் கேலியாய் இளித்தன.

**தெ**ருக்களின், சந்துக்களின் அடக்கமான நடமாட்டத்தைக் கடந்ததும் ஒரு திருப்பத்தில் திடீரென 'ரோடு' தோன்றிற்று. அன்னிக்கு அப்பா பீச்சுக்குக் கூட்டிண்டு போனாளே, அப்போ அவளைக் கீழே தள்ளித்தே அந்த சமுத்திர அலைமாதிரி. ஒரு புது உலகத்தின் ஆரவாரங்கள் அவள்மேல் திடீரென மோதியதும் பிருகா பிரமித்து நின்றாள்' காலடியில் பூமி அதிர்ந்தது.

சரியான நாலு மூலைக் கூடல். குழல்களின் ஊதல்களும் 'பூம்பூம்களும்' மணிகளின் அலறல்களும் வண்டிகளின் கர்ஜனைகளும் காதைப் பொளிந்தன. இத்தனைவித சப்தங்களின் நடு நாடியை அடைந்துவிட்டாற்போல் காதுகளில் 'ரொய்ஞ்' என்று ஒரு கூவல் கண்டு தலை 'கிர்ர்ர்ர்—'

திடீரென பலத்த க்றிச்சல்களின் சப்தம் கேட்டு; பிருகா துள்ளினாள். ஒரு ராக்ஷஸ லாரி பின்னால் நின்றது. வாயில் வந்தபடி வைதுகொண்டே 'ட்ரைவர்' அதினின்று குதித்து அவளிடம் ஓடிவந்தான். பிருகா வியப்புடன் அவனை நோக்கினாள். அச்சமற்ற அந்தப் பார்வையைக் கண்டதும் அவனுக்கே சிரிப்பு வந்துவிட்டது.

'என்ன பாப்பா தனியா நிக்கறே; உன்னொடு ஒத்தரும் இல்லையா?'

பிருகா தலையை ஆட்டினாள்.

'நானேதான் தனியா வந்தேன்.'

'நீ தனியா வரலாமா?'

'நான் ஓடிவந்துட்டேன்.'

அரே ரே ரே! இதென்ன தொல்லையாப் போச்சு; எங்கிருந்து வந்தே? உன் வீடு எங்கே?'

உலகத்தை தனக்குச் சொந்தமாக்கிச்கொண்ட ஒரு கை வீச்சில் பிருகா எங்கேயோ கையைக் காண்பித்தாள்.

'இப்படிப் போய் அப்படிப் போய் இப்படிப் போய் அப்படிப் போய் இப்படிப் போனால் அங்கே எங்காம் வரும். அங்கேகூட ஒரு பப்பர்மிட் கடை இருக்குமே! அப்பாகூட வாங்கித் தருவாளே!'

ட்ரைவர் திகைத்துப்போய் சுற்றும் முற்றும் பார்த்தான். அவன் லாரிக்குப் பின்னால் வண்டிகள் குவிய ஆரம்பித்து விட்டன. கோபமான ஊதல்கள் அவைகளினின்று கிளம்பின.

சட்டென அவளைத் தூக்கிக்கொண்டு லாரியில் ஏறி பக்கத்தில் வைத்துக் கொண்டான். வண்டி கிளம்பிற்று.

'என்ன பாப்பா, உன் வீட்டில் சாதம் போடறதுண்டா இல்லையா? கோழி இறக்கைமாதிரி இருக்கையே!'

பிருகாவுக்கு ஞாபகம் வந்தது. 'எனக்கு பசிக்கிறதே மாமா!'

'உனக்கு வயிற்றுக்குப் போட்டுவிட்டு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகலாம்-'

'நான் மாட்டேன். நேக்கு பயமாயிருக்கு'—பிருகா விசிக்க ஆரம்பித்தாள்.

'நல்லாயிருக்கே, வீட்டைவிட்டு ஓடிவரத் துணிச்சல் இருக்கு. சேப்புத் தலைப்பாவும் மீசையுந்தான் பயமிருக்கா. இல்லை, காற்றிலே பஞ்சு பறக்கறமாதிரி உன்னை இப்பவே உன்னிஷ்டப்படிக்கு விட்டுவிட வேணும் என்கிறையா? அப்புறம் என்மாதிரிதான் ஆகிவிடுவாய்.'

நீ எப்படி ஆகியிருக்கே மாமா?'

தனக்கே புரிந்த தன் ரகஸ்யத்தில் வாயைப் பொத்திக் கொண்டு அவன் சிரித்துக் கொண்டான்.

'உனக்குத் தெரிஞ்சுதான் ஆகணுமா? என் மாமியாரையும் பெண்டாட்டியையும் கேளு-இதோ வீடுகூட வந்து விட்டது. இறங்கலாம்.'

வாசல் திண்ணையில் காலை நீட்டிக்கொண்டு ஒரு பாட்டி உட்கார்ந்திருந்தாள். அம்மா படுக்கையெல்லாம் ஒண்ணு மேலே ஒண்ணாய் அடுக்கிட்டு, அதன்மேல் சிவப்பு போர்வை யால் மூடிடுவாளே, அதுமாதிரி பெருஸ்ஸா.

அவர்களைக் கண்டதும் காலை மடக்கிக்கொண்டாள்.

'யார் இது?'

ட்ரைவர் குல்லாயைப் பிசைந்துகொண்டு பாட்டியோடு பேச ஏனோ அவனுக்கு நாக்கு எழவில்லை.

'வழியிலே கண்டேன், இதுக்கு வழி தப்பிவிட்டது; வீட்டை விட்டு ஓடி வந்துடுத்தாம்.'

'இதென்னடிம்மா அக்ரமம்? இந்தக் காலத்துலே பிறக் கறப்போவே காலிலே சக்கரம்!'

பாட்டி கைகளைக் கொட்டி தன் கன்னங்களைத் தாங்கிக் கொண்டாள். 'இது யார், எங்கேயோ பார்த்த மூஞ்சியா நெஞ்சுலே இடர்றதே—சுந்தரீ ஏ சுந்தரீ!'

உள்ளேயிருந்து சுந்தரி வந்தாள். பிருகாவைப் பார்த்து ஆச்சரியத்தில் கைகளைக் குவித்துக் கொண்டாள்.

'யார் இந்தப் பொண்ணு? அம்மா, இதென்ன மன்னியை அப்படியே உரிச்சு வெச்சிருக்கே!'

பாட்டிக்குத் தூக்கிவாரிப்போட்டது. எழுந்து திண்ணையி லிருந்து கீழிறங்க முயன்றாள். ஆனால் நெஞ்சின் அவசரம் உடலுக்கு முடியவில்லை.

'நீ யாருடி குட்டி? குரு பொண்ணா?'

'எங்கப்பா பேர் குருமூர்த்தி-அம்மா பேர் சின்னா-நான் பிருகா. என் தம்பி தங்கப் பாப்பா—' பிருகா பாடம் ஒப்பித் தாள்.

பாட்டிக்குக் கண்கள் பெருகின. குழந்தையை வாரினாள். உலகத்தைத் தழுவும் அப்பெரும் அணைப்புள் பாட்டியின் உடல் மெத்தென்றது.

'ஏண்டி என் கண்ணே, உனக்கு எப்படி இங்கே வரத் தெரிஞ்சது? வழி தப்பினாலும் வேறெங்கேயும் போகாமல் இங்கே எப்படி வந்தே? ஆனால், வேறெங்கே போக முடியும்? ரத்தம் இழுக்காதா? ஐயோ வயிறு ஒரு படி உளுந்து அரைக்க

லாம்போல், குழிவிழுந்திருக்கே! வாடி கண்ணே சாதம் பிசைஞ்சு ஊட்டறேன்-'

'எனக்கு ஊட்ட வேண்டாம், நானாத்தான் சாப் பிடுவேன்.'

'இல்லேடி கண்ணு ஊட்றேண்டி, எனக்கு ஆசையா யிருக்குடி-உனக்கு ஊட்ற வயசிலே உன்னைவிட்டுப் பிரிஞ் சுட்டேண்டி '-பாட்டி குரல் நசுங்கிற்று.

ட்ரைவர் குல்லாயைப் பிசைந்துகொண்டு நின்றான். அவன் முகத்தில் அசடு வழிந்தது. பேச்சில் சகஜமாய்க் கலந்து கொள்ள ஏனோ அவனுக்கு நா எழவில்லை. பேந்தப் பேந்த விழித்துவிட்டு லாரியில் ஏறிக்கொண்டு போய் விட்டான்.

பாட்டி சிரிப்பில் உடல் குலுங்கையில், சிடுசிடுப்பில் சுந்தரிக்கு முகம் இறுகிற்று.

'உன் அப்பனுக்கு யாரையுமே குப்பைத் தொட்டியில் போட்டுப் பிரட்டித்தானே வழக்கம். அதான் அப்படிச் சொல்கிறான்.'

'சுந்தரி, பொறு பொறு, பெரியவாள் சண்டைக்கெல்லாம் குழந்தையை சாட்சிக்கிழுக்காதே, நியாயம் இல்லை.'

'நியாயமாம், நியாயம்? நியாயம் எங்கேயிருக்கு? வெச்சதே சட்டம், செய்றதேதானே நியாயமாயிருக்கு! ஆச்சே வருஷம் மூணு. இருக்கோமா செத்தோமா என்று ஒரு நடை, அதுகூட வேண்டாம், அரையணா அட்டையிலே ஒரு வரி! என்னை விடு. நான் தான் வாயாடி, ஜன்ம சத்துரு ஆயிட்டேனே. நீ பெத்த தாய்தானே! அவன் நன்னா படணும், நான் சொல்றேன். இப்போ தன் குழந்தையைப் பிரிஞ்சு படற வேதனையிலேதான் உன் மனசின் அவஸ்தை அவனுக்குத் தெரியணும்.'

'போடி அசடே, உனக்கு என் பிள்ளையை, நீ பிறந்தப் புறம், உனக்கு நினைவு வந்த பிறகுதான் தெரியும். எனக்கு என் குழந்தையை என் வயிற்றின் சூட்டிலிருந்தே அறிவேன். உன்னையும் அறிவேன். அவன் மனசை என்னைவிட நீ கண்டு

விட்டாயா? கழுத்தைப் பிடிச்சு நம்மைத் தள்ளினானா? நாமாத்தானே வந்துட்டோம்! நாம் மாத்திரம் அவனுக்குத் தணிஞ்சு போனோமா?'

சுந்தரி முகம் கூரிட்டது. 'நீ தணிஞ்சு போய்க்கோ, நான் ஏன் தணிஞ்சு போகணும்?'

'சுந்தரி அவன் உப்பைத்தின்னுட்டு அவனைக் கரிக்காதே, எண்ணம் கோணறப்போ, திருப்பி சரியா வெச்சுக்கோ. குரு நியாயவான், குரு நல்லவன்.'

'அது சரி, என்னிக்கும் உனக்கு உன் பிள்ளைதான் ஒசத்தி—'

'எது ஒசத்தி எது தாழ்த்தி, ரெண்டும் என் வயத்ததுகள், நீ ஒசத்தி இல்லியா? இருந்துதானே, நியாயமோ அநியாயமோ, உனக்கும் பரிஞ்சுண்டு, நான் என் பிள்ளையைப் பிரிஞ்சு வந்துவிட்டேன்.'

'இதோ பார் அம்மா, நீ சொல்லிக்காண்பிக்கவேண்டாம்; உன் பிள்ளை கிட்டே வேணும்னா போய்க்கோ.'

'போகத்தானே போகணும்! நாளுக்கும் என்பெண் வீட்டிலே நான் இருந்துகொண்டு இருக்கமுடியுமா? அதுதான் நியாயமா? இப்போ நீயேதான் போன்னு சொல்லிட்டையே! அப்புறம் என்ன?' கிழவி சிரித்தாள்;

'அம்மா என்னவோ பதட்டமா பேசிவிட்டேன்; மனசுலே வெச்சுக்காதே,'

'சரியாப் போச்சு, நீ பேசறதையெல்லாம் மனசுலே வெச்சுக்கறதுன்னு ஆரம்பிச்சால், அந்த சுமையிலே, பூமியிலே எப்பவே புதைஞ்சு போயிருக்கணும், உனக்கு கட்டினவன் வயணமாயில்லை என்று ஆதியிலிருந்தே செல்லம் கொடுத்துக் கொடுத்து, நீ பாதி ஆண் பிள்ளையாவே ஆயிட்டே.'

'யாராயிருந்தாலும் சரி, என்னால் அடிமை வாழ்வு நடத்த முடியாது. இதை என் புருஷனுக்கே நான் சொல்வேன்.'

'நன்னா சொல்லிக்கோயேன், எனக்கென்னவாம் இனி மேல்! உன் நாக்குலே விஷம் சிந்தறதால்தான், உன்

சொல்லே உனக்கு விஷமாகிறது, போயும் போயும் போனா லும் போறதுன்னு உன் அண்ணனை கேட்டையே, என்னத் தைப் பண்ணிப்பிட்டே நீ, நீ இப்போ மன்னியோடு குடித் தனம் பண்ணறையே அது மாதிரி என் ஆம்படையானோடு நான் வாழ உனக்கு சஹிக்கல்லேன்னு.'

'ஆமா கேட்டேன். இல்லேன்னு சொல்லவில்லையே!

'அதான், பாலை வார்த்த இடத்தில் விஷத்தைக் கக்கி னால், நல்லவேளையா குண்டாந்தடியை எடுத்துக்காமல், குடத்தில் பிடிச்சு விட்டுவிட்டான்.'

'சரிதான் அம்மா, என்னவோ லெக்சர் அடிக்கிறாய், என் புருஷனோடு வாழணும்னு எனக்கு இருக்காதா?'

பாட்டிக்கு கடுங்கோபம் வந்துவிட்டது.

'உன்னை அவன் வாழவேண்டாம்னு சொன்னானா? பொறு என்று சொன்னான். அதுவே உனக்குப் பொறுக்க வில்லை. இல்லை; நீங்கள் வாழ்ந்தது எங்களுக்குத் தெரி யாதா? இதுவரை உங்களை அஞ்சு குடித்தனம் வெச்சாச்சு. ஓரோரு சமயமும் அண்டாவிலிருந்து வெஞ்சனப் பெட்டி வரையில் எல்லாம் புதிசு. உன் புருஷன் தன் மனுஷாளோடும் ஒட்ட மாட்டான். நம்மோடும் ஒட்டமாட்டான். நூறு தொழில் தெரியும். ஒண்ணும் உருப்படியில்லை. நாலு காசு கையில் கண்டுவிட்டால் தலைகால் தெரியாது. மாடு மத்தி யான்னம் ஆடு அப்பவே, உன்னையும் சொல்லவேண்டாம். தாளிக்கறத்துக்கு, அஞ்சு விரலையும் குவிச்சுப் பொறுக்கிற கடுகை, உள்ளங்கையில் அள்ளிப் போட்டாகணும். ஆறுமாசம் குடித்தனம் என்கிற தடித்தனம். அப்புறம் சொம்பு தவலை மொதக்கொண்டு மார்வாடி கடை. அப்புறம் திடீர்னு ஆள் விலாஸமே கிடையாது. ராவோ பகலோ வேளையில்லா வேளையில், கதவிடிக்கிற சப்தம் கேட்டு, கதவைத் திறந்தால், நீ மாத்திரம் உடம்பில் சுற்றின புடவையோடு கையில் கண்ணாடி வளைகூட இல்லாமல், நிக்கறப்போ குரு வயிறு எப்படி கொதிச்சிருக்கும்னு நீ கண்டாயோ?' கிழவிக்கு மூச்சுத் திணறிற்று; முகம் சிவந்து வெடித்துவிடும் போல் உப்பிற்று.

இவா என்னவோ பேசிக்கிறாளே, எனக்கொண்ணும் புரியல்லையே—ஆனால் நான் வெள்ளை ரோஜா, தங்கப் பாப்பா சிவப்பு ரோஜான்னா இந்தப் பாட்டி என்ன ரோஜா?

'இப்போ ஒண்ணும் ரெண்டு வருஷமா அவர் அப்படி யில்லை!' என்று சுந்தரி முனகினாள்.

'அது சரி நீதான் மெச்சிக்கணும். இந்த மட்டுக்கும் லாரி டைவராய் இருக்கானேஎன்று; சுந்தரி உன் புருஷன் உனக்கு உசத்தி; நான் இல்லை யென்கவில்லை: ஆனால் எனக்குப் புளிச்சுப் போச்சு. 'அப்பப்பா கண்டெடுத்தேன்: அம்மம்மா காணாமல் போச்சே' என்று இன்னும் ஏத்தனை தடவை? ஏதோ இந்தத் தடவையும் உன் புருஷன் காணாமல் போகிறப்போ; ஆகாசமும் பூமியும் துணை என்று நீ நிக்கக் கூடாதுன்னு; உன்னை விட்டுக் கொடுக்காமல், உன்னோடு நானும் வந்தூட்டேனே ஒழிய எனக்கு நியாயம் தெரியாதா? உனக்கு கல்யாணமாகி அஞ்சு வருஷமாச்சு இன்னும் உனக்கு சீர் செய்து ஓயவில்லை. ஒரொரு சமயமும் உன் புருஷன், மளிகைக் கடை, விறகுத் தொட்டி, காப்பி ஹோட்டல், வெற்றிலை பாக்குக் கடை இன்னும் தில்லும் பில்லுமா என் பிள்ளை பேரைச் சொல்லி அங்கும் இங்குமாய் வாங்கி விட்டுப் போன கடனைத் தேடித் தேடி அடைச்சுதான் கடன் பட்டுவிட்டான். ஏதோ என் குழந்தை மானி என்றால், அதற்காக அவன் தலையெழுத்தா?'

சுந்தரி புன்னகை புரிந்தாள்.

'என்னவோ இன்னிக்கு உன் பேத்தியைக் கண்டதும் உனக்கு உன்பிள்ளை நினைப்பெடுத்துவிட்டது, அவன் கிட்டே இதேசாக்காய்ப் போனாலும் போயிடுவேன்னு சொல்லு.'

'போகத்தான் போறேன். என்னைக் கௌரவமா என் பிள்ளையிடம் சேர்க்கவத்திருக்கும் தெய்வந்தான் என்பேத்தி.'

'அம்மா நீ பெரிய சமயவாதி.'

'இல்லை நியாயவாதி என்று சொல்லு. சுந்தரி, நியாயம் பொது சொத்து, தனி சொத்து இல்லை. நியாயத்தின் தன்மை சமயத்தின் தன்மையைப் பொறுத்தது. ஒரு சமயத்தின் நியாயம் இன்னொரு சமயத்தின் நியாயமாயிருக்கணும்னு

அவசியமில்லை. அநியாயமாகவே இருக்கக்கூடும். இந்த உண்மையை அறிந்து சமயத்தோடு நியாயமாய் வளைந்து கொடுத்துப் போகத் தெரியாமல் பிறர்'நியாரைக் காரணம் சொல்லிக்கொண்டோ கறுவிக்கொண்டோ எண்ணத்தைத் திருத்திக் கொள்ளாதவர்கள் படும் கஷ்டம் தங்களுக்குத் தாங்களே ஏற்படுத்திக்கிற கஷ்டம்தான். அவர்கள் கஷ்டப் பட்டுக் கொண்டேயிருக்க வேண்டியதுதான். அதுவே அவரவர் எண்ணத்துக்குத் தக்கபடி அவர்களுக்கு ஏற்படும் நியாயம்கூட.'

'ஏதேது, அம்மா, உன் பிரசங்கத்துக்கு இங்கே ஒரு முழுங்கு பாலுக்குக்கூட வழியில்லையே என்ன செய்வேன்?'

'எனக்குப் பாலும் வேண்டாம், தயிரும் வேண்டாம். இந்த வயசில் நாங்கள் ஏங்குவதெல்லாம், எங்கள் வயிறு குளிரும்படி, எங்கள் பெண்டுபிள்ளைகளிடமிருந்து ஒரு அன்பான வார்த்தைக்குத்தான்.'

'அண்ணாவையும் மன்னியையும் கேட்டதாகச் சொல்லு.'

**வி**ளக்கேற்றும் வேளைக்கு, பிருகாவின் கையைப் பிடித்த படி நின்று வலது காலை முன் வைத்து வாசற்படி ஏறி வரும் அம்மாவைக் கண்டதும், குருவுக்கு தெய்வமே அவள் உருவத் தில் தன் குழந்தையைத் தன்னிடம் சேர்க்க வந்ததாய்த் தோன்றிற்று. அந்த நினைப்பில் பிருகாவைக்கூட மறந்தான்.

'அம்மா! அம்மா!!' அலறியபடி ஓடி வந்து அவள் காலடி யில் மடேரென விழுந்துவிட்டான்.

கிழவி மகனைத் தூக்கிவிட முயன்றாள். ஆனால், அவளால் சரியாய்க் குனிய முடியவில்லை. படகு மாதிரி சரீரம். அவள் முகம் ஆயிரம் நசுங்கல்கள் கண்டது.

என்னவோ ஏதோ என்று எதிர்க்குரல் கொடுத்துக் கொண்டே சின்னா உள்ளிருந்து ஓடி வந்தாள்.

ஆனால், குரு இன்னும் எழுந்திருக்கவில்லை. அம்மாவின் கால்மேல் பிடியையும் விடவில்லை. அவள் பாதங்களை, தன் கண்களினின்று இழியும் இதழ்களால் அர்ச்சித்துக் கொண் டிருந்தான்.

# 2. இதழ்கள்

ஜன்னலண்டை அவள் நின்றிருந்தாள். தோட்டத்தில் மாமரத்தின் உச்சாணிக் கிளையில் ஒரு இலைக் கொத்தின் நடுவில் முளைத்தாற்போல் ஒரு பட்சி உட்கார்ந்திருந்தது. அதையே பார்த்தபடி அவள் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

மாடியேறி வரும் பூட்ஸ் சப்தம் கேட்டது. இரண்டுபடி மூணுபடிக்கு ஒரு தாண்டல், பள்ளிவிட்ட பையன் மாதிரி. அவள் முகத்தில் லேசாய் முறுவல் ஒளிபடர்ந்தது. அறை வாசல் பக்கம் முகம் திரும்பு முன், கதவைத் தடாலென்று திறந்துகொண்டு அவள் கணவன் வாசற்படியில் வந்து நின்றான். பாதிக் கழற்றலில் கோட் தோள்மேல் தொங்கிற்று.

''என்ன இன்னிக்கு வாசற்படி பாரா இல்லையா? வழி மேல் விழி வைத்துக் காத்திருப்பாயே? நாதன் வரக் காணேனே, ஆ ஆ ஆ நாதன் வரக் காணேனே ஏ—ஏ—ஏ—''

அவள் காதைப் பொத்திக்கொண்டாள், மெய்யாகவே அவன் சாரீரம் கர்ண கடூரமாயிருந்தது.

''இத்தனை நாழி காத்துத்தான் கிடந்தேன். இப்போத் தான் மேலே வந்தேன். நீங்களும் வந்தேள்.''

அவள் கண்கள் அவனைப் பட்சமாய்ச் சந்தித்தன. அவன் தலையில் முன்மயிர் அடையாய்க் கலைந்து கண்ணைக் குத்திக் கொண்டு புருவத்தின் மேல் சரிந்தது. விழிகள் கறுப்புத் திராக்ஷை போல் பளபளத்தன. திரை தள்ளினாற் போன்ற சிரிப்பில் பற்கள் காதுக்குக் காது அணிவகுப்பில் பிரகாசிக்கை யில் முகத்தை அப்படியே அணைத்துக் கொள்ள வேணும் போல் தோன்றிற்று.

கோட்டை மூலையில் எறிந்துவிட்டுக் குட்டை நாற்காலி மேல் சரிந்தான். நீளம் நீளமாய்க் கால்களும் கைகளும் நாற்காலி கொள்ளாமல் வழிந்தன.

''அதான் என்னடா காணோமேன்னு பார்த்தேன். மறு படியும் மயக்கம் கியக்கம்னு ஏதாவது வந்துடுத்தோன்னு கிலி பிடிச்சுண்டுடுத்து, இப்போத்தானே ரெண்டு மாஸம் சற்று விடாத்தியா யிருக்கோம். சரி, சரி. கொண்டா கொண்டா—''

''என்னத்தை''

''பசி, பசி, டிபன் டிபன்! எப்படிப் பசிக்கிறது தெரியுமா? முகத்தையே பார்த்துண்டிருந்தால் பசியாறிடுமா? வசனமே உண்டே தெரியாதா? தாயா பிள்ளையா ஆனாலும் வாயும் வயிறும் தனி தான்னு! 'ஆப்டர் ஆல்' நாம் ஆம்படையான் பெண்டாட்டிதானே?''

''வெறும் ஆம்படையான் பெண்டாட்டி!''—சிறு கசப்பு எங்கோ அவள் நாக்கு அடியிலிருந்து ஒலித்தது. வாயில் நகை யிருந்தாலும் கண்களில் நகையில்லை. 'வெறும்' எனும் முதற் பதத்தை அனாவசியமாய்ச் சற்று அழுத்தினாற் போலிருந்தது.

''வெறும்னோ வெல்லம் போட்டோ ஆம்படையான் பெண்டாட்டியா நாலுபேர் நடுவிலே சுபமுகூர்த்தத்திலே, நிறைய செலவழிச்சுத் தாலிகட்டி, பத்து வருஷமா குடித்த னம் பண்ணியிருக்கோம். இதை இல்லை என்பான் யாரடா —யாரடா''.

''நீங்கள் பாடவேண்டாம். இன்னிக்குக்கூடப் பார்த் தேன்''

''எதை''

''நம் விவாக சுபமுகூர்த்தப் பத்திரிகையை, ஏதோ பொழுது போகல்லை. துணிப்பெட்டியை ஒழிச்சேன். பெட்டிக்கடிலே கிடந்தது.''

''இருந்ததா? ரொம்ப சந்தோஷம். இருந்துதோன்னோ? அப்படின்னா இனிமேல் நாம் டிபன் சாப்பிடலாம். என்ன பண்ணிருக்கே?''

கீழே கிடந்த கோட்டை எடுத்து ஆணியில் மாட்டினாள்· ''இன்னிக்கு ஒண்ணும் பண்ணல்லே'',

''—ம்—ம்—ம்—??''

தடுக்கிவிட்ட எழுதுகோல் போல் அவன் குரல் சட்டெனக் கோணிக்கொண்டு போயிற்று.

“ஒரு ரவை உப்புமாவுக்குக்கூட வழியில்லையா?”

“இல்லை”

அவன் முகம் விழுந்தது.

“ராஜீ! எனக்கு எப்படி பசிக்கிறது தெரியுமா? உன்னைக் கூடக் கடிச்சுத் தின்னுடுவேன். குழம்புஞ் சாதமாவது ஒரு உருண்டை உருட்டி, அதிலே ரெண்டு உருளைக் கிழங்குத் தானைப் பதிச்சு ஒரு தட்டுலே வெச்சுக் கொண்டாயேன். ராத்திரி சமையல் ஆகறவரைக்குமாவது தாங்கட்டும்”

“மத்தியான மிச்சம் மீதாரியெல்லாம் ஒழிச்சு வேலைக்காரிக்குப் போட்டுட்டேன். இன்னிக்கு ராச்சமையல் கிடையாது.”

“இதென்ன பெரிய தண்டனையாயிருக்கே! ஏன், சமையல்கார மாமி ஸ்ட்ரைக் பண்ணிட்டாரா?”

“இல்லை. அவளுக்கு நான் லீவு கொடுத்துட்டேன்”.

“இதென்ன சூழ்ச்சி?”

“சூழ்ச்சியொண்ணுமில்லே. பயத்தம் கஞ்சி போட்டிருக்கேன்—”

சற்று திகைத்துப்போய் அவளை ஏற இறங்கப் பார்த்தான். ஆனால் அவள் முகத்தில் துளி மாறுதல்கூட இல்லை. தலை குனிந்து, கொண்டைப் பூவைச் சரிப்படுத்திக் கொண்டாள்.

திடீரென அவள் செய்கையின் அர்த்தம் அவன் புருவங்களின்மேல் விடிந்தது. அந்த விடிவில் விளைந்த கோபம், ஆச்சரியம். துயரம் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரே சமயத்தில் முகத்தைத் தாக்குகையில், விழிகள் மங்கி மறுபடியும் கொழுந்து விட்டன. உள்ளங்கையால் நெற்றியில் அறைந்து கொண்டான்.

“ஆ! கடவுளே? கடவுளே?”—ஊசியில் கழுவேறிய புழு போல் உடல் நாற்காலியில் நெகிழ்ந்தது. அந்த வேதனை எவ்வளவு தூரம் நிஜம், கேலியென்று புரியவில்லை.

"அடக் கடவுளே! நான் என்ன செய்வேன்? ஏன், ஏன், ராஜீ மறுபடியும் மடிசஞ்சி மாமி ஆயிட்டையா? சோம வாரம், செவ்வாய்க்கிழமை, புதன்கிழமை, குருவாரம், சனி வாரம், ஞாயிற்றுக்கிழமை உப்பில்லாமே, கண்டபடி பட்டினி கிடந்து, வேளா வேளைக்குச் சாப்பிடாமல் உடம் பைக் கெடுத்துண்டுட்டு, அப்புறம் ஆளை ஆளாய்த் தேத்தற பாடு உன்பாடு என்பாடுன்னு வருஷம் ஒண்ணாச்சு. ராஜி, உனக்கு உன்மேல் இரக்கம் இல்லாட்டாப் போறது, என் மேலாவது கொஞ்சம் வையேன்!" கை கூப்பலில் விரல்கள் ஒன்றுடன் ஒன்று கோத்துக் கொண்டன.

அவள் முகம் கொஞ்சங்கூட மாறவில்லை. ஒரு தினுசான அசதியான, ஆனால் அழுத்தமான பொறுமையுடன் அவன் கைவிரல்களைப் பிரித்துவிட்டாள்.

"சரி கிளம்புங்கோ நேரமாச்சு—"

"எங்கே?"

"கோயிலுக்கு. இன்னிக்கு கிருத்திகை. கூட வெள்ளிக் கிழமையும் சேர்ந்திருக்கு, ரொம்ப விசேஷம். மஹா புண்ணி யம்."

"எனக்குப் புண்ணியம் வேண்டாம்."

"பயத்தம் கஞ்சி வேணுமா வேண்டாமா?"

சட்டென அவன் குதித்தெழுந்தான், "இந்தத் தடவை உனக்கு மண்டை வரைக்கும் ஏறிடுத்துன்னு நினைக்கிறேன். நீ வேணுமானால் போய்க்கோ. நான் ஹோட்டலுக்குப் போய் மூக்கைப்பிடிக்க இழுக்கப்போறேன். மனுஷனுக்கு வீட்டுக்கு வந்தால், வீடு வீடாயிருக்கணும். வீட்டையே கோவிலாக்கிக் கொண்டிருந்தால், பேசாமல் கோவிலிலேயே குடித்தனமிருக்கலாமே! வாடகையாவது மிச்சப்படும். வெளிப் பிரகாரத்தில் படுக்கையை விரிச்சுப் போட்டுட்டு வேளா வேளைக்குப் பிரசாதம் உண்டைக்கட்டி, பம்—பம் மஹாதேவ்—"

பூவின்மேல் பனித்துளி நிற்பதுபோல் அவள் விழிகளில் நிறைந்தன. அவன் கோபம் பொங்கிய வேகத்தில் கலைந்தது.

"நான் வேணும்னா கோவிலுக்கும் வந்துாடறேன், ஆனால், ராஜி நீ ஏன் இப்படிச் செய்கிறாய்?"

"நான் இன்னி முழுக்க உபவாஸம். நீங்கள் எனக்காக ஒரு நாளைக்கு ஒரு வேளை பட்டினியிருக்கக்கூடாதா?"

"நான் உன்னை உபவாசம் இருக்கச் சொல்லவில்லை. நீ என்ன எனக்குச் சாமான் மிச்சம் பிடித்து வைக்கறையா?"

அவள் பெருமூச்செறிந்தாள்.

உசிரில் உசிர், உசிர் இல்லையே!

"நம்பிக்கைதானே போற உசிருக்கும் உசிராயிருக்கு!—"

ஆனால் அவள் குரல் நம்பிக்கையற்று ஒலித்தது. விசனத் திரை லேசாய் அவள் மேல் மடி பிரிந்து விழுகையில் திடீரென அவனுக்கும் அவளுக்குமிடையில் தொலை தூரம் நேர்ந்து விட்டாற்போலிருந்தது. திடீரென்று இப்படிப் புகுந்துகொண்ட கண் மறைவற்ற பிரிவு பொறுக்க முடிய வில்லை.

"ராஜீ!—" அவளை எட்டித் தொடமுயன்றான். அவள் சட்டென ஒதுங்கிக் கொண்டாள்.

"என்மேல் படாதேங்கோ—நான் மடி—"

"வாட் நான்ஸென்ஸ்!"

"எனக்கும் இங்கிலீஷ் தெரியும்" அவள் குரல் தடித்தது. "உங்கள் வசை எல்லாம் கொஞ்ச நேரம் மூட்டை கட்டி வெச் சுட்டு கையை, காலை, வாயை அலம்பிண்டு கிளம்புங்கோ—"

அவன் மறுபடியும் எட்டினான்.

"நீங்கள் இப்போ என்னைத் தொட்டால், பலாத்காரம் பண்றேள்னுதான் சொல்லுவேன்—"

அவன் மொண மொணத்துக்கொண்டு கீழே சென்றான். ராஜி நெஞ்சு பஞ்சுதான். ஆனால் சில சமயங்களில் சுட்ட ரொட்டிமாதிரி மேலுக்கு இப்படிக் கடினமாய் ஏன் இருக் காளோ?

அவள் ஜன்னல் பக்கத்தில் போட்டிருந்த பெஞ்சியின் மேல் உட்கார்ந்தாள். அசதியாயிருந்தது. கண்கள் ஒரு முறை வானத்தின் நீலத்தைத் துடைத்தன. மாமரத்தின் உச்சாணிக் கொம்பில் இலைக்கொத்தின் நடுவில் முளைத்

திருந்த பட்சி எப்பவோ பறந்துவிட்டது. அவள் சிறு ஏமாற்றம் அடைந்தாள். பார்வை மரத்திலிருந்து தெரு மேல் தாழ்ந்தது. அப்போதுதான் ஒரு பால்காரன் ஒரு பசுவை ஓட்டிச் சென்றான். அப்பா, என்ன வளர்த்தி! என்ன வளர்த்தி!! எடுத்துப்போடும் ஒவ்வொரு அடிக்கும் கழுத்துச் சதங்கை ''ஜல் ஜல்''லெனத் தாளம் போட்டது. கன்றுக் குட்டி பின்னாலிருந்து பின்னங் கால்களுக்கிடையில் முகத்தை முட்டி, முட்டி, மடிக்காம்புகளை வாயில் பற்றிப்பற்றி ஊட்ட முயன்று ஓடிக்கொண்டிருந்தது. புடலம் பிஞ்சுபோல் தொப்புள் கொடி சுருண்டு நுனி ஆடியது.

சொம்பு மடி!

அவள் கைகள் மார்மேல் குவிந்து அழுந்தின. மேல் உதட்டைப் பற்கள் அழுத்திக்கொள்கையில் உதடு வெளுத்தது. ஜன்னல் கம்பிகளுக்குப் பின் அவள் இப்பொழுது உட்கார்ந் திருக்கையில், இவ்வுலகமே உடம்பே சிறைபோல் இருந்தது.

''ராஜீ! புறப்படறபோது சிடு சிடுன்னு இருந்ததே யொழிய, அப்புறம் குஷியாய்த்தானிருந்தது.''

''உங்களுக்குச் சந்தோஷம்னா எனக்குச் சந்தோஷம்—''

''ஆஹா! என்ன பதிவிரதா தர்மம்! ராஜி இன்னிக்குத் தான் கவனிச்சேன்; கொசுவக்கட்டு உனக்கு எவ்வளவு நன்னா அமைஞ்சிருக்குத் தெரியுமோ? நீ இருக்குற வாட்ட சாட்டம், உயரத்திற்கு பாங்கப் பதிய ஜோராயிருக்கு. அம்மனுக்கு அலங்காரம் பண்ணின மாதிரி—''

அவசரமாக அவன் உதடு மேல் அவள் விரல் பொத்தினாள்.

''அபசாரம்—அபசாரம்—அப்படி ஒப்பிட்டுப் பேசாதேங்கோ''—அவள் விரல்கள் அடியிலிருந்து அவன் உதடுகள் பிடிவாதமான பேச்சில் அசைந்தன.

''எங்கள் ஊர் அம்மன் உன் உயரம் இருப்பாள். தென்னஞ் சோலைக்கு நடுவே கோவில். உன் உயரம் இருப்பாள். அரக்குப் புடவையைக் கட்டி கண்ணாரமும் புல்லாக்கும் சாத்திவிட்டால்,—ஆஹா! சங்கிலியிலிருந்து ஆடும் அந்த

மங்கிய அகல் வெளிச்சத்துக்கும்—கர்ப்பக் கிரஹத்து இருட்டுக்கும் அம்பாளின் உதடே அசையற மாதிரியிருக்கும்!''

அவளுக்குப் பிடரி புல்லரித்தது.

‘‘ஏதேது, நீங்கள் நாஸ்திக சிகாமணியாச்சே. ஆனால் ‘லெக்சர்' அமர்க்களமாயிருக்கே!—''

அவனுக்குக் காதோரங்களில் கோபரத்தம் குறு குறுத்தது.

‘‘நீ என்னைக் கேலி பண்ணவேண்டியதில்லை, என்னுடைய நாஸ்திகத்தைப்பத்தி. ஏன்னா, உனக்கு ரொம்பத் தெரியிமோன்னோ?—''

‘‘இல்லை—இல்லை, சும்மா சீண்டினேன். இன்னிக்கு நாம் சண்டை போட வேண்டாம். கோவிலுக்குப் போயிட்டு வந்து வெள்ளிக்கிழமையு மதுவுமா சண்டை போட்டால், எனக்கு மனஸு ராமுழுக்கத் தொண தொணன்னு இருக்கும்.'

‘‘ரொம்ப சரி; நானும் சண்டை போடல்லை. சமத்தாயிருப்போம்—''

சிரித்துக்கொண்டே அவன் மார்மேல் கையை வைத்தாள்.

‘‘உஷ்—என்னைத் தொடாதே—நீ மடி—''

‘‘மடி இனிமேல் அம்மாடிதான். இனிமேல்தான் படுத்துக்கப்போறோமே. இன்னிக்கு உங்களுக்கு ரொம்பப் பசியோன்னோ?''

‘‘பரவாயில்லை. அதான் பாயஸம் குடிச்சாச்சே. அது கூட ரொம்ப நன்றாயிருந்தது. பால் மணம் தூக்கலாய் தித்திப்புத்தான் போறாது.''

‘‘அது பாயஸமில்லை கஞ்சி. சரி விளக்கை அணைச்சுடறேளா?''

மெத்தென இருள் அவர்களைச் சூழ்ந்தது. சற்று நேரம் இருவரும் மௌனமாயிருந்தனர். தலைக்குப் பின்னால் கைகளைக் கோத்துக்கொண்டு அவன் சாய்ந்திருந்தான். செந்நிலா மாமரத்தின் இலைக் கூட்டங்களுக்குப்பின் உதயமாகிக் கொண்டிருந்தது.

‘‘ராஜீ! தூங்கிட்டையா?''

"இல்லை, அதுகுள்ளேயுமா?"

"நான் யாரைப்பற்றி இப்போ நினைத்துக் கொண்டிருக் கிறேன் சொல்லு."

"தெரியாதே."

அவளுக்குத் தெரியும். ஆனால், தன் முழுப்பெயரை அவன் வாயில் கேட்பதில் ஒரு மகிழ்ச்சி.

"ராஜீவி"

"அப்படின்னா; நான் என் ராஜ்யத்தை நினைச்சுண்டிருந் தேன்."

இருவர் சிரிப்பும் தண்ணீரில் கூழாங்கல்லை எறிந்தாற் போல் 'சிலுக்'கெனக் கலந்தது. பல வர்ணங்களில் சர்க்கரைக் குழல்கள் ஒன்றுக்கொன்று கோத்துக்கொண்டு சுழித்தன. புஷ்பச் சரங்கள் ஊஞ்சலாடின. அவைகளின் இதழ்கள் பிரிந்து நெஞ்சு நினைவின்மேல் உதிர்ந்தன. ராஜம், ராஜீவி அவர்கள் இருவரின் பெயர்ப் பொருத்தம் அவர் களுக்குள் அலுக்காத ஒரு ரகஸ்ய விளையாட்டு. மாலைமேல் சுற்றிய ஜரிகை நூல்போல், ஒளி விட்டுவிட்டு மிளிர்ந்து இன்ப ரகஸ்யங்களைத் தன்னுள் தாங்கிய ஒரு அழகிய புதிர்.

ராஜம், ராஜீவி. அடிநாக்கில் எங்கோ தித்தித்தது;

ராஜம், ராஜீவி!

ராஜீவி ஒடிந்துவிழும் பூங்கொடி ரகத்தைச் சேர்ந்தவ ளல்ல. வாட்ட சாட்டமான உடலமைப்பு, பயமற்று, களங்கமற்று, யாரையும் தலை நிமிர்ந்து பார்க்கும் நேர்ப் பார்வை. இறுமாப்பற்ற ஒரு ஓதுக்கம்—அதுவே ஒரு கவர்ச்சி, அங்க அசைவுகளில் சிலை உயிர் பெற்றதுபோல் ராஜவழி. அதனாலேயே அவள் ராஜீவி.

ஆனால் அதற்காக வயிறுமா கல்லா யிருக்கவேண்டும்? வருஷங்கள் பத்து. டாக்டரிடம்கூட காண்பித்தாகிவிட்டது அவள் மனத் திருப்திக்காகத்தான்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. சிறுசுகள், அதற்குள்ளே உங்களுக்கு என்ன அவசரம்?" வென்று சிரித்துக்கொண்டே அவர் சிறு அதட்டல் அதட்டிவிட்டு, வாசல்வரை வந்து வழி விடுகையில்,அவளுக்குப் பின்னால் நின்றுகொண்டு அவனுக்குக்

கண் காட்டி உதட்டைப் பிதுக்கியது இப்பொழுது நெஞ்சை யடைத்துக்கொண்டு நினைவில் எழுந்தது.

இருவரும் ஒரே விஷயத்தைப்பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தனர். ஆனால், அவரவர் வழியில் அதனாலேயே ஒருவருக்கொருவர் பேச்சுத் தொடுக்க இருவருக்கும் பயம்.

பெருமூச் செறிந்து அவன் கட்டிலினின்றிழிந்து ஜன்ன லண்டை சென்றான்.

''ராஜி! ராஜீ!! இங்கே வாயேன்!''

''என்ன?''

ராஜியிடம் என்றுமே அவசரம் கிடையாது. சாவதான மாய் எழுந்து வந்து அவன் பக்கலில் நின்றாள்.

''கஜாம்பாள் மொக்கு கட்டிட்டாள்!''

''ஏதோ? ஏதோ?''

அவன் பரபரப்பு அவளையும் பிடித்துக்கொண்டது. அவன் கை சுட்டும் வழி அவளும் நோக்கினாள். சில்லென்று காத்து கத்திமுனை போல் முகத்தை வெட்டியது.

''கஜாம்பாள்'' அவர்களிடையே பிரத்யேக அர்த்தத் துடன் அடிபடும் கேலி வார்த்தை.

யாரோ என்னத்தையோ சொன்னார்கள் என்று அந்த செடிக் கன்றை பெரிய விலை கொடுத்து வாங்கிவந்து தோட்டத்தில் வாகான இடம் பார்த்து, வேளை பார்த்து, சகுனம் பார்த்துத் தன் கையாலேயே நட்டான். செடியும் ஆரம்ப ஜோரில் நன்றாக மதமதவென்று வளர்ந்து, திடீ ரென்று ஒரு காரணமும் தெரியாமல், வளர்ச்சி நின்று விட்டது, என்ன எருவிட்டும், எப்படிப் பராமரித்தும் பயனில்லை. அதற்குக் கஜாம்பாள் என்று பெயர் வைத்தாகி விட்டது.

''இன்னிக்குக் கஜாம்பாள் பூக் கட்டினாளோ?'' என்று கொஞ்ச நாளைக்கு ஆபீஸிலிருந்து வருகையிலேயே முதல் கேள்வியாயிருந்தது. ''இல்லையே, இல்லையே!'' என்ற பதிலைக் கேட்டுக்கேட்டுப் புளித்துப்போய், பிறகு அந்தக் கேள்வியும் நாளடைவில் பேச்சில் மறந்து செடியும் நினைவில் மறைந்துவிட்டது.

ஆனால் இன்று காம்பவுண்டுச் சுவரோரமாய் நிலவொளி யில் ஒரு கை முஷ்டியளவுக்கு ஒரு குண்டு மொக்கு தலையை ஆட்டிக் கொண்டிருந்தது. இருவரும் அவரவர் ஆச்சர்யத்தில் ஆழ்ந்தபடி அதையே பார்த்துக் கொண்டிருக்கையில் சின்னக் குழந்தைகள்போல், அவர்கள் தலைகள் இடித்தன.

''அம்மா! அம்மா!!''

நேர் கீழிருந்து பரிதாபமாய் ஒரு குரல் உயரே மிதந்து வந்தது.

''யாரது?''

வாசலுக்கெதிரே ஒரு உருவம் நின்றுகொண்டிருந்தது.

''ராஜீ இது யார்? எப்படி உள்ளே வந்தா?''

''அடாடா! நான் கேட்டைப் பூட்ட மறந்துட்டேன்!''

''அம்மா பசிக்குது—''

அவனை அறியாமலே சிரிப்பு வந்து விட்டது. ''இன் னிக்கு உனக்கு மாத்திரமா பசி?''

''அம்மா, குளிர் எடுக்குது. குழந்தையைத் தாங்கிண்டு நிக்கறேன்—''

அவன் ஏதோ சொல்ல வாயெடுத்தான்; அவன் வாயைக் கையால் பொத்தி அப்படியே அடக்கிவிட்டு ராஜி கிடுகிடு வெனக் கீழே இறங்கிப் போனாள். இருட்டில் அவள் கால் மெட்டி 'ணக் ணக்' கென ஒலித்தது.

வெள்ளத்தில் நீந்தும் கிருமிகள் போலும் சம்பந்தா சம்பந்தமில்லாத எண்ணத் துணுக்குகள் இமைத் திரையில் சுழன்று நீந்தின.

''கஜாம்பாள் மொக்குக் கட்டிவிட்டாள். இன்று பஸ்ஸில் வெகு அழகாய் அடுக்கிய புஷ்பச்சரம் ஒன்று பார்த்தேன்; அந்தக் கொண்டை போட்டுக்சொள்ள ரொம்ப நாழியாகி யிருக்கும், எல்லாமே சொந்தக் கூந்தலா யிருக்குமா என்ன? நிச்சயமாய்ச் சவுரி சேர்ந்திருக்கிறது. இல்லாவிட்டால் நான் காதை யறுத்துக்கிறேன். ஏன் அவளையே கேட்டுட்டால்' போறது. அவளும் பேசத் தயாராயிருக்கிறாள். எனக்கு நிச்சய மாய்த் தெரியும். இல்லாவிட்டால் ஒரு நாளைப் பார்த்தாப்

போல் இந்த ஒரு வாரமா பஸ்ஸில் அத்தனை இடம் இருக்கையில் என்னண்டை ஏன் வந்து உட்காரணும்? முழியை வேறு உருட்டு உருட்டுன்னு உருட்டறதைப் பாரு, விழி அவளுக்கு அழகுதான்.

கையிலே புஸ்தகக் கட்டையும் 'டிபன் பாக்'ஸையும் பார்த்தால் வாத்தியாரம்மாளாயிருப்பான்னு நிவனக்கிறேன். காலம் எப்படி ஆயிடுத்து பாரேன். கலியாணமாகாத குறையினால் அவளும் நமக்குப் போட்டியா வயிற்றுப் பிழைப்புச் சண்டையில் சரிசமனா இறங்க வேண்டியதா இருக்கு. கலியாண மாகாட்டா அது ஒரு குறை, கலியாணமானால் அது இன்னொரு குறை. ஆனால் அவளுக்குக் கலியாணமாகி யிருக்கிறதென்று நினைக்கிறேன். கழுத்திலே மஞ்சள் கயிறு தொங்கறது. ஆனால் நோம்புச்சரடாயும் இருக்கலாம். ராஜியை ஒத்தரும் 'பீட்'பண்ண முடியாது, அவள் பட்டினி கிடக்கிறதோடல்லாமல், பிறத்தியாரையும் பட்டினி போட லாமோன்னோ? வயிறு நிரம்பாவிட்டாலும் காய்ந்த வயிறு நனையுமோன்னோ? என்ன விரதமோ, என்ன ஆசாரமோ' தெய்வ பக்தியோ! மனுஷத் தன்மையில்லாத தெய்வத் தன்மை எனக்கு வேண்டாம்.

இந்த ராஜி வெறும் அசடு, தெய்வத்தையே நம்பிண் டிருக்கு, புத்து வருஷமாயும் புத்தி வல்லே. தெய்வத்தின் வழிக்கு நாம் போகாமல் இருந்தால் அதுவும் நம் வழிக்கு வராமல் அவரவர் வழியில் அவரவர் நிம்மதியா ரோட்டு 'பிராக்'ஆகாமல் லோக காரியம் நடந்துகொண்டேயிருக்கும்.

இந்த உண்மையை அசட்டு ராஜி என்றைக்குத் தெரிஞ் சுக்கப் போறாள்? ராஜி அசடு இல்லாமல் என்ன சமத்தா! இருந்தாலும் என் ராஜி, எல்லாமே அதிதான் ராஜிக்கு.

"யாரோ பசி குளிர் குழந்தைன்னா இந்த வேளைக்கு இந்தப் பித்துக்கொள்ளியைத் தவிர யார் கீழே இறங்குவா? பாரேன் போனாள், போனாள் இன்னும் திரும்பி வரவில்லை. இவளைத் தேடிண்டு நான் கீழே போறதா என்ன தெரி யல்லையே; இப்படி ராக் கூத்தடிச்சா என்ன பண்றது? அடே யப்பா என்ன பசி பசிக்கிறது!"

யோசனை இந்தக் கட்டத்தை அடைந்த சமயம் ராஜியும் மேலே வந்து போர்வையை இழுத்துப் போர்த்துக்கொண் டாள். அவள் சத்தம் போடாவிட்டாலும் கட்டிலின் 'ஸ்ப்ரிங்கு'கள் கிறீச்சிட்டன.

''ஒன்றும் இல்லைன்னு சொல்லி அனுப்பிச்சுட்டு வர இவ் வளவு நாழியா?''

''அனுப்பறதா? குழந்தையும், கையுமா இந்தக் குளிரி லேயா? ஒரே பச்சை மண், பிறந்து இன்னும் ஒரு வாரம் ஆகி யிருக்காது.''

''சம்பந்தியம்மாளைக் கூப்பிட்டு உபசாரம் பண்ணினையா?''

''ரேழியில் படுக்க வெச்சிருக்கே, ரெண்டு கோணியைக் கொடுத்து, ஒரே பரிதாபக் கதை''.

''சரி சரி; தூங்குவதற்குநேரமாயிடுத்துன்னு நான் நினைக் கிறேன். நாளைக்கு ஆபீஸுக்குப் போகணும்.''

அவன் சொல்வதை அவள் காதில் வாங்கிக் கொள்ள வில்லை.

''பார்த்தால் சிறுசாயிருக்காள். ஆனால் அவளுக்கு ஏற் கெனவே மூணுகுழந்தைகள் இருக்கலாம். மூணும்பெண்ணாம். நாலாவதும் ஏன் பெண்ணாய்ப் பெத்தேன்னு புருஷன்காரன் வீட்டைவிட்டு விரட்டிட்டானாம். லோகத்திலே இது மாதிரி யும் மனுஷாள் இருக்கா, பாருங்கோ—''

''ஏன்; என்மாதிரி இருக்கிறபோது அவன் மாதிரி இருக்கப் படாதா?''

''அவளும் உங்கள் மாதிரிதான் பேசுகிறான். 'அவங்க மேலே கஸ்டம் பண்ணிக்கறத்துலே என்னம்மா இருக்குது? வயித்துப் புளைப்பு அவ்வளவு கஸ்டமா இருக்குது. ரொம்ப கஸ்ட ஜீவனம்மா!—''

''சரி என்னைக் கொஞ்சம் தூங்க விடறையா?''

சொன்னானேயொழியத் தூக்கம்வரவில்லை. காலிவயிறு பழக்கமில்லாததால் தானோ என்னவோ வெகு நாழிபுரண்டு விட்டுப் பிறகு கற்றுக் கண்ணயர்ந்தான். அரை நினைவும்

கால் நினைவுமாய் மனம் நிம்மதியற்ற உறக்கத்தில் நழுவுகையில், நடுநிசியின் அரவடக்கத்தில் உலகமே தன் நெஞ்சில் கையை வைத்துக்கொண்டு ஏதோ ஒரு மகத்தான நேருதலை எதிர்பார்த்தபடி அதன்எல்லைக்கோட்டின்மேல் கட்டைவிரல் நுனிமேல் நின்று எட்டிப் பார்த்துக் காத்திருந்தாற் போல் தோன்றிற்று.

அப்பொழுது காம்பவுண்டுச் சுவரோரத்தில் ஆடிக்கொண்டிருந்த மொக்கு அரை நொடியில் அசாத்தியமாய்ப் பெரிதாகி, மனமில்லாது வெளிப்படும் ரகசியம் போல், இதழ்கள் ஒவ்வொன்றாய் அவிழ்ந்து பிரிந்து படிப்படியாய்த் திறந்தன. அதனின்று ஒரு உருவம் வெளிப்பட்டது.

நடு நிசியின் நிலவொளியிலிருந்து ஒழுகும் பால் வெள்ளத்தில் இதழ்களின் படிகளினின்று கால்மேல் கால் வைத்து அவள் ஸ்நானத்திற்குச் கீழிறங்குகையில், அவள் பிறவியின் கன்னித் தூய்மையே அவள் மானங்களைக் காக்கும் கவசமாய் அவளைச் சூழ்ந்தது. சிறுத்தை சோம்பல் முறித்தாற் போல் கைகளும் கால்களும் உடலும் குளிப்பில் அசைகையில் ஆச்சரியமான அழகுகளைச் சிந்திக்கொண்டு அந்தரத்தில் வளைகோடுகள் நெளிந்தன. தோள்களும் முதுகும்அடிவயிறும் தொடைகளும் வழுவழுத்து மின்னின; சிரித்த முகம் அவன் பக்கம் திரும்பிற்று. அவன் உடல் மயிர்க் கூச்செறிந்தது.

"ராஜி!—"

கீழிருந்து அவள் குரல் அவன் கனவைக் கத்தரித்து வெட்டிற்று. திடுக்கென விழித்துக்கொண்டான். ஜன்னலுக்கு வெளியே வானம் நன்கு வெளுத்து விட்டது. கண்ணைக் கசக்கிக் கொண்டே கீழிறங்கிச் சென்றான். கண்கள் எரிந்தன! ராஜி கைகளைக் கன்னத்தின் மேல் வைத்து நின்றாள். ஆச்சரியத்திலும் கோபத்திலும் அவள் கண்கள் பெரிதாகியிருந்தன. விழிகள் சுழன்றன.

"என்ன ராஜி?"

"கொடியில் உலர்த்தியிருந்த புடவையைக் காணோம். பாயஸம் பண்ணிட்டு முத்தத்தில் தேய்க்கப் போட்டிருந்

தேன், கிழங்கு மாதிரி பால் உருளி. அதைக் காணோம்! வாசல் கதவை சப்பளிக்கத் திறந்து போட்டிருக்கு! நான் என்ன பண்ணுவேன்?''

''நேற்று ராத்திரி விருந்தாளி எங்கே?''

''அவளையும் காணோம்!—''

''அதான் கேட்டேன்; எனக்குத் தெரியுமே! சம்பந்தியைக் கூப்பிட்டு உபசாரம் பண்ணினே, அவள் தன் சீரையெடுத்துண்டு போயிட்டா! நீயா கொடுக்கல்லே.''

''அந்தப் புடவையை நான் ஒரு தடவைதான் கட்டிண்டேன்—'' அவளுக்குக் கோபக் கண்ணீர் தளும்பிற்று.

''நான் எதுக்கு இருக்கேன்? கெட்டுப் போனதையெல்லாம் இட்டு நிரப்பத்தானே! இன்னும் சம்பந்தியம்மா எது மேலே கை வைச்சிருக்கா பார்—''

''இருங்கோ!'' ராஜி சட்டென அவனைக் கையமர்த்தினாள். ரேழியின் கதவு மூலையிலிருந்து பூனைக்குட்டி கத்துவதுபோல் முனகல்கள் கிளம்பின. அந்தச் சப்தங்கள் அவனுள் தொய்ந்ததும், அந்த அர்த்தோயத்தில் அவன் நெற்றி மேல் செவ்வொளி வீசிற்று. பொட்டு நரம்புகள் வெடித்துவிடுவன போல் புடைத்தெழுந்தன. இரண்டே தாண்டலில் ரேழியை அடைந்தான். அதற்குள் குழந்தை பெருங் குரல் பாய்ச்சி அழ ஆரம்பித்துவிட்டது.

''ராஜி! சம்பந்தியம்மாளைக் கோவிச்சுக்காதே. எதிர் சீர் பண்ணிட்டுத்தான் போயிருக்கா.''

அவள் சாவதானமாய் அவள் பின்னால் வந்து நின்றாள். திகைப் பூண்டு மிதித்தவளாய்ப் பார்வை குழந்தை மேலேயே வெறித்துவிட்டது. கைகளையும் கால்களையும் உதைத்துக் கொண்டு பிடாரிக் கத்தலாய் அது அழுதது. பூவின் நடுத் தண்டு போல் செவ்வாயில் தளிர் நாக்கு நடுங்கிற்று.

ராஜி குனிந்து குழந்தையைத் தொட்டாள். விரலடியில் சதை அழுந்தியது. ராஜி அப்படியே குழந்தையை வாரிக் கொண்டாள். அவள் மார்பின் குமிழ்கள் திடீரெனப் பொங்கினாற்போல் அவனுக்குத் தோன்றிற்று.

அவள் கண்களிலிருந்து பிரவாகம் ஓடியது, அவனுக்கு நெஞ்சை அடைத்தது. அவள் கன்னத்தை விரல் நுனியால் தொட்டான். கண்ணீர் சில்லென்றது.

கம்மென்று அபூர்வமானதோர் மணம் காற்று வாக்கில் மிதந்து வந்து அவர்கள் மேல் மோதியது.

'ராஜீ! தோ பார்!''

அமானுஷ்யமான அழகுடன், ஒரு பெரிய பூக்கிண்ணம் காம்பவுண்டுச் சுவரோரத்திலிருந்து அவர்களைப் பார்த்துத் தலையை ஆட்டி ஆட்டிச் சிரித்துக் கொண்டிருந்தது.

# 3. இதழ்கள்

"அம்மா, நீ எப்படி இருப்பாய்?"

"எப்படி இருப்பேன் என்றால்? எல்லாம் அம்மாவாய்த் தான் இருப்பேன்!"

அவள் சமையலறையில் அடுப்பை ஊதிக்கொண்டிருந்தாள். புகை எண்ணைக் கரித்தது. அவன் கூடத்தில் ஊஞ்சலில் உட்கார்ந்து காலை ஆட்டிக் கொண்டிருந்தான்.

"இல்லை அம்மா;பார்க்க நீ எப்படி இருப்பாய்?" அடுப்பி லிருந்து சட்டென்று அவள் முகம் நிமிர்ந்தது. கொள்ளிக் கட்டையிலிருந்து தணல்கள் உதிர்ந்தன. அவள் வயிற்றில் பொறி கொதித்தது. நேரே அவனிடம் வந்து அவனை அணைத்துக் கொண்டாள்; "ஏன் அப்படிக் கேட்கிறாய்?"

"இல்லை, நேற்று ராத்திரி அப்பா உன்னிடம் சொன் னாரே,'அஞ்சனா, இன்று மிகவும் அழகாய்இருக்கிறாய்' என்று நான் தூங்கிப் போய்விட்டேன் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தீர்களோ என்னவோ?"

அவளுக்குக் கன்னங்கள் குறுகுறுத்தன. அவனைத் தன் அருகே இழுத்து அவன் கழுத்து வளைவில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

"அம்மா, அழகாக இருக்கிறதென்றால் என்ன? எல்லாரும் அழகாக இருக்கிறார்களோ? நான் அழகாக இருக் கிறேனோ?"

அவன் பிடரியில் இரு நெருப்புத் துளிகள் 'சுரீ'லெனச் சுட்டுப் பொரிந்து நீர்த்தன.

"அம்மா, ஏன் அழுகிறாய்? அம்மா! அம்மா!" பையன் பதறிப் போனான்.

"இல்லையடா கண்ணா!" மூக்கை உறிஞ்சினாள்.

"இல்லை அம்மா, நீ அழுகிறாய். அழாதே அம்மா."

அவன் சொல்லச் சொல்லக் கண்ணீர் புரண்டது. அவன் மேல் விழாதபடி தடுத்து, வழித்து உதறினாள்.

''இல்லை அடா கண்ணா; குழம்புக்கு வெங்காயம் நறுக்கி னேன் அல்லவா? அதுதான் கண்ணாலும் மூக்காலும் கொட்டு கிறது. இரு, வந்துவிட்டேன், இதோ ஒரு நிமிஷம்!''

பின் கட்டில் இருந்த குழாயடிக்கு அவள் போய் இன்னும் சேரவில்லை.

''அம்மா! அம்மா!''

''ஏண்டா கண்ணா;'' அவளுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது. என்னவோ? ஏதோ? உடல் குலுங்க ஓடி வந்தாள்.

அவன் மூக்கைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருந் தான்; அவள் மூக்கிலும் நெடி ஏறுகையில்தான் புரிந்தது. 'ஐயையோ?'' சமையலறையுள் ஓடினாள். லேசாய் மூச்சுத் திணறியது. இப்போதே கொஞ்சம் அப்படித்தான். அடுப்பி லிருந்து உருளியைக் கீழிறக்குகையில் முகத்தில் ஆவியடித்து விட்டது. பாத்திரத்தை 'ணக்'கென்று கீழே வைத்தாள். விரல்களைச் சுட்டு விட்டது.

''அம்மா!''

''இரு சற்றே சும்மா; சவலைக் குழந்தை மாதிரி சும்மா அம்மா அம்மா என்று அடித்துக் கொண்டு!''

அவளுக்கு எரிச்சலாக வந்தது. 'வெள்ளிக்கிழமையும் அதுவுமாய், அச்சானியமாக, போதும் போதாததற்கு இதுவும் மனசைச் சஞ்சலப் படுத்துகிற மாதிரி ஏதாவது கேட்டுக் கொண்டு—;

'ஐயோ அம்மா! கண்ணைத் திகுதிகுவென்று எரிகிறதே, சதை வழன்ற மாதிரி. நேற்றுத் தானே அழகாக இருக்கிறாய் என்று சொன்னார்? இதென்ன, கொண்டவன் கண்கூட ஆகாதா என்ன? அவசரமாக வெளியே வந்து கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். 'ஐயோ! பார்க்கச் சகிக்கவில்லை. அழுகையில் கண் மையெல்லாம் கன்னத்திலே கரைந்து ஓடிக் காய்ந்து போய், முகத்திலே கலம் அழுக்கு ஏறிக் கிடக்கிறது. விழி மாத்திரம் முகத்தில் பாதிக்குமேல் அடைத்துக் கொண்டு

முழி முழியென்று முழிக்கிறதைப் பார். மறுபடியும் முகத்தை அலம்பி அழகுபடுத்திக் கொள்ள வேண்டுமென்று அலுத்து வருகிறதடி, அம்மா! இறக்கி எத்தனை நாழிகையாயிற்று? இன்னும் நாற்றம் மூக்கைப் பொசுக்குகிறது, வாசலில் போகிறவர்களுக்கெல்லாம், நான் பொங்கி விட்டேன், நான் பொங்கிவிட்டேன்' என்று தம்பட்டம் அடித்துக் கொண்டு அவர் இப்போது வந்தால் நாக்கைப் பிடுங்கிக் கொள்கிற கிண்டலாய் ஏதாவது சொல்வார், அதனால் என்ன பரவா யில்லை! இந்த உலகத்திலே மூக்கு ஒழுகாத குழந்தையும், சாதத்தைக் குழைக்காத பெண்பிள்ளையும், பால் பொங்காத வீடும் இல்லவே இல்லை. இது பெரியவர்களிலிருந்து சின்ன வர்கள் வரை, மாமியாரிலிருந்து மாட்டுப் பெண்வரை மறுக்க முடியாத உண்மை!' என்பார். இருந்தாலும் நாம் என்னவோ மாமிசம் தின்னாதவர்கள் என்று பெருமை அடித்துக் கொள்கிறோமே; பால் சாப்பிடலாமோ? அது மாத்திரம் என்ன, பசுவின் ரத்தந்தானே? இல்லாவிட்டால் அப்படித் தீய்ந்த வாசனை அதற்கு எப்படி வரும்? பாலைப் பற்றி இப்படி நினைத்தால் இப்போதே 'உவ்வே' என்கிறது. எப்படி இருந்தால் என்ன? பிடிக்கிறதோ, பிடிக்கவில்லையோ. இனிமேல் நித்தம் குடித்தாக வேண்டும்; கால் படியை ஆழாக்காய்ச் சுண்டக் காய்ச்சிக் குங்குமப்பூவை அரைத்துப் போட்டு, கற்கண்டைப் பொடித்துப் போட்டு...அப்போது தான்—''

அப்பொழுதுதான் அவளுக்கு அவள் மகன் நினைவு திரும்பவும் வந்தது. கண்ணாடியிலிருந்து திரும்பினாள். அவன் ஊஞ்சலில் மல்லாந்து படுத்திருந்தான். முகம் முற்றத்தின் மேல் கவிந்த ஆகாயத்தின் பக்கம் திரும்பிச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது.

அம்மாதிரியான சமயங்களில் அவனைப் பார்க்க அவளுக்கு அச்சமாக இருந்தது. அந்த முகத்தில் வயசின் ஓட்டம் எங்கோ தடைப்பட்டு, உள்ளும் புறமும் அற்று, அசைவிலாது தெளிந்து நின்றது. தன் ஆழத்துள் ஜலம் நலுங்கியது போல்

புன்னகை முகத்தில் இளகுகையில் தனக்குத் தானே அது அநுபவித்துக் கொள்ளும் ரகசியந்தான் என்ன? ஜலத்தில் முகத்தின் நிழல் தெரிவது போல, அவன் முகத்தில் அவள் அகத்தைக் கண்டாள். இந்தக் கண்ணாடியில் எதையும் ஒளிக்க முடியாது, கீழிமைச் சதை நிழலோடு பின்னிய வருட ரேகை, மோவாய்க் குழியில் கொசுவிலும் பாதியாய் வருடக் கணக்கான பூச்சுக்களுக்கு அடியில் புதைந்து கிடந்த ஒரு சிறு மறு. உதட்டோரங்களில் சதையோடு இழைத்த பூனை மயிர்க் கால்கள் இவற்றில் எதையும் ஒளிக்க முடியாது. தன்னையும் பிறரையும் ஏமாற்றிக் கொள்ளும் கறுப்பும் வெள்ளையு மான ஏமாற்றங்கள், இவன்எதிரில் அத்தனையும் எவ்வளவு ஏமாற்றங்களாய் அவற்றின் சதைகளை உரித்துக் கொண்டு தம் தம் சுய மேனியில் நின்றன. வயசு, வயசுக்கேற்ற முதுமை, முதுமைக்கேற்ற நைவு, நைவுக்கேற்ற அழிவு, இந்த நியதியின் அவசியம், அதன் இதவு புரிந்தும் புரியாததுமாய் எண்ண எழுச்சிகள் அவள் மகன் நெஞ்சோட்டத்தில் புரண்டு அடித்துக் கொண்டு வருகையில் அவற்றின் அடிவயிற்றின் ஒளிகளில் உட்கணங்கள் கூசின.

அவள் ஒன்றும் புத்திக் கூர்மைக்குப் பேர் எடுத்தவள் அல்ல. அப்பா அடிக்கடி சொல்வார்: "அஞ்சனாவும் சரி சரி, ஒன்றும் வேண்டாம். நன்றாய்க் கரி பிடித்த வாணாய் ஒன்று அவளிடம் போட்டுவிடு, இன்று முழுக்க அவள் பாட்டுக்கு ஆனந்தமாய்த் தேய்த்துக் கொண்டிருப்பாள்," ஆனால் இவன் எதிரில் அவளுக்கு இதுவரை பழக்கம் இல்லாத எண்ணங்கள், அவற்றின் வேகத்தில் தாமே அமைத்துக் கொண்டே பழக்க மில்லாத பாஷையில் வெளிப்படுகையில் அவளுக்கு அவற்றைப் பிடிக்கவில்லை; பயமாக இருந்தது.

அவள் ஊஞ்சலில் படுத்திருந்த அந்த நிலையில் நிராதரவைக் காண்கையில் தாங்க முடியாத தாபம் அவளைத் திடீரென்று கவ்விற்று. வந்து அவனருகே அமர்ந்து செல்ல மாய் மூக்கை அவன் கன்னத்தில் தேய்த்தாள்.

"தூங்குகிறாயாடா, கண்ணா?" அவள் உதடுகள் அவன் கண்களை ஒற்றின. பேச்சு மூச்சோடு மூச்சாய் ஒடுங்கிற்று."

"இல்லை, யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறேன்."

"ஓஹோ, யோசனை? அதென்னடா அப்படி ஒரு யோசனை?"

"அம்மா, தூங்குகிறதென்றால் என்ன, விழிப்பு என்றால் என்ன?"

"தூங்குகிறதென்றால், தூங்குகிற தென்றால்—" அவள் விரல்கள் இதழ்களாய்க் குவிந்து மலர்ந்து தவித்தன. "தூங்குகிறதென்றால் கண்ணை மூடிக் கொண்டு..."

"இல்லை!" அவன் எழுந்து உட்கார்ந்தான்.

"நானுந்தான் கண்ணை மூடிக் கொண்டே இருக்கிறேன்; அப்படி என்றால் இப்போது தூங்கிக் கொண்டே இருக் கிறேனா?"

"கண்ணா! கண்ணா!" அவள் பதறிப் போனாள்; விழியோரங்கள் பிடுங்கிக் கொண்டு பெருக்கெடுத்தன.

அந்த நிஜ வித்தியாசம் என்ன?

"ராத்திரி—பகல்..."

'கடன்காரன்! இவன் எதிரில் வார்த்தைகள் வர மாட்டேன் என்கின்றன. வந்தாலோ புரியாத பாஷை! இன்று ஏன் இப்படி என்னை வதைக்கிறான்? அம்மா! மூளை குழம்பு கிறதே—'

"அம்மா, அம்மா! நீ இப்போது தூங்கிப் போய் விட்டாயா?"

"இல்லை!"

"அம்மா, தூங்குகிறதென்றால் என்ன? விழித்துக்கொண் டிருக்கிறது என்றால் என்ன?"

"தெரியாது!"

"ராத்திரி என்றால் என்ன? பகல் என்றால் என்ன?"

"தெரியாது!"

"கண்ணை மூடிக் கொண்டிருக்கிறதென்றால் என்ன? திறந்து கொண்டிருக்கிறதென்றால் என்ன?"

"தெரியாது." அவள் குரல் மிகவும் பணிவில் தாழ்ந்தது.

"உனக்குத் தெரியாதென்றால் யாருக்குத் தெரியும்? அப்பாவுக்குத் தெரியுமோ?"

"உன்னுடைய கேள்விகளுக்கு அப்பாவால் கூடப் பதில் சொல்ல முடியுமோ, முடியாதோ! அப்படியாவது இப்போது உனக்குத் தெரிந்து என்ன ஆகவேணும்?"

"எனக்குத் தெரியவேணும்; தெரியவேணும்?"

ஆர்மோனியப்பெட்டியில் ஒற்றைப் பல்லை அமுக்கினாற் போல அவன் குரலில் அவசரமும் கவலையும் பிடிவாதமும் ஒலித்தன.

"ஏன்?"

"அப்படியெல்லாம் எனக்குத் தோன்றுகிறதே!"

அவள் கிராமத்தில் நதிப்பெருக்கை வேடிக்கை பார்த்திருக்கிறாள். கக்கலும் கரிசலுமாம், கோபச் சிவப்பில் புரண்டு வரும் வெள்ளத்தில் உயிரோடு பிராணிகள் கூடச் சில சமயங்களில் அடித்துக் கொண்டு வரும். ஒரு சமயம் ஓர் ஆளே!... நீர்ச்சுழலில் அவன் தலை தஞ்சாவூர்ப் பொம்மை மாதிரி மூழ்கி மூழ்கி எழுந்த தவிப்பு—தலையை உதறிக் கண்களை இறுகப் பொத்திக் கொண்டாள்.

"எனக்குத் தெரியவேணும்! எனக்குத் தெரியவேணும்!"

"கண்ணை மூடுகிறது, திறக்கிறது; திறக்கிறது, மூடுகிறது." அவன் கை மாறி மாறி மூடித் திறந்தது. "கண்ணை மூடினால் தூக்கம், திறந்தால் விழிப்பு. கண்ணை மூடிக் கொண்டிருந்தால் ராத்திரி; திறந்து கொண்டிருந்தால் பகல். திறந்து மூட முடிந்தவர்களுக்குப் பகல் ராத்திரி; அப்போது எனக்கு எப்போதுமே ராத்திரியா அம்மா?"

அவள் காலடியில் பூமி விட்டது.

"அம்மா, இன்றைக்கு நாங்கள் பையன்கள் எல்லோரும் கண்ணாமூச்சி விளையாடினோம். ஓடிப் பிடிக்க என் முறை வந்தது. ஒரு பையன் என் கண்ணைக் கட்ட வந்தான். அதற்குள் இன்னொருத்தன், 'கண்ணனுக்குக் கண்ணைக் கட்ட வேண்டாமடா கண்ணன் எப்போதுமே கண்ணாமூச்சி தானடா!' என்றான். உடனே எல்லாரும் சிரித்துக் கொண்டு தாளம் போட்டுக் கொண்டு, 'கண்ணன் எப்போதுமேகண்ணாமூச்சி; கண்ணன் எப்போதுமே கண்ணாமூச்சி' என்று என்னைச் சுற்றிச் சுற்றிப் பாடிக் குதித்தார்கள், எனக்குக்

கோபம் வந்து விட்டது. துரத்தித் துரத்தி அடித்தேன். ஒரு பையன் என்னிடம் மாட்டிக்கொண்டான். அவனை அடித்துக் கொண்டே இருக்கிறேன். அடிபட்டுக் கொண்டே அவன், 'கண்ணன் எப்போதுமே கண்ணாமூச்சி! கண்ணன் எப்போ துமே கண்ணாமூச்சி!' என்றான். அப்போது எனக்கே அழுகையும் சிரிப்புமாக வந்துவிட்டது,''

''கண்ணா, கண்ணா!'' கதறிக் கொண்டு அவன் வாயை அவள் பொத்தினாள். அவளுக்கு மூச்சை அடைத்தது. தொண்டையில் எழுந்த வார்த்தைகள் முனகல்களாய்த் திணறின. அவள் கையைப் பிய்க்க முயன்றான்.

''என் கண்ணே கண்ணா! கண்ணா!'' அவனை இறுக அணைத்துக் கொண்டு கேவிக் கேவி அழுதாள். அவனுக்குப் பயம் பிடித்துக் கொண்டது; திமிறினான்.

''என்னை விட்டுவிடேன். விட்டுவிடேன்.''

ஆனால் அவள் பிடி இறுகிற்று. அவள் துயர வெறியால் உள்ளூற ஒரு மகிழ்ச்சியில் திளைத்தாள். அதைத் தன் மகனுக் கேனும் இழக்க மனம் இல்லை. எத்தனையோ நாட்களாய் அடக்கி வைத்திருந்த தவிப்பு உடைந்து ஓடும் ஓட்டத்தில் ஆடும் ஆட்டம்—

''என்னை விடு என்றால் விடு.''

'மாட்டேன்!''

திடீரென வலியில் அலறி அவனைத் தள்ளினாள். ''ஐயோ!''

அவன் உள்ளே வந்து கொண்டிருக்கும் ஆள்மேல் தடாலென விழுந்தான். அவர் அவனை அப்படியே ஏந்திக் கொண்டார்.

''என்ன இது?''

''நாய்! நாய்!''

இடத்தோளை மறுகையால் தேய்த்துக் கொண்டாள், ''இதோ பாருங்களேன்; நாலு பல்லும் பதிந்திருக்கிற அக்கிரமத்தை''' வலியைக் காட்டிலும் பற்களின் பதிவைக் கண்டதும் அவளுக்கு அழுகை அழுகையாய் வந்தது.

"என்னடா கண்ணா? எப்போதடா நீ 'ளொள் ளொள்' ஆனாய்?"

"இல்லை அப்பா, என்னைக் கட்டிப் பிடிக்கிறாள் அப்பா!" பையன் தேம்பி அப்பா காலை இறுகக் கட்டிக் கொண்டான்.

அப்பா அவனைக் கையைப் பிடித்து வந்து ஊஞ்சலில் அவள் அருகே உட்கார்ந்தார்; அவள் எட்ட ஒதுங்கிக் கொண்டாள். ஊஞ்சல் சங்கிலியை அணைத்துக் கொண்டு ஓரமாய் ஒடுங்கிக் கை நகங்களைப் பார்த்துக் கோபத்துடன் சிந்தித்தபடி இருக்கையில், இப்பொழுது அவள்தான் குழந்தையாக இருந்தாள். புருவங்கள் நெரிந்தன. குவிந்த இதழ்கள் போல் அதரங்கள் பிதுங்கின. அவள் உதடுகள் துடித்தன, சிரமத்துடன் அடக்கிக் கொண்டாள்.

"ஏது உங்கள் அம்மாவுக்கு இன்றைக்கு ஏக பு-ர்-ர-ர்-ர்!"

ஏதோ முணுமுணுத்தாள்.

"உர்—ர்-ர்-ர்—என்ன புலி உறுமுகிறது?"

அப்பா கேலியாய் உறுமியதும் பையன் 'களுக் கென்று சிரித்து விட்டான்.

அவள் ஊஞ்சலில் தன் ஓரத்திலிருந்து சீறினாள்.

"புலி வருகிறது, புலி வருகிறதென்று புலியேதான் வந்து விட்டதே!"

"வந்திருப்பது உனக்குப் புலியாகத்தான் படவேணுமா?" அவன் குரல் தழுதழுத்தது; கெஞ்சுவதுபோல் கூட இருந்தது.

"இந்தச் சாமர்த்தியம் எல்லாம் யாருக்கு வேண்டிக் கிடக்கிறது? நான் ஏமாந்து போனேன், என் பிழைப்பு என்றைக்கும் காலைச் சுற்றின பாம்புக்குப் பயந்து பயந்து சாகிறதாகவே ஆகிவிட்டது. ஒன்றைத்தான் வைத்துக் கொண்டு வாழ்நாளுக்கும் புழுங்கிக் கொண்டிருக்கிறோமே, போதாதா?"

கைகளில் முகத்தைப் புதைத்து கொண்டு அழுதாள்.

அவன் இருகைகளையும் ஊஞ்சல்மேல் ஊன்றிக் கொண்டு தரையை நோக்கியபடி உட்கார்ந்திருந்தான். பையனுக்குப் பயமாக இருந்தது. தாய்க்கும் தகப்பனுக்கும் நடக்கும்

தர்க்கம் இன்னதென்று புரியவில்லை. ஆனால் இதென்ன சுத்த அழுமூஞ்சி அம்மா! சதா தானும் அழுதுகொண்டு பிறத்தி யாரையும் கஷ்டப்படுத்திக்கொண்டு! அவன் கை அவனை அறியாமலே அப்பா. கையை நாடி, விரல்கள் பின்னிக் கொண்டன.

"உஷ்! குழந்தை பயப்படுகிறான்."

ஆனால் அவள் அழுகை இன்னும் ஒரு குரல் உயர்ந்தது.

"இத்தோடு உன் அழகான பாட்டை நிறுத்திக்கொள்ள லாம் என்று நினைக்கிறேன்."

அவள் கப்பென்று அடங்கினாள். அவன் அந்தக் குரலை உபயோகிக்கையில் அதற்குக் கீழ்ப்படிதல் தவிர வேறு படி இல்லை. நடு முதுகுள் பனிச்சில் பாம்பு போல் வழிந்தது. விழிகள் மருட்சியுடன் அவனை நோக்கின.

"போய் மூஞ்சியை அலம்பிக்கொண்டு வா; சகிக்க வில்லை!"

அவள் அவ்விடம் விட்டு அகன்றதும் பையன் ரகசிய மாய், "இப்படித்தான் அப்பா, நீ வருவதற்கு முன்னாலிருந்து அழுது கொண்டே இருக்கிறாள், அம்மாவுக்கு என்ன அப்பா, உடம்பு சரி இல்லையா?" என்றான்.

"உடம்பு எல்லாம் சரியாய்த்தான் இருக்கிறது." வார்த் தைகள் யோசனையாய் இழுத்துக்கொண்டு வந்தன.

"பின்னே ஏன் அப்பா அழுகிறாள்?"

அப்பா அவன் தோள்மேல் கை போட்டுக்கொண்டார்.

"கண்ணா, உனக்கு ஒன்று சொல்லப் போகிறேன். இந்த அகத்துக்கு ஓர் அம்பிப் பாப்பா பிறக்கப் போகிறான்."

பையன் சற்று நேரம் சும்மா இருந்தான். சொன்னதை வாங்கிக்கொண்டு வாங்கினதைப் புரிந்துகொள்ளும் நேரம்.

"பிறக்கப் போகிறதென்றால் அழவேணுமா? செத்தால் தானே அழுவார்கள்?"

அவன் உதட்டோரங்களில் ஒளி படர்ந்தது.

"அப்படி யார் உனக்குச் சொல்லிக் கொடுத்தது?"

"இல்லை அப்பா, அன்றைக்கு ஒரு பையன் விளையாட வரவில்லை. இரண்டு நாள் கழித்து வந்தான். ஏண்டா என்று

கேட்டோம். அவன் பாட்டி செத்துப் போய்விட்டாளாம். வெகுநாள் சீக்காம், அவளைப் பார்க்க பயமாக இருந்ததாம். எல்லோரும் அழுதார்களாம். குழந்தைகளை யெல்லாம் எதிர் வீட்டுக்கு அனுப்பிவிட்டார்களாம்.''

''ஓஹோ!''

''அன்று ராத்திரியே இன்னொரு பையன் வீட்டில் அவன் அக்காவுக்குப் பெண் குழந்தை பிறந்ததாம். ஒரே கொண் டாட்டமாம். எங்களுக்கெல்லாங்கூட வாதங்கொட்டை, கல் கண்டு. லட்டு எல்லாம் கொண்டுவந்து தந்தான். முதல் குழந் தையாம். பெண் குழந்தை, செல்லக் குழந்தை...''

''ஓஹோ!''

''அப்பா, செத்துப் போகிறதென்றால் என்ன? பிறக்கிறது என்றால் என்ன?''

முற்றத்தில் மாலை, இரவின் எல்லைக்குள் கடந்து கொண்டிருந்தது. நாள் முடிவில் உலகம் பொட்டலமாய் மடிந்து கொண்டிருந்தது. கூடத்துச் சுவர்களில் கறைகள் ஒன்றுடன் ஒன்று குழைந்து உருவங்கள் எழுந்தன.

முற்றத்தில் கூரையோட்டின் அப்பாலிருந்து எட்டிப் பார்க்கும் மாமரத்தின் கிளைகளிலிருந்து இருள் சரங்கள் இறங்கி மெதுவாய் ஆடி அசைந்தன. அதன் எண்ணற்ற இலைகளைத்தானே தனித் தனியாய்ச் சித்தரித்ததுபோலத் தென்றல் அவைகளினூடே கோத்து வாங்கியது; அவன் பெருமூச்செறிந்தான்,

''நிஜமான சாவோ நிஜமான பிறப்போ இரண்டுள் ஒன்றேனும் இருந்தால்தான் தேவலையே!'' அவன் தனக்குத் தானே அலுத்துக்கொண்டான். ஆனால் வார்த்தைகள் பையனுக்கு எட்டிவிட்டன.

''நிஜமான சாவு, நிஜமான பிறப்பு என்று இருக்கிறதா என்ன?''

''ஊம்.'' குழந்தையின் கேள்வி சிரிப்பை மூட்டிற்று. எங்கென்று தெரியவில்லை; விழியோரங்களின் சதைச் சுருக் கங்களிலா, நெஞ்சிலா, வயிற்றிலா, மார்பிலா, தாடை களிலா. கன்னங்களின் குழிவுகளிலா?

''நிஜமான சாவோ, பிறப்போ—ஆனால் ஏதாவது ஒன்று தான் உண்டு; ஒன்று இருந்தால் மற்றொன்று இல்லை.''

பையனின் புருவங்கள் அப்பா சொல்வதன் அர்த்தச்சுமை தாங்காது தவித்தன.

''அப்பா, ஒரு பையன் சொன்னான்; செத்துப் போன வர்கள் பிறந்துகொண்டே இருப்பார்களாமே! பிறக்கிறதற் கும் காத்துக்கொண்டே இருப்பார்களாம். அப்போது அவர் களுக்குக் கஷ்டமாய் இருக்காது? பசிக்காது? குளிராது?''

''உயிரோடிருந்தால் மாத்திரம் என்ன? பசிக்கவில்லையா, குளிரவில்லையா? எத்தனையோ பசிகள், எத்தனையோ குளிர் கள். பிறந்தவர்களும் செத்துப்போகக் காத்துக்கொண் டிருக்கிறவர்கள்தாம்,''

''அப்படியானால் அப்பா, ஏன் பிறக்கவேணும்? ஏன் சாகவேணும்?''

''க்விக்! க்விக்! க்விக்!!''

வானவெளியில் மாறிக்கொண்டே இருக்கும் கருமையில் ஒற்றைப் பட்சி திசை தப்பிப் பறந்தது, தன் கேள்விக்குப் பதிலைத் தேடிக்கொண்டு.

''அப்பா, செத்துப் போகிறது என்றால் என்ன? பிறக் கிறது என்றால் என்ன?''

''கண்ணா, நீ தூங்குகிறாய் என்றால் என்ன, விழித்திருக் கிறாய் என்றால் என்ன?''

பையன் 'களுக்'கென்று சிரித்தான். ''என்ன அப்பா நான் உன்னைக் கேட்டால் நீ என்னைக் கேட்கிறாயே? இதைத்தான் நான் அம்மாவைக் கேட்டேன், அதிலிருந்து தான் ஆரம்பித்தது,''

''ஓ!''

''உஷ்—அம்மா வருகிறாள்!''

பின்கட்டிலிருந்து அவள் வெளிப்பட்டாள். நெற்றியும் கன்னங்களும் சந்தன வெண்மையில் பளீரிட்டன. காதோரங் களில் மயிர்ச் சுருள்கள் ஈரத்தில் கன்னங்களோடு ஒட்டிக் கொண்டிருந்தன. வெள்ளை விழிமேட்டில் செந்நரம்புக் கொடி களின் நடுவில் சாறு ஓடும் கருவிழிகள் உட்கார்ந்திருந்தன.

அவள் அவர்கள் பக்கம் கண்ணெடுத்துக்கூடப் பார்க்க வில்லை. கூடத்துக்கும் சமையலறைக்கும் காரியமாய் விடு விடென அலைந்தாள். கால்மெட்டிகள் கோபத்துடன் 'ணக் ணக்' என்றன.

அவன் கண்கள் அவள் தோல் வளைவுகளையும் இடுப்பி லிருந்து அகன்று வளைந்த உருவக்கோடுகளுள் வேகமாய்க் குழையும் அங்க அசைவுகளையும் விழுங்கின. அவனில் ஒரு பாதி பிரிந்து அவளோடு இணைந்தது. ஊஞ்சலில் உட்கார்ந் திருந்த குறைநிலை அவனையும் அவளோடு இணைந்த மறு பாதியையும் கவனித்துத் தவித்தது.

சுவாமி விளக்கை ஏற்றுகிறாள். குச்சியிலிருந்து சுடர் சீறிக் குதித்து விளக்குத் திரிக்குத் தாவுகிறது. விளக்கெதிரில் விழுந்து அவள் சேவிக்கையில் அவளைக் கவ்வினாற் போலேயே அவன் நிழலும் அவள் உருவக் கோட்டுடன் குனிகிறது.

பெருவிளக்கில் அகல் விளக்கை ஏற்றிக்கொண்டு அவன் பக்கமாய் முற்றத்தை நோக்கி வருகிறாள். ஊஞ்சல் சங் கிலியை உராய்ந்து அவள் கன்னத்தைத் தொட அவன் கைகள் துடித்தன, சுடரை அணைத்த விரல் சந்துகளில் குங்குமச் சாறு போல் ஒளி வழிகின்றது.

அவள் எங்கோ வெகு தூரத்தின் விளிம்போரத்தில் பாடு கிறாள். துளசி மாடத்தில் விளக்கை வைத்துவிட்டு நமஸ் கரித்து எழுகையில், அவளைச் சூழ்ந்த இருளில் மாடத்தில் அழும் அகல் சுடர் அவள் முகத்தை ஏற்றுகையில், மூக்குத்தி களிலிருந்து நீல மின்னல்கள் கொடி பின்னிக்கொண்டே பிறந்து அவன் உடலை ஊடுருவின. அவள் புருவங்களிடைக் குங்குமப் பொட்டிலிருந்து ஒரு கண் திறந்தது. அவன் உடல் புல்லரித்தது.

அவள் அவனை நோக்கி வந்தாள். துளசி மாடத்து விளக்குச் சுடரில் குளித்துவிட்டு, அதனின்றே வெளிப்பட்டுச் சகிக்க முடியாத தூய்மையுடன் அவனை நோக்கி வருகையில் அடிவயிற்றில் அலைகள் சுருண்டு சுருண்டு தொண்டை வரை யில் எழுந்து உள் வீழ்கையில் வேகந்தாளாது உடல் தவித்தது. அவள் கிட்ட வந்து ஊஞ்சலடியில் உட்கார்ந்து அவன்

மடியில் தன் தலையை வைத்துக் கொண்டாள். அவ்வளவு தான் செங்குத்தான பாறை நுனியிலிருந்து யாரோ தள்ளி விட்டாற் போல், மூர்ச்சை உடல் நினைவை அடித்துக் கொண்டு போய் விட்டது.

கூடத்தில் சுவாமி விளக்கில் சுடர் பொரிந்தது.

x x x x

"எல்லா மின் எல்லைக் கோடுகள் எல்லாம் அழிந்தபின் எஞ்சிய இந்த உள் பிரக்ஞை நிலையில் புரியாதது தெரியாதது எது? புரியவும் தெரியவுமே என்ன இருக்கிறது? இதில் நீ இல்லை. நான் இல்லை; ஆண் இல்லை, பெண் இல்லை; முன் இல்லை, பின் இல்லை; எப்போதும் இப்போதே, எதுவும் எல்லாமும் இதுவே.

"எங்கும் உயிர் வெளிச்சத்தின் குளிர்ப்பிழம்பின் வியாபகமாய் விளங்குகிறது. இவள் ஒரே தேஜஸ்வியாகத் திகழ்கிறாள். இவள் மார்வுள் இவள் விளக்கு எரிகிறதுடன் இவள் வயிற்றுள் அகன்று வளர்ந்துகொண்டேயிருக்கும் பொறி ஒளி கண் கூசுகிறது. ஆனால் இதுவும் நானும் இம்மாதிரி என் தாயின் வயிற்றுள் சுருண்டு படுத்திருந்தது இப்போது போல் இருக்கிறது. நான்—"

யாரோ அவனைத் தோளைப் பிடித்து உலுக்கினார்கள்.

"இதோ பாருங்களேன், இதோ பாருங்களேன்! ஐயோ?"

"அப்பா—அப்பா!"

மனைவி மகன் குரல்கள் எங்கோ தொலை தூரத்தில் கிணற்று வெளியிலிருந்து வந்து அவன் மேல் கொக்கிபோல் விழுந்து அவனை வெளியுணர்வுகளுக்கு இழுத்தன. பொருள்கள் வெடுக்கென்று தம்மை உதறிக்கொண்டு பழைய நிலையில் சமைந்தன. அவனுக்கு வியப்பாக இருந்தது. இதென்ன தூங்கிக் கொண்டிருக்கிறேனா, விழித்துக் கொண்டிருக்கிறேனா?

[தூங்குகிறதென்றால் என்ன, விழித்துக்கொண்டிருப்பது என்றால் என்ன?]

‘‘என்ன நீங்கள் திடீரென்று அப்படி ஆகிவிட்டீர்கள்? முகம் வெளுத்துப் போய், விழிநிலை குத்திக்கொண்டு? நான் பயந்தே போய்விட்டேன்.’’

அவள் குரலில் அழுகை நடுங்கிற்று.

‘‘நான் எங்கிருந்தோ மீண்டேன்.’’ பெரு மூச்செறிந் தான்.

‘‘அப்பா, நான் பயந்து போய்விட்டேன், எனக்கு ஒன்றுமே புரியவில்லை. திடீரென்று அம்மா கத்தினாள்.’’

‘‘பயப்படாதே.’’ பையனுடைய முதுகைத் தட்டினான்.

‘‘ஹார்லிக்ஸ் கொஞ்சம் கரைத்துக் கொண்டு வரட்டுமா?’’

அவள் முகத்தில் கவலை தோய்ந்திருந்தாலும் குழந்தை முகமாய்த்தான் இருந்தாள்.

‘‘ஏதாவது பேசுங்களேன். எனக்குப் பயமாக இருக் கிறது.’’

‘‘பயப்படாதே.’’ அவளது கனனத்தின் மேல் கையை வைத்தான்.

சிந்தனையில் ஆழ்ந்த அவன் கண்கள் புன்னகை புரிந்தன. தாய் முகமும் மகன் முகமும் அணைந்தாற்போல் நெருங்கி அவன் முகத்தை எதிர் நோக்குகையில் ஒரு முகமாய்த்தான் இருக்கின்றன; கூட்டில் தாய்ப் பறவை இறங்கியதும் குஞ்சுகள் வாய் திறந்துகொண்டு கீச் கீச்சென வரவேற்பது போல்.

‘‘உங்களுக்கு என்ன ஆச்சு? என்ன பண்ணிற்று?’’

‘‘எனக்கு ஒன்றும் ஆகவில்லை. ஒன்றும் பண்ணவில்லை. நான் ஓர் இடத்துக்குப் போய்விட்டு வந்தேன்.’’

‘‘எங்கே?’’

‘‘நாம் எல்லோரும் எங்கே போகிறோமோ, எங்கிருந்து வந்தோமோ அங்கே.’’

‘‘எனக்கு ஒன்றும் புரியவில்லையடி யம்மா!’’ திகைப்பில் அவள் விழிகள் மருண்டன. முகத்தில் பாதியை அடைத்துக் கொண்டு வண்டு போல் மை தீட்டிய கரிவிழிகள்; அஞ்சனாட்சி.

ஒன்றும் புரியாமல் இருப்பதுதான் அவள் அழகு.

"கண்ணா. உனக்கு நான் ஒரு கதை சொல்லப் போகிறேன்--"

"கதை! கதை!" பையனுக்கு உவகை தாங்கவில்லை; கையைக் கொட்டிச் சிரித்தான்.

"இப்போவெல்லாம் நீ கதையே சொல்கிறதில்லையப்பா. நேரங் கழித்துத் திரும்பி வருகிறாய். நீ வருவதற்குள் நான் தூங்கிப் போய்விடுகிறேன்."

"கண்ணா, எத்தனை தடவை சொல்லிருக்கிறேன், அப்பாவை வாருங்கள், போங்கள் என்று சொல்லவேண்டு மென்று?"

"ஹே!" பையன் அலட்சியமாய்ச் சூள் கொட்டினான். "சரிதான் போ, அம்மா. அப்பாவும் நானும் என்றைக்கும் பழம், அப்படித்தானே அப்பா?"

"ஆமாம்"

"நிச்சயமாய்?"

"ஆமாம்."

அவனுக்குத் திருப்தி ஏற்படவில்லை.

"நி...ச்...ச்...ச்...ச்...ச்...சயமாய்?"

"ஆமாம்."

"உங்களை வா என்றாலும் போ என்றாலும்?"

"ஆமாம்."

"உன்னை வாருங்கள் என்று சொல்லாவிட்டாலும் போங்கள் என்று சொல்லா விட்டாலும்?"

"ஆமாம்."

"உங்களுக்கும் உனக்கும் என்ன வித்தியாசம்?"

"ஒன்றுமில்லை."

"அப்போது நீங்களும் நீயும்—நீயும் நானும் ஒன்று தானே?"

"ஆமாம்."

"எனக்கு அதுதான் வேணும்."

பையன் அவசரமாய் எழுந்து நின்றான். ஊஞ்சல் கிடுகி டென ஆடிற்று. அப்பாவை இறுக அணைத்துக்கொண்டு இரு

கன்னங்களிலும் முத்தமிட்டான். அப்பாவின் கண்களில் நீர் மல்கிற்று. அவர் உடல் கிடுகிடென ஆடிற்று.

''எனக்கு அப்போதே தெரியும் அப்பா.''

''என்னது?''

''நீ அன்றைக்கே சொல்லியிருக்கிறாய்.''

''என்னது?''

''நீயும் நானும் தோஸ்த்.''

''தோஸ்த்?''

''என்ன அப்பா மறந்துவிட்டாய்? அன்றைக்கு நீ நான் அம்மா எல்லாம் மூட்டை எல்லாம் கட்டிக்கொண்டு அடையாற்றுக்குப் 'பிக்னிக்' போனோமே! மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு சாதம் எல்லாம் சாப்பிட்டான பிறகு அம்மாவும் நீயும் பேசிக்கொண்டிருந்தீர்கள். எனக்குக் கைநிறையப் பெரிதாகப் பூ ஒன்று கீழே அகப்பட்டது. அது மாதிரி நிறையச் சுற்றி விழுந்து கிடக்கிறது என்றாய். நான் குனிந்து ஒவ்வொன்றாகப் பொறுக்கிக்கொண்டே போனேன். அப்போது ஒரு வேர் தடுக்கிக் கீழே விழுந்துவிட்டேன். பூவெல்லாம் மடியிலிருந்து கொட்டிப் போயின. எனக்கு வலியும் கோபமுமாக அழுதேன். நீ ஓடி வந்து என்னை வாரி எடுத்துக்கொண்டாய். என்ன என்னவோ செல்லம் கொஞ்சிக் கண்ணைத் துடைத்துச் சமாதானப்படுத்தினாய். அப்போது 'நீயும் நானும் தோஸ்த்' என்றாய். நான்கூட, 'தோஸ்த் என்றால் என்ன?' என்றேன். நீ சொன்னாய், 'சிநேகிதர்கள், ஓரே மாதிரி ப்ரெண்ட்ஸ்' என்ன அப்பா அதற்குள் மறந்துவிட்டாயே?''

அவனுக்கு இப்போது நினைவு வந்தது. அவன் கைகள் மகனைச் சுற்றி இறுகின. அந்த நாளை எப்படி மறக்கமுடியும்?

அன்று வீடு திரும்பும்போது நேரமாகிவிட்டது. அலைந்த அலுப்பு—வந்து படுக்கையில் விழுந்ததுதான் தெரியும்; மறுபடியும் விழிப்பு வந்ததும் பார்வை நேரே மகன்மேல் சாய்ந்தது, குழந்தை நிம்மதியாய்த் தூங்கிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் பக்கத்தில் அவன் தாயைக் காண

வில்லை. ஜன்னலுக்கு வெளியே மொட்டை மாடியில் வைத்த பூந் தொட்டிகளுக்கு அருகில் ஓர் உருவம் தெரிந்தது. அவன் எழுந்து சென்று அவள் அருகே நின்றான்.

வானத்தை மப்பு பாறை பாறையாய் அடைத்தது. உடம்பில் படாத ஒரு காற்று லேசாய்ச் சுழன்று அடக்க மிலாது ஆடிற்று. வாசனை தூவினாற்போல் பொடி இருள் சூழ்ந்தது. அவள் அவனைப் பார்த்தாளோ இல்லையோ, பார்த்துந்தான் பார்க்கவில்லையோ? அவள் முதுகை விரல் நுனியால் தொட்டான். அவள் நிலை கலையவில்லை. தோளைப் பிடித்துத் தன் பக்கம் திருப்பினான். அந்நேரமே மலர்ந்த பன்னீரின் மணம் குபீரெனக் கிளம்பியது. தலை கிர்ர்ரிட்டது. அவனுக்குச் சிறகுகளின்மேல் பறப்பதுபோல் இருந்தது.

இந் நள்ளிரவின் இருளில் எல்லாவற்றின் மூலமும் தன் அகண்ட மோனத்தில் உகுத்த கண்ணீர்போல் துளித்துத் தனித்து உலகு அந்தரத்தில் தொங்கிற்று. அந்த ஆதாரத் தனிமை அந்த முறையில் நெஞ்சைத் தொட்ட இடத்திற்குத் துக்கம் அடிவயிற்றில் அலை பொங்கிற்று. அவள் தோளில் முகத்தைப் புதைத்துக்கொண்டான். அவள் கைகள் அவன் கழுத்தைச் சுற்றி இறுகின.

உடலில் படாது லேசாய்ச் சுழன்று ஆடிய காற்று நெஞ்சுள் புகுந்து புயலாய்ப் பிய்த்துக்கொண்டது. வானத்தை அடைந்த மேகப் பாறைகள் உடைந்தன. நட்சத்திரங்கள் பெருக்கெடுத்துப் புழுங்கின.

உலகம் அவர்களைப் பெரிய பூக்கிண்ணம் போல் ஏந்திற்று. அதன் நடுவில் புயல் அலைக்கும் கோசக் காடுகளின் அடர்ந்த இருளில் இருவரும் வழி தப்பி ஒருவருக்கொருவர் தேடித் துணையாகித் தவித்தனர். இருளில் மின்னல் கொடிகள் பிறந்து இறங்கி அவன் உடலை ஊடுருவின. தகதகப்பில் நெற்றியும், கண்ணின் மேலிமையின் அடிப் புறமும், எச்சிலின் கொழ கொழப்பும், தோள்களும், இடையும், துடைகளும் தகிதகித்தன. உயிர் மீன்குட்டி போல் துள்ளித் துள்ளி எழுந்து மீண்டும் மீண்டும் உடல் தட்டில் துடித்துத் துடித்து வீழ்கையில் உடல்கள் அதிர்ந்தன.

நினைவு கழன்று வெள்ளத்தோடு சென்றது. எப்பொழுது நினைவு மீண்டதோ தெரியவில்லை. ஆனால் கண்ணிமை களின் அடியில் நினைவு மலரும் குளிர்ச்சிதான் தெரிந்தது. இமைகள் இதழ்களாய் அவிழ்ந்து திறந்தன. தான் மலர்ந் தாற்போல் தனி மணம். நெஞ்சை ஒழித்துப் பெருக்கி வைத்தாற்போல் ஓர் அமைதி. வானில் நட்சத்திரங்கள் குடலையிலிருந்து பூக்கள் சரிந்தாற்போல் கண் வீச்சுக்கு எட்டியவரை அடர்ந்து வாரியிறைத்திருந்தன. அவற்றின் தண்ணொளி அவன்மேல் அருள்போல் இறங்கிற்று.

யாருடைய வருகைக்காக இந்த மோனக்காவல்; இந்த அபரிமித மலர்ச் செறிவு? இதில் தெரியும் தனித் தூய்மை?

எவன் வந்து நெஞ்சின் வாசற்படியில் நின்றால் அப்படி அவன் நின்றதும் அவன் பாதங்களில் இடுவதற்காகப் பத்திர மாய்த் தன்னோடு தன்னற்றதாய் வைத்துக் கொண்டிருக்கும் தன்னர்ப்பணம்?

நான் எனக்கு இல்லை. பின் யாருக்கு?

யாருக்கு?

கேள்விகளே மலர்கள். அவற்றின் அர்த்தங்களே அந்த மலர்களின் மணங்கள். அந்த அர்த்தங்களுள் புதைந்த பதில்களுக்கு அந்தக் கேள்வி மலர்களே அர்ச்சனைகள்.

திடீரென்று அவள் தோள்கள் குலுங்கின. மார்பே வெடித்துவிடும் போல் விக்கி விக்கி அழுதாள். நினைவின் மிதப்பிலிருந்து முரட்டுத்தனமாய், மனமிலாது மீட்கப் பட்டதும், அவளையோ அவன் நிலைக்களத்தையோ சீக்கிரம் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. ஏதோ கொடியி லிருந்து அறுந்துவிட்டாற்போல் இப்போது படும் விரக்தி யுணர்ச்சியில் அவள் வேற்றாளாய்த்தான் பட்டாள். ஏன் அழுகிறாய். என்று கேட்கவோ, தேற்றவோ அல்லது அவள் கண்களைத் துடைக்கவோ தோன்றவில்லை.

அழுபவர் அழட்டும், சிரிப்பவர் சிரிக்கட்டும். சிரிப்பவர் அழட்டும், அழுபவர் சிரிக்கட்டும். சிந்திப்பவர் சிந்திக்கட்டும். உழல்பவர் உழலட்டும், விலகி நிற்பவர் நிற்கட்டும். எதற்குத் தான் உண்மையில் அர்த்தம் இருக்கிறது?

"அப்பா! அப்பா!—"

மகன் குரல் கேட்டதும் தாமே உருவாகிக் கொண்டிருந்த விளக்கங்களும் அவற்றிற்கு முந்திய விரக்தியும் வெள்ளத்துடன் கரைந்து போயின.

பூந்தொட்டிகளுக்கு அருகில் குப்புற வீழ்ந்து அழும் அவளைக் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. குழந்தையின் குரல் வரும் திக்கு நோக்கிச் சென்றான்.

"என்ன அப்பா இது? எனக்குக் கோபமாக வருகிறது. கூப்பிட்டால் ஏன் என்றுகூடக் கேட்க மாட்டேன் என்கிறாயே?"

"நான் எங்கு இருக்கிறேன்?"

அவன் தன் கண்களைத் தேய்த்துக்கொண்டான்! ஊஞ்சலில், குழந்தையுடன், அவளுடன்.

"அப்பா, உனக்கு உடம்பு சரியில்லையா?"

"உடம்பு சரியாய்த்தான் இருக்கிறது. ஆனால் போய்ப் போய்த் திரும்பி வந்துகொண்டிருக்கிறேன்."

"என்ன, ஊஞ்சலாடுகிற மாதிரியா?"

"ஆமாம்! சரியாய்ச் சொன்னாய். கண்ணா, இன்றைக்கு உனக்கு ஒரு கதை சொல்லப்போகிறேன்."

"சரிதான், கதை சொல்கிறேனென்று சொன்னதும் திடீர் திடீரென்று நீ தூங்கிப் போய்விடுகிறாய்!"

"இல்லை; இன்றைக்கு நிச்சயமாய்ச் சொல்லப் போகி றேன்."

"உடம்பு சரியில்லாவிட்டால் சொல்ல வேண்டாம். அப்பா. அப்புறமாய்ச் சொல்லு."

"இந்தக் கதையை இப்போது சொல்லாவிட்டால் அப்புறம் சொல்ல வராது. அப்படியே சொன்னாலும் இப்போது மாதிரி அப்போது வராது. கண்ணா, உனக்கு இந்தக் கதையை இப்போதே சொல்லிவிடுகிறேனே."

"என்ன அப்பா கொஞ்சுகிறாய்?"

அவன் கண்கள் மருட்சியுடன் அவனை நோக்கின. 'கண்ணா, கண்ணா, இன்றைக்கு இந்தக் கதையைச் சொல்லி

விடுகிறேன்; ஓர் அகமுடையான் பெண்டாட்டி இருந் தார்கள்—''

''ஒரே ஓர் ஊரிலே—''

''எல்லாம் இந்த ஊரிலேதான் இருந்தார்கள். அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் மிகவும் ஆசையாய் இருந்தார்கள். அவனுக்கு வேறே மனுஷர்கள் இல்லை. அப்பா, அம்மா, தம்பி, தங்கை...''

''அப்போது மிகவும் தனியாக இருக்குமே!''

''ஆனால் அப்போது தெரியவில்லை. கல்யாணமான புதுசு, அவர்களுடைய பிரியங்களைப் பங்கிட்டுக்கொள்ள வேறே உறவு மனிதர்கள் இல்லை. அதனால் அவர்கள் ஒருவர் மேல் ஒருவர் வைத்திருந்த ஆசை, அன்பு, பிரியம், நினைப்பு, எல்லாவற்றிலும் முழுமை இருந்தது. அவனால் ஒரு நிமிஷங் கூட அவளை விட்டுப் பிரிந்திருக்க முடியவில்லை. திடீர் திடீரென்று நினைத்துக்கொண்டு ஆபீசில் பாதி வேலையில் எழுந்திருந்து வீட்டுக்கு வந்துவிடுவான்.''

''அது மாதிரி ஒரு பிரியங்கூட இருக்குமா அப்பா?''

''இருந்தது பாரேன்! கல்யாணமான புதிசு. நீ இப் போது கேட்ட மாதிரியே அவனுக்கே இந்தச் சந்தேகம் வந்தது. 'இது மாதிரி ஒரு பிரியம் உண்டா? உலகத்தில் எத்தனையோ அகமுடையான் பெண்டாட்டி இல்லையா? அது மாதிரி நாம் ஏன் இல்லை? இவ்வளவு ஆசை இருக்க லாமா? யார் என்ன கேலி பண்ணினாலும் வெட்கம் கெட்ட ஓர் ஆசை...''

''அப்பா, எனக்கு இந்தக் கதை பிடிக்கவில்லை.''

''இல்லை. இல்லை.''அவன் அவசரமாய்க் கெஞ்சினான். ''இந்தக் கதைக்கு இது முக்கியம்—''

''எனக்கு ராஜா ராணி கதை சொல்லு. அகமுடையான் பெண்டாட்டி கதை வேண்டாம்.''

''சரி, அவனே ராஜா, அவளே ராணி என்று வைத்துக் கொள்ளேன். அந்த ராஜாவும் ராணியும் ஒருவர்மேல் ஒருவர் அவ்வளவு பிரியமாக இருந்தனர். அப்போது அவர் களுக்கு ஒரு குழந்தை பிறந்தது.''

"ஆ! ராஜகுமாரன் வந்துவிட்டான்!" பையன் களிப்புடன் கை கொட்டினான். "அப்பா, ராஜகுமாரன் பிறப்பதற்கு ராஜாவும் ராணியும் மிகவும் தவங் கிடப்பார்களாமே; அப்படித்தானே அப்பா கதையிலே எல்லாம் வருகிறது?"

"இந்தக் கதையில் இதுதான் வித்தியாசம். குழந்தை பிறக்கவில்லையே என்று அவர்கள் தவம் கிடக்கவில்லை. அவர்களுக்குத்தான் மற்றதைப்பற்றி நினைப்பு இல்லையே! குழந்தையைப் பற்றி எங்கே நினைக்கப் போகிறார்கள்?"

"அப்போது தவங் கிடக்காமலேயா ராஜகுமாரன் வந்தான்? அப்போது சுவாமி மிகவும் நல்லவர், அப்பா!"

"கண்ணா, கடவுள் கேட்டுத்தான் கொடுப்பார் என்று நினைக்கிறாயா? கேட்காமலும் கொடுப்பார். கேட்டதைக் கொடுப்பார் என்றும் சொல்ல முடியாது. கேட்காததையும் கொடுப்பார்." உதட்டோரங்கள் புளிப்பில் வளைந்தன.

"அவர் ஏன் அப்படி இருக்கிறார்?"

"எனக்குந்தான் புரியவில்லை."

"ஏன் அப்பா உனக்குப் புரியவில்லை?"

"நான் என்ன கொக்கா? எல்லோருக்குந்தான் புரியவில்லை."

"எனக்குப் புரிந்து போச்சு."

அவன் ஒரு கணம் திகைத்துப்போனான். பையனை அச்சத்துடன் நோக்கினான். "அவர் செய்வது எல்லாமே எல்லாருக்கும் புரிந்துவிட்டால் அப்புறம் அவர் கடவுளாய் இருக்க முடியுமா?"

அவன் தொண்டையில் மூச்சு சற்றுத் தடைப்பட்டுத் திணறிற்று. மகனை அப்படியே அணைத்துக் கொண்டான். மகனின் மார்பு அவன் மேல் படபடத்தது. அவன் கண்கள் மூடின. முற்றத்திலிருந்து குளிர்ந்த காற்று கண்ணிமைகளை ஒற்றியது.

விளக்கில் சுடர் பொரிந்தது.

‘‘என்ன கப்சிப்! அத்தோடு கதை அவ்வளவுதானா?’’ பையன் அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டான்.

‘‘குழந்தை பிறக்கப் போகிறது என்று தெரிந்தது. தெரிந்ததும் அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் அவனைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள்.’’

‘‘ஏன் அப்பா?’’

‘‘அது அப்படித்தான் வழக்கம்.’’

‘‘அவன் கண்கள் அவள் கண்களைச் சந்தித்தன. அவன் விழிகள் முழுக் கறுப்பல்ல; கருநீலம். அவள் விழிகள் கரு வண்டின் நிறம்; மை தீட்டி, முகத்தில் பாதியை அடைத்தாற் போன்ற பெரிய கருவிழிகள்.

‘‘அவளைத் தாய்வீட்டுக்குப் போகவிடவே மனம் இல்லை. அவள் ஊருக்குப் போவதற்கு முதல்நாள் இரவுகூடச் சினிமா வுக்கு மூன்றாவது காட்சிக்குப் போய்வந்தனர்; அவள் தாய் புத்தி சொல்லிப் பார்த்தாள்; ‘என்னவோடியம்மா சொல்லி விட்டேன். எங்கள் நாளிலே உண்டாகி யிருக்கிறவர்கள் விளக்கு வைத்தாலே அப்புறம் வெளிக்கிளம்ப மாட்டார்கள். அதற்கு அப்புறமே காற்று நல்லதில்லை. ஏதேதோ நட மாடும்’’ என்றாள்.

‘‘அம்மா, அவர் நீ சொன்னாலும் கேட்கமாட்டார். நான் சொன்னாலும் கேட்கப் போவதில்லை. எனக்கோ சினிமாப் பிடிக்கும் என்று உனக்குத் தெரியும். நீ இதோ இன்றைக்குக் காலை வந்தாய்; நாளைக்காலை போகப் போகிறாய். உனக்கு ஏன் பொல்லாப்பு? நானுந்தான் இதற்கு அப்புறம் எந்தச் சினிமாவைப் பார்க்கப் போகி றேன்’’ என்றாள்.

‘‘படம் முடிந்தது. டாக்ஸிகளின் குழல்களும், ரிக்ஷாக் களின் மணிகளும் காதைப் பொளிந்தன. கூட்டம் கலைந்தது.

‘வீட்டுக்கு நடந்தேபோகலாம்.’ அவன் குரல் கெஞ்சிற்று.

‘அதுவரைக்கும் பேசிக்கொண்டிருக்கலாம் அல்லவா?’

‘‘அவள் புன்னகை புரிந்தாள்; ‘உங்களைப் பார்த்தால் எனக்கு ஒரு பக்கம் சிரிப்பு வருகிறது. ஒரு பக்கம் பாவமாக இருக்கிறது. அது என்ன சபலமோ?’

''அவன் முகம் விழுந்தது. அதைக் கண்டதும் அவளுக்குச் சுருக்கென்றது. அவசரமாய், 'ஆனால் எனக்குப் பயமாயும் இருக்கிறது. நீங்கள் என்மேல் வைத்திருக்கும் ஆசைக்கு நான் தகுதியோ?' என்றாள்.

''இருதயம் நிஜமாக நிறைந்திருந்தால் அதன் பாஷையை அதுவே அமைத்துக் கொள்கிறது.

''தெருக்களில் நடமாட்டம் இல்லை. அவன் முழங்கை வளைவில் தன் கையைக் கோத்துக் கொண்டாள். அவளாலுந் தான் அவனைத் தொடாமல் இருக்க முடியவில்லை. யார் என்ன வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும்.

''தெருவிளக்கின் வெளிச்சத்தில் அவள் முகம் பணிவெளுப் பில் மிகவும் களையாக இருந்தது. அவள் கன்னத்தில் உராயும் கூந்தலிலிருந்து கதிர்ப் பச்சையின் நெடி கம்மென்று அலைந்தது. அவள் உடலில் தனியாக ஒரு வெற்றி யொளி. வயிறு அசிங்கமாய் வெளித் தெரியாமல் அடக்கமாய்த்தான் இருந்தது. அந்த உடல் வாகே அப்படி.

''தன் கன்னத்தை அவன் தோள்மேல் தேய்த்துக் கொண்டே, எனக்குத் தாகமாய் இருக்கிறதே' என்றாள்.

'அதுதான் வீடு கிட்டே வந்துவிட்டதே!',

''பொய்க்கோபத்தில் உதட்டைப் பிதுக்கினாள்,'' 'உங் களுக்கு ஜாடைமாடை தெரியாது. எனக்கு ஐஸ் போட்ட கலர் வாங்கித் தாருங்களேன்.'

''அப்பொழுதுதான் அவனும் பார்த்தான்—ஒரு நிமிஷ தூரத்தில், சோடாக்கடையில் பெட்ரொமாக்ஸ் விளக்கை.

'நாங்கள்தாம்—ஆண்கள்—கண்ட இடத்தில் சாப்பிட வேண்டி யிருக்கிறது. உனக்குக்கூட அந்த அசுசி எதற்கு என்று பார்த்தேன்' என்றான்.

'அப்படியானால் எனக்கு வாங்கிக் கொடுக்க உங்களுக்கு மனமில்லை என்றுதான் அர்த்தம்.'

'சேசே! அது மாதிரி சொன்னாலே எனக்கு வேதனையாக இருக்கிறது.'

''அவன் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே அவள் மேலே பேசிக்கொண்டு போனாள்.

'என் நிலையில் இருக்கிறவர்கள் எந்த ஆசையைப்பட்டா லும் உடனே நிறைவேற்றிவிட வேண்டும். இதோ நான் காலையில் உங்களைப் பிரிந்து போய்விடப்போகிறேன். திரும்பி உயிரோடு வருவேன் என்று என்ன நிச்சயம்?'

அவள் விழிகள் நிறைந்து பளபளத்தன.

'அஞ்சனா! அஞ்சனா!' நெருப்பை மிதித்தாற்போல் துடிதுடித்தான்.

'பிள்ளை பெற்றாயோ, பிறப்பை எடுத்தாயோ என்று பெண்கள் வசனம். என் அம்மா நாளில் இடுப்பு வலி யெடுத்துத் துடித்துக்கொண்டிருப்பாளாம். ஒரு பக்கம் மருத்துவச்சி வந்திருப்பாளாம். இன்னொரு பக்கம், 'ஐயோ, நேற்றைக்கே கேட்டாயேடி. இந்தா, அப்புறம் தின்ன முடியாதே' என்று ஒரு மாமி திரட்டுப் பாலை உருட்டிக் கையில் வைத்துக்கொண்டு வாயில் ஊட்டப் பார்ப்பாளாம். பின்னாலேயே வெங்காயக் குழம்பில் தோய்த்த அடை விள்ள லுடன் வேறு ஒரு மாமி காத்துக்கொண்டிருப்பாளாம். அம்மா சொல்லும்போது எனக்குச் சிரிப்பாய் வரும். ஆனால் இப்போதுதான் அந்த நிலைமை புரி—'

'நாயர், இரண்டு கலர் போடு, ஐஸ் போட்டு—'

''மூடியைக் கழற்றியதும் நுரையைக் கக்கிக்கொண்டு சோடாவின் பொங்கலும் கண்ணாடித் தம்ளர்களில் இறங்கும் கொந்தளிப்பான கிளுகிளுப்பும், சீறிய வண்ணம் நிறைந்த ஸ்படிகச் சிவப்பும், அதன் மேல் விழிகள் போல் மிதந்த 'ஐஸ்' கட்டிகளும்-இப்போது போல் இருக்கிறது.

''அவள் உதடுகள் லேசாய்ப் பிதுங்கித் தம்ளரின் விளிம் பின் மேல் படிந்து அழகாய்ச் சிவந்தன. அவன் அவளையே பார்த்து நின்றான். அவள் உதடுகள் அவ்வளவு அளவாய்ப் பதிந்தன. அவள் இன்பத்தைப் பருகும் இன்பத்தில் ஆழ்ந்த அந்நிலையில் அந்நிமிஷத்திற் குரிய நேரத்தின் சின்னமாய் விளங்கினாள். அதன் மயக்கில் தன்னை இழந்து நின்றான்.

இரட்டைத் தம்புராச் சுருதிபோல், சொல்லும் கதையுடன் கூடவே நினைவு மீட்டும் இந்நேரங்களைக் கண்ணனுக்குத் தெரிவிப்பது எப்படி?

''அவளைப் பிள்ளைப் பேற்றுக்கு அவள் தாயார் அழைத்துக் கொண்டு போய்விட்டாள்.—சுலபமாய் நாலு சொற்கள். அந்த நாலு மாதங்களில் அவளை நினைத்து நைந்து உளுத்து ஓடாய்ப் போனதை அவை சொல்லுமோ?

''எண்ணி எண்ணி, எண்ணியது என்னவென்று தெரியாது எண்ணங்கள் குழம்பி, மண்டையை இரு கைகளாலும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு, ஒரே இடத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டு மணிக்கணத்கில் உட்கார்ந்திருப்பான். அம்மாதிரி நேரங்கள் வருவதை முன்கூட்டியே அறிகையில் திகிலாக இருக்கும். கறுத்த மேகங்களாய் அவனை அவை கவ்வும்.

''ஹோட்டலில் சாதம் ஆறி விறைத்து இறக்கை விரித்துக் கொள்ளும். இலையோரத்தில் கிண்ணத்தில் வைத்து விட்ட மோரில் ஈ விழுந்து தவித்துக் கொண்டிருக்கும்.

'ஸார், ஸார்!—நேரமாச்சு சார்—!'

'உம்?—ஓ—!—'

''கையை வைக்காமலே எழுந்து போய்விடுவான்.''

''வீட்டுக்குப் போகவே அஞ்சல்—வீடு காடு.

''அறைக்கு அறை வாசற்படியில் தயங்கி நிற்பான், அவள் விட்டுச் சென்ற அடையாளங்களை, கண்ணோட்டத்தில் தேடிக் கொண்டு; வெந்நீருள்ளில் அவள் விட்டுச் சென்ற சோப்புக் கட்டித் தேசலை வெகு நாள் வைத்துக்கொண்டிருந்தான்.

''ஆனால் அம்மாதிரி, படுக்கையிலும் தலையணையிலும் அவள் உடலும் தலையும் அழுந்திய அழுங்கலை எவ்வளவு காப்பாற்ற முடியும்?

''நினைத்துக்கொண்டு லீவு போட்டுவிட்டு வண்டியேறி அவளைக் கண்டு திரும்பும் தூரத்தில் அவள் பெற்றோர்களின் ஊர் இல்லை.

''கடிதங்கள்: எழுத்தெல்லாம், நேருக்கு நேர் ஒரு சொல்லுக்கு இணையாமோ? உலகில் இருக்கும் சொல்லெல் லாம் கைக்குக் கை ஒரு பிடிப்புக்கு ஈடாகுமோ?

'நினைப்பெல்லாம் அவள். அவளினின்று அவள் இல்லா மல் அவனுக்கு விடுதலை இல்லை.

'அஞ்சனா, நீ துரோகி. ஆமாம், நீ துரோகி. ஊருக்கு உன் சாமான்களை யெல்லாம் மூட்டை கட்டிக்கொண்டு போகையில் என்னையும் என்னை அறியாமல், எனக்குக் கொஞ்சங்கூட விட்டு வைக்காமல் எடுத்துக்கொண்டு போய் விட்டாயா? நான் இந்த வீட்டில் மேலுங் கீழுமாய் மயங்கி மயங்கி எதைத் தேடுகிறேன்? என்னையா? உன்னையா? அஞ்சனா, பாவி, போகிற போக்கில் என்னை என்ன பண்ணி விட்டுப் போய்விட்டாய்?'

''பிரிவின் ஜன்னியைக் கண்ணனுக்குச் சொல்லும் கதை யோடு இழைக்க முடியுமோ?

''உள்ளூற அவனுடைய சுயபலம் போய்விட்ட மாதிரியே தான் அவனுக்குத் தோன்றிற்று. அவனைப் பிடித்துக்கொண் டிருந்த ஜுரவேகந்தான் அவனைத் தாங்கிக் கொண்டிருந்தது. பிறகு ஒரு நாள் கடிதம் வந்தது. கண்கள் ஆறாய்ப் பெருகின. அத்துடன் அவற்றை அடைத்துக் கொண்டிருந்த அழுக் கெல்லாம் கரைந்தோடிப் பார்வைக்கெல்லாம் பளிச் சென்று பச்சையாய்த் தோன்றின. மலர்கள் இதழ்கள் விரித்தன.

''ரெயிலின் வருகைக்குக் காத்திருக்கும் பரபரப்பு இத்தனை வயசாகியும் விடுவதில்லை. ரெயிலின் வருகையும் புறப்பாடும் எப்போதும் பெரியசின்னங்களாய் விளங்கு கின்றன. ஆடி அசைந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு மனம் இல்லாது, ஆனால் தன் கடமையின் குறியில் அந்தி நேரத்தில், அது கிளம்புகையிலும், பொல பொலவென விடியும் நேரத்தில் இரவின் இருளிலிருந்து வெளிப்பட்டு அது அதன் பெரும் சரீரத்தைத் தூக்கிக் கொண்டு நுழைவதிலும்—எத்தனை ஆசைகள், ஆசைகளின் முடிவுகள், ஏமாற்றங்கள், நிறைவுகள், எதிர்பாராத திருப்பங்கள்! எல்லாம் ஒன்றோடொன்று

இழைந்து அடங்கியிருக்கின்றன! அவன் கண்கள் கோடிக்குக் கோடி தேடி அலைந்தன. ஐயோ, இங்கே இன்னும் இரண்டு நிமிஷங்கள் தானே நிற்கும்? வருகிறேன் என்றுவிட்டு வர வில்லையா? வண்டி தப்பிவிட்டதோ? கடைசி நேரத்தில் என்ன அசந்தர்ப்பமோ? உடம்புக்கு என்னவோ, ஏதோ? என்னால் இனிமேல் இந்த அவஸ்தையைத் தாங்க முடியாது. முடியுமோ? மின்னினும் வேகமாய், அதற்குள் அடுக்கடுக்காய், தனித் தனியாய் எத்தனை எண்ணங்கள். அதனதன் தனித் தனிப் பயங்கரங்களுடன்!

''அவற்றில் அவன் மூழ்கி, அவன், தலைமேல் அவை மூடி விடும் நேரத்தில் கடைசி வண்டிக்கு முன் வண்டியிலிருந்து அவன் மாமியார் இறங்குவதைக் கண்டான். 'அவள் கையில் தலையணை மாதிரி ஏதோநீளமாய் ஏந்திக் கொண்டிருந்தாள். குழந்தையின் தலைமயிரின் கறுப்பு மாத்திரம் அதிலிருந்து எட்டிப் பார்த்தது. பின்னாலேயே அவள் இறங்கினாள். கைய கலத்திற்குப் பெரிது பெரிதாய் நீலப்பூக்கள் அச்சடித்த வெள்ளைப் புடைவை. வெட்கமும் சந்தோஷமும் குழம்பும் கண்கள்.''

''அஞ்சனா—அஞ்சனாட்சி. முகத்தில் பாதியை அடைத் தாற் போன்ற பெருவிழிகள். அவள்தான். ஆனால் ஏதோ ஒரு தினுசில் மாறிப் போயிருந்தாள்.''

எங்கே? எப்படி? பிடிபடவில்லை. உடலில் தனியாய்த் தெரியும் குழைவிலும் தளதளப்பிலுமா? பிள்ளை பெற்ற வளுக்குத் தனியாய்ச் சேர்க்கும் செளக்கியத்தின் விளைவினால் இருக்கும்; ஆனால் அது இல்லை. இது அஞ்சனாதான். ஆனால் அன்று சினிமாவிலிருந்து திரும்பி வரும் வழியில் சோடாவைக் கண்ணாடித் தம்ளரில் சீப்பிக் குடித்த அவள் அல்ல. இந்த நரக வேதனையைச் சகித்துக்கொண்டு யாருக் காகக் காத்துக் கொண்டிருந்தானோ அவள் அல்ல. கண்ணெதி ரில் சீட்டை மாற்றிவிட்டாற் போல் புரியாத ஏமாற்றம் நெஞ் சடியில் நச்சரித்தது. ஏற்கெனவே தன்னை அவளுக்கு இழந்த தல்லாமல் இந்தப் பிள்ளைப்பேற்றின் மூலம் அவளிலும் ஒரு பகுதியை இழந்துவிட்டாற் போலிருந்தது. ஆனால் அது எது?

இந்தத் தவிப்பு தனக்கே புரியவில்லையே; பிள்ளைக்குத் தெரியபடுத்த முடியுமோ?......

"மேல் கதை! மேல் கதை!"

"அவர்கள் ராஜா ராணியல்ல. ஆனால் அவர்கள் குழந்தை ராஜகுமாரனாய்த்தான் இருந்தான். செக்கச் செவே லென்று கொழு கொழுவென்று குண்டு ராஜா. அடர்ந்த மயிர் இப்போதே, கண்களின் மேல் வழிந்தது அப்பா, கண் களா கண்கள்! கண்ணா, நிஜமாய் அவ்வளவு அழகான கண்கள் இருந்திருக்கவே முடியாது. பெற்றவர்களின் கண் களால் மாத்திரம் பார்த்த கண்களல்ல அவை; கண்களில் கண்கள்—"

"அப்பா, நீ சொல்கிறது புரியவில்லை அப்பா, ஆனால் சொல்கிறது என்னவோ பண்ணுகிறது அப்பா, புரிகிறாப் போல—அப்புறம் என்ன?"

"குழந்தையைப் பார்த்துக்கொள்ள அவளுக்குப் பொழுது போதவில்லை. இத்தனைக்கும் அவள் தாய்தான் குழந்தைக் காரியங்கள், வீட்டுக் காரியங்கள் அனைத்தும் கவனித்துக் கொண்டிருந்தாள். அத்துடன் பெண்ணையும் அடை காத்துக் கொண்டிருந்தாள். அவன் மாமியாருக்குக் கோபம். கைக் குழந்தைக்காரியை இன்னும் நான்கு மாதங் களுக்குப் பிறகு அனுப்பத்தான் இஷ்டம்."

'இந்தக் காலத்துச் சிறிசுகளையே என்ன புரிந்துகொள்ள முடிகிறது? அவர்களுக்குத்தான் என்ன தெரிகிறது? நாங்கள் எல்லாம் இப்படித்தான் இருந்தோமா, என்ன? பெரியவர்கள் எதைச் சொன்னாலும் நல்லதுக்குத்தான் சொல்வார்கள் என்று ஒரு நம்பிக்கை, பக்தி, மரியாதை—ஊ—ஊம்; அதெல்லாம் ஏது இப்போது? பத்துப் பேர் சேர்ந்து ஒரு குடும்பம் நடக்கிற இடத்திலே ஓர் அகமுடையான் பெண் டாட்டி என்று தனியாய் ஒரு கடிதாசை எழுதிவிட முடியுமா என்ன? அப்படியேதான் அகமுடையான் எழுதினால் பெண் டாட்டிக்குப் படிக்கத் தெரியுமா? என்னவோ மாற்றி மாற்றி இவர்களே கடிதாசு எழுதிக்கொண்டு இவர்களே ஏற்பாடு பண்ணிக்கொண்டு. அவர்தான் இவளை வரச் சொன்னாரா? இல்லை, இவள்தான் அவரைத் தூண்டினாளா? எதை நம்ப

முடிகிறது? என் வீட்டில் எனக்கு மலையாய்க் காத்துக் கிடக்கிறது. இங்கு வந்து நான் உட்கார்ந்திருக்க வேண்டுமா?'

"தன் கண் மறைவில் அவள் பெண்ணை விட்டு வைக்கவில்லை. திடீரெனக் கொல்லை ரேழியிலிருந்தோ, சமையலறையிலிருந்தோ, மாடி வளைவிலிருந்தோ தோன்றுவாள். அவனுக்கு ஒரொரு சமயம் சிரிப்பு வந்தது. அவன் பாட்டி நினைவு வந்தது. அவள் கூடத்தில் படுத்துக்கொள்ளு முன் எல்லோருக்கும் கடைசியில் உரக்கக் கூவுவாள்—

**"பரதர் பக்கத்திலே காவல்**
**அனுமார் அண்டையிலே காவல்,**
**ஐயனார் ஆனைமேல் காவல்,**
**கறுப்பண்ணா குதிரைமேல் காவல்,**
**பாம்புகளா, பூச்சிகளா, பேய்களா, பிசாசுகளா,**
**தூரத்தூரத் தூரத்தூரத் தூரத்தூரத்—"**

"அது மாதிரி, இந்த மாமியார் காவல். எதுக்குக் காவல்?

"ஒரு நாள், குழந்தைக்குக் குளியானதும் கூடத்தில் தொட்டிலில் வளர்த்துவிட்டு அதற்கு அரைத் தூக்கத்தில் கண்கள் செருகுவதைத் தலையைச் சாய்த்துப் பார்த்துக் கொண்டு தொட்டிலடியில் உட்கார்ந்திருந்தாள். ஏற்கெனவே பாப்பா நல்ல சிவப்பு. எண்ணெய்க் குளிக்கும் அதற்கும் அதன் முகம் முழுத்தக்காளிப் பழம்போல் இருந்தது.

"மௌனமான ஓர் அழைப்பு அவள் நெஞ்சைத் தட்டியது.

"திரும்பினாள். கூடத்து அறை வாசற்படியில் அவன் நின்று கொண்டிருந்தான். புருவங்கள் நெரிந்து, முகம் சுண்டிப் போயிருந்தது. ஏதோ அடிவயிற்றிலிருந்து எழும்பித் தொண்டையை அடைத்தது. சுற்றுமுற்றும் பார்த்தாள். எழுந்து, அவன் விரிந்த கைகளின் அணைப்புள் சென்றாள். அவன் அப்படியே அவளை அறைக்குள் இழுத்துக்கொண்டான். ஒரு மாபெரும் குடலையிலிருந்து பூக்கள் சரிந்து அவன் மேல் விழுந்தன. அவற்றின் மிருதுவில் அவன் புதைந்து

போனான். கண்கள் செருகின. உடலோடு உடற்குறைவில் எத்தனை கேளாக் கேள்விகளுக்குச் சொல்லாப் பதில்கள் கிடைத்துவிடுகின்றன! தீராத சந்தேகங்கள் தீர்ந்து ஆறாத புண்கள் ஆறி விடுகின்றன! ஆனால் ஒரு கேள்வி மாத்திரம் பாம்பின் படம் போல் தலையைத் தூக்கிக்கொண்டு நின்றது. (அதனால்தான் பூக்கள் இருக்கும் இடத்தில் பாம்பு இருக்கும் என்கிறார்களா)?

''இது நிஜமா, பொய்யா?

''கனவா, நனவா?

''நான் தூங்கிக்கொண்டிருக்கிறேனா, விழித்துக்கொண் டிருக்கிறேனா?

'வீல்' என்று தொட்டிலிலிருந்து ஓர் அலறல்.

''அவனுள் எழுந்த அந்தக் கேள்வியே அவர்கள் கழுத்தில் ஒருங்கே கொடூரத்துடன் விழுந்து மாட்டி, சந்தேகமில்லாத நனவுக்கு இறக்கி இழுத்தது.

''இருவரும் வாசலை அடைந்த அந்தச் சமயமே குழந்தை மார்பின் மேலிருந்து ஒரு காகம் கத்திக்கொண்டு எழும்பிச் சிறகுகளை அடித்துக்கொண்டு சென்றது.

'க—ண்—ணா!'

''கண்ணனுக்கு மூச்சுத் திணறிற்று. மூர்க்கமான முத்தமாரி அவன் கண்களிலும் மூக்கிலும் கன்னங்களிலும் பெய்தது.

''அவள் அவன் கால்களைக் கட்டிக்கொண்டு விக்கி விக்கி அழுதாள்.

''கூடத்தில் விளக்கைப் போட மறந்துவிட்டதால், இருள் அங்கே தேங்கிற்று. குத்துவிளக்கின் சுடர் மாத்திரம் இருளில் துளிர்த்து, தனியாய், அசைவற்று, மௌனமாய்ச் சாட்சி நின்றது.''

''என்னப்பா? பாப்பாவுக்கு என்ன ஆச்சு?''

''குழந்தையைத் தொட்டிலில் போட்டிருந்தது. அப்பா அம்மாவை அவசரமாய்க் கூப்பிட்டாரா? அம்மா போனாள். அதற்குள் ஒரு காக்கை குழந்தை முகத்தைப் பழம் என்று

நினைத்துக்கொண்டு கண்ணைக் கொத்திவிட்டுப் போய் விட்டது.''

''ஓ!''

சொல்கிற கதையில் அதற்குமேல் என்ன சொல்ல முடிகிறது?

''கட்டுக் கட்டி மருந்தில் மயங்கிக் கிடக்கும் மகனின் இரு பக்கத்திலும் இருவரும் நின்றுகொண்டிருந்தனர். அழுது அழுது அவள் முகம் வீங்கிவிட்டது. அவன் தலை குனிந்தான். அவனால் அவளைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியவில்லை.

''சொல்லாத வார்த்தைகளில் மௌனம் சமுத்திரமாய்க் கடைந்து கண்ணுக்குத் தெரியாத பொறிகள் எழும்பிப் பறந்து இருவரையும் ஊடுருவின. இதயங்களில் முள் முள்ளாய்த் தைத்துப் புதைந்து தகித்தன.

''அவளுக்குத் தாங்க முடியவில்லை. முன்றானையை வாயுள் திணித்துக்கொண்டு அறையைவிட்டு ஓடினாள். அவன் அவள் பின்னால் சென்றான். வாசலுக்கு வெளியே அவள் கீழே விழுந்து புரண்டு அடிவயிற்றைப் பிடித்துக் கொண்டு அம்பு பட்ட மாதிரி துடித்துக் கொண்டிருந்தாள்.

''அவன் அவள்மேல் குனிந்தான். அவள் சீறி, அவன் கையை உதறித் தள்ளினாள். அவள் விழிகள் முகத்தைவிட்டு வெளிவந்து விடும்போல் பிதுங்கின. பெரிய கருவிழிகள், செந்நரம்புக் கொடிகளின் நடுவில் சுழன்றுவிட்டாற்போல் நடுங்கின.

''அவளைப் பார்த்துக்கொண்டு மௌனமாய் நின்றான். அவன் கண்கள் ஆறாய்ப் பெருகின.

''ஆனால், அழுதாலும் எத்தனை நாள் அழ முடியும்? கண்ணீர் வறண்டபின்?''

கண்ணீர் வறண்டபின் மௌனம். வறண்ட காலி மௌனம். எவ்வளவுக்கு எவ்வளவு மூர்க்கமாய் அழுகை உடலை அலைத்ததோ, அவ்வளவுக்கு அவ்வளவு ஓய்ந்த மோனம் கவ்வி அழுத்திற்று. விரிந்து அகன்ற பெரிய பாலை

மோனம் வலியிலும் ஜுர வேகத்திலும் வீரிடும் குழந்தையின் வீரல்கூட அந்த மோனத்தைக் கலைக்கமுடியவில்லை. பெரிய கழுகுபோல் இருவர் மேலும் மௌனம். தன் அகன்ற இருள் சிறகுகளை விரித்துக்கொண்டு காத்திருந்தது.

''ஒருவருக்கொருவர் திசை தப்பிப் போனபின் அவன் கண்கள் சதா திசை தேடி அலைந்தன, அவன் கண்களில் தீராத கேள்வி குடிகொண்டது.

''நான் தூங்கிக்கொண்டிருக்கிறேனா, விழித்துக்கொண்டிருக்கிறேனா?''

''வாசலுக்கு வாசல் எதையோ பறிகொடுத்துவிட்டவன் போல் தயங்கித் தயங்கி நின்றான். இந்த வீடு இவ்வளவு பெரிய காடா என்ன? இதுவரை எப்படித் தெரியாமல் இருந்தது? குழந்தையும் அவளும் இருக்கும் அறையுள் எடுத்து வைக்கக் கால் அஞ்சிற்று. வாசலுக்கு இந்தண்டையே நின்றான்.

''கட்டுக் கட்டிய கண்களுடன் குழந்தை அவள் மடியில் கிடந்தது. காங்கையடிக்கும் அவள் கண்கள் காலியாக இருந்தன. மயிர் பழுப்பேறிப் புழுதி படிந்திருந்தது. மார்புத் துணி நழுவியதோ, ரவிக்கை முடிச்சு அவிழ்ந்திருப்பதோ அவள் அறியாள். அவள் பைத்தியமா? யோகினியா?''

''அவன் விழியோரங்களில் முட்கள் பிடுங்கின.

''காக்கை பிடுங்கியது ஒரு கண்ணேயானாலும் அந்த அதிர்ச்சி மறு கண்ணையும் தாக்கிவிட்டது. ஆகையால் இரண்டு கண்களுமே பாதிக்கப்பட்டுவிட்டன என்று வைத்தியர்கள் கூறிவிட்டனர்.

''அவன் மாடிப் படிக்கட்டின் வளைவில் சிறை கிடந்தான், அவள் இருக்கும் அறைக் கதவு மெதுவாய்த் திறந்தது. அவள் தள்ளாடி நடந்து வந்து கூடத்தில் நின்றாள். அவள் முகம் அண்ணாந்து மெதுவாய்க் கூடத்தின் மூன்று பக்கங்களிலும் திரும்பிற்று. அவளுந்தான் எதையோ தேடிக் கொண்டிருந்தாள். தன்னையா?

"கூடத்தின் மூன்று பக்கங்களிலும் அடுக்கடுக்காய் மாட்டியிருக்கும் படங்களிலிருந்து வெவ்வேறு கடவுள்கள் அவளை எதிர்நோக்கின. அவையுந்தான் எதையோ தேடிக் கொண்டிருந்தன. அவளையா?

"காங்கை யடைந்த அவள் கண்கள் திகைத்தன.

"தேடியது அகப்படவில்லை. கல்லைக் கட்டிய கால்களை இழுத்துக்கொண்டு அறைக்குள் சென்றாள்.

"கூடம் மறுபடியும் வெறிச்சென ஆயிற்று.

'தெய்வமே, எல்லா நியாயமும் தெரிந்த உனக்குக் கண்ணில்லாமல் போய்விட்டதா?'

நியாயத்துக்குக் கண் கிடையாது. அதுதான் அதன் நியாயம்.

'உனக்குக் கண்ணில்லாததால் என் குழந்தைக்கும் கண்ணை அவித்துவிட்டாயா?'

குழந்தைகள் தெய்வத்திற்குச் சமானம்.

'தெய்வமே! தெய்வமே! தெய்வமே! நீ இருக்கிறாயா?'

'நான் இல்லாத இடத்தைச் சொல்லு.'

"குழந்தையின் இரு பக்கங்களிலும் இருவரும் நின்றனர். அதற்குக் கண்ணையும் கட்டி, கழுத்துவரை சிவப்புக் கம்பளியையும் போர்த்தி மூக்கில் ரப்பர்க் குழாய் வழியாகப் பிராணவாயுவை நர்ஸ் செலுத்திக்கொண்டிருந்தாள்.

"கொர்—கொர்—கொர்—மூச்சு முரடிற்று.

"அவள் கண்கள் குழந்தையையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தன. அவன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். விஷயம் அழுகை, கோபம், ஆயாசம், பாசம் எல்லாவற்றையும் கடந்துவிட்டது. இருவர் நெஞ்சிலும் ஒரே எண்ணந்தான் ஓடிற்று."

'கண்ணா! என் கண்ணே, நீ போய்விடு. எங்கள் பாவத்தை நீ அநுபவிப்பது போதும். இப்படி இருக்கிறதை விட இப்போதே போய்விடுவதுதான் நல்லது.'

"ஆனால் அவர்கள் பிரார்த்தனைப்படி அது நிறைவேறுவதாக இல்லை.

"அந்தப் பூ உடலில்தான் சாவையே எதிர்த்துப் போராடித் தன்னிடமிருந்து உதறித்தள்ளும் அவ்வளவு உரம் எப்படி ஒளிந்துகொண்டிருந்தது. பெரியவர்களுக்கு அவ்வளவு சக்தி உண்டோ? அது மூச்சுக்குத் திணறும் ஒவ்வொரு முக்கலும், உடல் புரளலும், கைகால்களின் உதைகளும் மல்லனின் முயற்சிகளாய் இருந்தன. இந்தப் போராட்டத்தில் வைத்தியர்களையே வியக்க அடிக்கும் ஒரு மகத்துவம் இருந்தது. ஆத்மீகம் பொலிந்தது. உயிர்க் கொள்கையின் உருவம், காரணமான உருக்கொண்டாற் போலிருந்தது.

"பிறகு ஒரு நாள்.

"அவள் மடியில்தான் குழந்தை கட்டுக் கட்டிய கண்களுடன் தூங்கிக் கொண்டிருந்தது. அவன் பின்னால் கை கோத்துக்கொண்டு அவள் அருகே நின்று கொண்டிருந்தான். ஆயுளுக்கும் ஒருவருக்கொருவரும் அவரவர்க்கும் விடுதலையின்றி விதிக்கப்பட்டவர்களாய்த் தப்ப வழியின்றி ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு...இன்னும் இது மாதிரி எத்தனை காலம்?

"அப்பொழுது பாப்பா கல்லென்று சிரித்தது. முன்பின் அறிகுறியின்றித் திடீரெனக் கைகால்களை உதறிக்கொண்டு, 'கல்'லென்று ஜலத்தில் கல்லை எறிந்தாற்போல் வாய் விட்டுச் சிரித்தது.

"அவனுக்கு ஒரு மூச்சுத் தப்பிற்று. ஆண்டவன் திடீரென்று இழைக்கும் ஆச்சரியத்தில் அச்சம், வியப்பு, பரவசத்தில். தன்னை இழந்துவிட்டவனாய் அவன் உடல் கிடுகிடென ஆடிற்று. குழந்தையை வெறித்த கண்களுடன் மெதுவாய்ச் சறுக்கிக் கீழே உட்கார்ந்தான்.

"பாப்பா எதைக் கண்டு சிரித்ததோ? ஆண்டவன் எந்தத் தாமரையை அதன் கனவில் காண்பித்தானோ?

அல்லது அவர்களுடைய விதரணையற்ற துக்கத்தைக் கண்டு தான் சிரித்ததோ?

"ஆனால் இந்தச் சிரிப்பைப் போல் இவ்வளவு மதுரமான, அர்த்தம் மிகுந்த தைரியமான ஒலியை, இதுவரை ஜன்மத்திற்கும் கேட்டதில்லை. ஆளுக்கு, ஆயுளுக்கு ஒரு முறை தான் அசரீரி, வாக்கு, இவற்றைக் கேட்க முடியும். அதுதான் உண்மையான அசரீரி. உண்மையான வாக்கு.

சிரிப்பவர் சிரிக்கட்டும்.

அழுபவர் அழட்டும்.

இறப்பவர் இறக்கட்டும்.

இருப்பவர் இருக்கட்டும்.

நான் இயங்கிக்கொண்டே இருக்கிறேன்.

இருந்தேன், இருக்கிறேன், இருப்பேன்.

இது என் இயற்கை.

என் இயற்கையே என் நியதி.

அவள் குமுங்கித் தனக்குள்ளேயே பிசுபிசுத்துப் போனாள். அவள் உடைந்து உள்ளுக்கு அமுங்கிப் போவதைக் கண்டு அவள் மேல் சாய்ந்து அவளைத் தாங்கிக்கொண்டான்.

"கண்ணீர் உடைப்பெடுத்துக் கொண்டதும் காவேரியைக் கண்ட மாதிரி இருக்கிறது. உயிரின் ஊறலுக்கு வேறு எது அடையாளம்?"

சுவாமி விளக்குக்கூட குளிர்ந்துவிட்டது. கூடத்தில் கும்மிருள் சூழ்ந்திருந்தது. அவனுக்குத் திடீரென்று ஓரே அசதியாக இருந்தது. அவள் பெருமூச்சுடன் எழுந்து விளக்கைப் போட்டாள்.

பையன் அப்பா மடியில் தூங்கிக் கொண்டிருந்தான். சிந்தனையோடு கலந்த இந்தக் கதையை அவன் எவ்வளவு தூரம் கேட்டானோ, புரிந்து கொண்டானோ? பையனைத் தோள்மேல் சார்த்திக்கொண்டு மாடியேறிச் சென்றான். பின்னால் அவள் தொடர்ந்தாள். 'மாடியேறுவது கஷ்டமாக இருக்கிறது. இனிமேல் ஒரு நாளைக்கு இரு முறை வரைதான் அடக்கிக்கொள்ள வேண்டும்.'

கட்டில் மேல் கிடத்தினதும் பையன் தூக்கக் கலக்கத்தில் ஏதோ முனகிப் புரண்டான். இருவரும் அவனையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

"அப்பா!"

"என்ன கண்ணா!" இருவரும் சேர்ந்து அவன்மேல் குனிந்தனர். தலைகள் மோதிக்கொண்டன.

"அப்பா, இந்தத் தடவை அம்பிப் பாப்பா பிறந்ததும் அவனை நானே பார்த்துக்கொள்வேனா அப்பா?"

"ஆமாம் கண்ணா!"

"நானே தொட்டிலை ஆட்டுவேன்!"

"ஆமாம், கண்ணா!"

"எந்தக் காக்கையும் வராது."

அவர்களுக்குப் பேச்சு எழவில்லை. ஆனால் பதிலுக்கு அவன் காத்து இல்லை. உறக்கத்தில் அழுந்திப் போனான்.

# 4. இதழ்கள்

"—பா!"

"_____"

"—ப்பா!"

"_____"

"—ப்பாவ்!!"

"என்னடா, சும்மா தொந்தரவு பண்ணிக்கிட்டு?"

"சோறு துண்ண வாயேன்!"

"நான் வல்லே போ!"

"ஏம்பா கோவம் பண்ணிக்கிறியே!"

"ஒன் மேலே எனக் கொண்ணும் கோவம் இல்லே போ.

"ஆத்தா மேலே தானே?"

"_____"

"என்னப்பா சும்மாருக்கியே?"

"_____"

"அப்பா எனக்குப் பசிக்குதே!"

"பசியெடுத்தா நீ போய்த் துண்ணு. ஆத்தாளைப் போடச் சொல்லு."

"நீயும் வாயேன்."

"நான் வல்லே."

"எண்ணைக்கி அப்பா ஒன்னே விட்டுட்டு ராவுலே துண்ணுருக்கேன்?"

"பரவால்லே; இண்ணைக்குத் துண்ணு."

"பகலாவது வேலே மேலே பூடுறே. சேந்து குந்தரதில்லே. ராவுலே எண்ணைக்கப்பா ஒன்னே விட்டுட்டு துண்ணுருக் கேன்?"

எலும்பு உருகி மார்பின் உள்சுவரில் வழிந்தது.

"சரிதாண்டா போ—"

பையன் பதில் தொடுக்கவில்லை. எதிரே பஸ் வண்டிகள் சாரி சாரியாக நின்றன.

பாலம் தாண்டியதும் ரோடில் ஜனநடமாட்டத்தின் ஓயாத, தனித்தனியான சப்தங்கள். புரியாத இரைச்சல் இயங்கிற்று. எண்ணற்று விதவிதமாய் அசைவற்றும், அசைந்து கொண்டும் எரியும் விளக்குகள் புள்ளி புள்ளியாய் ஒன்றை யொன்று துரத்தின. அந்த வெளிச்சத்தில் பாலத்தின் இறக்கத்திலிருந்து எழும்பினாற் போல் தெரியும் வான விளிம்பு, தகடின் அடிப்பாகம்போல் மங்கிய ஒளி விட்டுக்கொண்டிருந்தது. பாலம் இறங்கினால் அங்கத்திய உலகமே வேறே தான். அது பட்டணம். இது குப்பம். குடிசைகளின் கூரைகளிலிருந்து புகை சுருண்டெழுந்தது.

குழாயடியில், பெண்களின் சண்டைகளில் ஒருவருக்கொருவர் வேகமாய் வாய்மாறும் வசை மொழிகள் வெடித்துத் தெறித்தன.

முன்பின் அறிகுறியில்லாது திடீரென ஒரு கார் ரோடில் பறந்தது. அதன் பின்னாலேயே தோகை மாதிரி புழுதிப்படலம் எழுந்து, கண்ணிலும், வாயுள்ளும், மூக்கிலும் புகுந்தது.

பையன் லொக்கு லொக்கு என்று இருமுறை இருமினான். சாபம் நாக்கில் எழுந்தது. சொன்ன நாக்கையே நறுக்கும் கூரில் ஒரு வண்டை வார்த்தை.

"இந்த டைவர் ஒரு நாள் எங்கிட்டே மாட்டிக்கப் போறான்."

"என்னா செய்வே?"

"என்னா செய்வேண்ணு அப்போல்ல தெரியும்! தலையே தம்பிடி பண்ணிடுவேன்."

"ஓஹ்ஹோ!"

"ஆமா, நம்மை என்னாண்ணு நெனச்சூட்டே? அவன் மேலே நான் கரு வெச்சூட்டேன்பா—கரு வெச்சூட்டா தீத்துடணுமாமேப்பா? மெய்யாவாப்பா?"

"யார் சொன்னது?"

"செங்காலி. கரு வெச்சா தீத்துடணுமாம். இண்ணைக் கில்லாட்டி எண்ணைக்காவது."

"எண்ணைக்காவதுன்னா எண்ணைக்கு?"

"அது மாதமோ, வருஸமோ, செத்துப்பூடறத்துக் குள்ளே எண்ணைக்கோ தீத்துக்கணும்; இல்லாட்டி ஆவி வேவாதாம்—"

"அப்படி என்ன செய்தான் உன்னை?"

"யாரு?"

"அந்த டைவர்தான்."

"ஓ அதுவா? அண்ணைக்குப் பாலத்து இறக்கத்திலே மோட்டார்காரை நிறுத்திவெச்சுட்டு டீகடைக்குப் போயிருந் தாம்பா. நான் செங்காலியோட வெள்ளாடிட்டிருந்தேன்.

"டேய், அந்த மோட்டார்காரைப் பாத்தியான்னான்." அப்பா நீ இந்தக் காரை பாத்தில்லியே?"

"எத்தனையோ மோட்டாக்காரு ஒண்ணா நெண்டா?"

"நீ இந்தக் காரைக் பாத்தில்லே. நாளைக் காலிலே காட்றேன் பாரு. நீளமா சுமா வயவயன்னு-ஆ! அண்ணைக்கு செங்காலி அப்பனும் நீயுமா, கட்ட மரத்துப் பின்னாலியே 'போட்'டாட்டமா ஒட்டியாந்தீங்களே ஒரு ராச்சஸ மீனு, அது மாரிதி...சுமா வயவயன்னு மூஞ்சிலே நெண்டு லைட்டு முழியாட்டம் முழிக்கிது. நான் அதன் ஒடம்பெ தொட்டுப் பாத்துட்டேருந்தேன். ஆசையா இருந்துச்சிப்பா! அப்போ புட்டத்துலே பட்டுனு ஒரு உதை விளுந்துச்சுப்பா. கீளே வியந்துடற மாதிரி கால் அப்படியே மடிஞ்சு போச்சு. 'யம்மாடி'ன்னு கத்திட்டு திரும்பிப் பார்த்தேன்; யமனாட்டம் நிக்கிறான்!"

"யாரு?"

"டைவர்தான், அப்படியே நாக்கை கெட்டியா கடிச் சுட்டு கரு வெச்சுட்டேன். அப்பா நான் சொல்றேன் பாரு, ஒரு நாள் அவன் கொத்து மீசைலே வத்தி வெச்சுடப் போறன்."

"சரி"

"ஒரு நாளைக்கு அவன் தூங்கிட்டிருப்பான். கல்லே தூக்கி வந்து அவன் மண்டையே நறுக்கிடப் போறேன், மீன் மண்டையே குளம்புக்கு நொறுக்கற மாரிதி".

"சரி"

விண்ணில் மீன்கள் விழி விழியாய்ப் பிதுங்கின.

"அப்பா"

"—"

"இண்ணைக்கி ஆத்தா மீன் குளம்பு காச்சியிருக்கிது. உனக்கு பிடிக்குமே, எனக்கும் பிடிக்குமே!"

(மீன் புடிச்சா, சும்மா மீன் குளம்பு மீன் கறி, மீன் பொரியல், மீன் வறல் பின் என்ன இருக்கும்?)

"அப்பா இன்னிக்கு நான் புடிச்ச மீனை ஆத்தா குளம்பு காச்சிருக்குது. நீ துண்ணுதான் ஆவணும். நான் முதல் பிடிச்ச மீன் இண்ணைக்கி!"

"வலையன் புள்ளே வலையன்தான். கலேட்டர் புள்ளே ஆயிடுவியா?"

"கலேட்டரா? அப்படீன்னா?"

"எனக்கும் தெரியாது. ஆனால் இப்போ சொன்னியே அந்த மோட்டாக்காரிலே சொந்தமா பின்னாலே ஏறிக் குந்தி சவாரி போனானே, அவன்தான் கலேட்டர்."

"அவனேப் பத்தி நமக்கென்னப்பா இப்போ? நான் இப்போ சொன்னேனே இந்த மீனு. இது அலைமேலே தள்ளி வந்து மணல்லே அப்படியே சொருவிக்கிட்டுது. மூஞ்சி தெரியல்லே. கரைமேலே நான் நண்டு துரத்திட்டிருந்தேன். அப்போ வாலு மாத்திரம் நெண்டு இலை முளைச்சாப்பிலே வெளியிலே நீட்டித் துடிச்சுட்டிருந்தது. என்னாதுன்னு புடிச்சு இளுத்துப் பாத்தா, மீனு! நல்ல அயகு அப்பா. மின்னாலே நீலம். பின்னாலே செமுப்பு. நடுவுலே வெள்ளை. சூரியன் முளைக்கறதுக்கு முன்னாலே கடல் மேலே மானம் டாலடிக்குது பாரு அப்பா : அது மாதிரி. இன்னும் உசிர் போவல்லே, வாயை ஆவ் ஆவ்னு தொறந்து தொறந்து மூச்சுக்குத் தேடித் தவிக்குது. அதும் கண்ணை நெனச்சமா கஸ்டமாயிருக்குது அப்பா! கஞ்சிப்பானைக் கூடையோடே

உனக்காகத் கரை மேலே காத்திட்டிருந்தா ஆத்தா. இதா பாரம்மான்னு கையிலே புடிச்சுக்கிட்டு ஓடினேன். என் கிட்டேயிருந்து புடுங்கி கூடையிலே போட்டுக்கிட்டு ஆத்தா என்னை அப்படியே இஸ்து கட்டி அணைச்சுக்கிட்டது. அந்த மீனு ஆம்பிட்டா நொம்ப நொம்ப அதிஸ்டமாம்பா!''

(நம்ப அதிஸ்டம்தான் தெரிஞ்சிருக்குதே இண்ணைக்கு. இண்ணய சண்டையே அதிலேருந்துதானே மொளைச்சுது. இண்ணக்கி விரிச்ச வலை கனமாயிருக்குதேன்னு இஸ்தா பொத்தக்கூடையும் கோரைக் கொடியும்தான் ஆம்புட்டிச்சு, கட்டை மரத்துலே எட்டு மைல் போய் என்னடா கொண்டு வந்தேன்னா, பொத்தைக் கூடையும் கோரைக் கொடியும்னு சொல்லுதா? வெறுங்கையை வீசிட்டு வந்துட்டாயாக்கும் ஆம்புள்ளைதான் போன்னு மாட்டிக்கிட்டாயா சண்டைக்கு. குப்பத்து வஸ்தாதிங்கள்ளாம் ஒரு கெண்டைக்குத் தந்தானம் போட்டபோது, சுறாவும் எறாவுமா போர் போராக் கொண்டு வந்ததெல்லாம் இண்ணய ஒரு நாள் வெறும் வலையிலே துடைச்சிப் போச்சு, ஆம்பிள்ளைங்க பொளப்பே இவ்வளவு தானே? விளக்கு மொளச்ச வேளைக்குத் தண்ணி மேலே போனா, வெள்ளி மொளைக்கிற வேளைக்கு உசிரோடவோ முளுசாவோ திரும்பி வரது நிச்சயமில்லே. இந்தப் பொளப்பு அப்டி. உசிரே கொடுத்து உசிர் புடிச்சுக் கொணாந்தா கரை மேலே வெசவு கொடுத்து வாங்கிப்பாங்க. வாங்கி கடேலே போய் வித்து வித்து, கைக்கும் காலுக்கும் பொன்னும் வெள்ளியுமா வாங்கி வாங்கிப் பூட்டிக்கிறப்போ அந்த புருஸன்காரன் வேண்டித்தான் நிக்கிது. என்னமோ ஒரு நாளிக்கு வெறும் கையோட வந்துட்டேன்னாம்.)

''என்னாப்பா மொண மொணன்றியே?!'

''வேர்க்கடலை துண்றேன், போடா!''

''என்னப்பா கோவம் பண்ணிக்கிறியே, எனக்குக் கொடுக்காம துண்ணமாட்டே. எனக்குத் தெரியாதா?''

பாறைகள் விட்டுப் போய் உருகும் பயங்கர இன்பம்.

''அப்பா ஒரு நாளைக்கு கூட்டிப் போறேன்னியே!''

''எங்கே?''

“கட்டை மரத்துலே உன்னோடே கூட்டிப் போறேன் னியே.”

“எல்லாம் போலாம் போலாம்.”

“அப்பா பசியெடுக்குது வாயேன்.”

“நீ போ-”

“நீ வா-”

“நீ போ, நான் வரேன் பின்னாலே-”

“நிச்சயமா?”

“வரேன்.”

“நிச்ச்ச்சயமா?”

“வரேன்.”

“மெய்யா வரணும்”

“வாரேன்”

“மெய்ய்ய்யாவா?”

“போடா ஒதிப்பேன்.போறியா இல்லியா?”

“இன்னிக்கு ஏம்பா ஒனக்கு இப்படி கோவம் கோவமா வருது? என் மேலே கோவமா?”

“சரிதான் போடா”

“சொன்னாத்தான் போவேன்.”

“சரி”.

“என்னா சரி?”

“சரி, உன் மேலே கோவம் இல்லை.”

“நம்ம நெண்டு பேரும் எப்பவும் சிநேகிதம் தானே!”

“ஆமா ஆமா ஆமா ஆமா-” தொண்டையில் தொண்டை எலும்பு மாட்டிக் கொண்டு வலித்தது. சந்தோஷத்தில் பையன் முகத்தில் மெல்லியதாய் ஒலிக்கொடி படர்ந்தது.

“சரீப்பா நான் போறேன்.”

“போ.”

x x x x

“ஏம்மா மூலையிலே சுருண்டு படுத்திருக்கிறே? அங்கே என்னடான்னா அப்பன் பிளாட்பாரத்திலே தலைமேலே

துணி போட்டுப் படுத்திருக்குது. இங்கே நீ இப்படி படுத்திருக்கிறே. அம்மா, எனக்குப் பசிக்குதே!''

பசிக்குதுன்னா எடுத்து வெச்சுட்டுத் துண்ணு.''

''அப்பன் வரமாட்டேன்னுதேம்மா!''

''வராட்டிப் போவட்டும். வாவான்னு எங்கே எவங்க அளச்சுக் கொட்டறாங்களோ அங்கே போவட்டும்.''

''ஏம்மா அப்பனை அப்படிப் பேசறே? இது நம்ம வீடு தானே? இங்கெல்லாமே எங்கே அது போவும்?''

''உன் அப்பனை நீயே கொண்டாடிக்க. இந்தப் பங்களாவுலே நீங்க ரெண்டு பேருமா சொவம்மா இருங்க.''

''நீ?''

''என்னைப் பத்தி ஒனக்கென்ன? உன் அப்பனுக்கென்ன? இனிமேல் எனக்கேதான் என்ன?''

ஜலத் தகட்டின்மேல் சிற்றலைகள் நடுங்குவது போல், குரலின் தொனிகள் நடுங்கின.

அவன் அவள் தோளைப் பிடித்துக் குலுக்கினான். அவள் விழிகள் சுழன்றன,

''ஏம்மா அப்படிப் பேசறே? எனக்குத் திகிலாயிருக்குதே!''

அவன் ஒரு சமயம் அலைகளில் விளையாடிக் கொண்டிருந்தான். நாய்க்குட்டிகள் கீழே புரண்டு ஒன்றையொன்று கடித்து விளையாடுவதுபோல். அலைகள் அவன்மேல் மோதி அவனைக் கீழே தள்ளி, காலடியில் மண்ணைப் பறித்து அவனோடு விளையாடின. அப்போது ஒரு பெரிய அலை திரண்டு, சிகரத்தில் நுரை கக்கிக் கொண்டே வந்து, நேரே அவன்மேல் உடைந்து பின்வாங்குகையில், அவனைக் கரையிலிருந்து அடியோடு பெயர்த்துத் தன்னோடு கிர்ரென்று இழுத்துச் சென்றது. அந்தரத்தில் பந்துபோல் மேலும் கீழும் சுற்றிலும் 'தண்ணி' ''அம்மா''ன்னு அலறித் திறந்த வாயுள் 'தண்ணி' புகுந்தது. கண், காது, மூக்கு எங்கும்' தண்ணி'. நான் உசிரோடே இருக்கேனா செத்துப்பூட்டேனா? இரண்டுமே தெரியவில்லை. ஆனால், பூமிலே காலோ கையோ படணும், அவஸ்யமா படணும். அது ஒன்றுதான்

தெரிஞ்சுது.'' நல்ல வேளையாய் இன்னொரு அலை இடை கடைந்து எழுந்து, அந்தச் சுழலிலிருந்து அவனைப் பிடுங்கித் தன்னோடு இழுத்து வந்து அப்படியே மணலில் ஓங்கிக் குப்புற அறைந்தது. ''பெத்தேன் புளைக்சோன்னு'' ஓடி வந்துவிட்டான். ஆனால், அந்தப் பொறி நேரம்—சுள்ளெறும்புக்குக் கண் எம்மாத்தம், அம்மாத்த நேரம், கையும் காலும் பூமியை தொடத்துழாவியபோது நெஞ்சு தவித்த தவிப்பு இப்பொழுது தவித்தது. முன் பின் புரியாத திகில்.

அவள் அப்படியே குப்புறப் புரண்டாள்.

''பின்னே என்ன இருக்குது எனக்கு இந்த வீட்டிலே? அடி, வெட்டு, குத்து, உதை இதுதானே? திருவொத்தியூரிலே திருட்டுச் சாராயம் காச்சிக் குடிச்சுட்டு வந்து, திமிதிமின்னு என்னை திமிக்கிறது! சண்டைக்கிஸ்து, கையில் கண்டதை யெடுத்து மொத்த வேண்டீது; சந்தோஸம் வந்தா அதுக்கு மேலே வந்திருச்சு உசிருக்கே ஆபத்து! இன்னிப் பொளுது எப்படியோன்னு எப்பவும் வவுத்திலே உலையைக் கட்டிட்டு இதென்ன பொளைப்பு? சே, அலுத்துப் போரிச்சு! அலுத்துப் போரிச்சுன்னா போரிச்சு!''

''திரும்பும்மா; என்னைப் பாரம்மா,''—அவளைத் திரும்ப முயன்றான்.

''என்னே விட்டுடு.''

''அம்மா—''

''என்னை விட்டுடுன்னா விட்டுடு, சொல்றேன்.''

''அப்பன் நல்ல மனசு அம்மா.''

''நல்லதாயிருந்தா நீயே வெல்லமா நினைச்சுக் கடிச்சுத் துண்ணுக்கோ.''

''கட்டை மரத்துலே என்னைக் கூட்டிப் போறேன்னு சொல்லிருக்குது—''

''ஆமாம், தான் போய்க் கடலைத் தூரு வாரியாச்சு. உன்னைக் கூட்டிப் போறானாக்கும்!''

''என்னம்மா சொல்றே? புரியுதில்லியே!''

''புரியாது புரியாது; புரியுமா?'' என்று கறுவினாள்.

''மறுபடியும் பாரேன்!''

"சேரிக்குப் பின்னாலே, எருமை மாடுங்க புரளுதே ஒரு குட்டை தேங்கி இருக்குது பார். அதைக் கலக்கறத்துக்குக் கூட உன் அப்பனுக்குத் தெம்பில்லேன்னு சொல்றேன்."

"அட சட்!"—அப்படியே அவனை ஒரு தள்ளுத் தள்ளித் துள்ளியெழுந்தான். எழுந்த வேகம் சுவரோரத்தில் கிடந்த வலைக் குவியலின் மேல் அவளைக் கொண்டு போய்த் தள்ளிற்று. அவனுக்கு வயிறு குமட்டி நெஞ்சில் எதிர்த்தது,

அவள் அவனை ஆச்சரியத்துடன் நோக்கினாள். குடிசையுள் விட்டத்திலிருந்து தொங்கும் அகல் விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் நிழல்கள் அவளைச் சுற்றி ஆவேசங்கள் போல் நர்த்தனமாடின.

அவைகளின் நடுவில் அவள் எழுந்து பாதிச் சாய்வில் உட்கார்ந்தாள். மயிர் பரட்டையாய்ப் பின் மண்டையில் சிறிய பிரபை போல் வளைந்தது.

"என்னடா பட்டாசுத் திரியாட்டம் குதிக்கிறே?"

அவன் பதில் பேசவில்லை. வலைக் குவியலின்மேல் அவன் விழுந்து கிடந்த நிலையில், விரட்ட விரட்ட எதிர்க்கத்திரும்பி பாய்ச்சலில் பதுங்கிய மிருகம்போல் தோன்றினான். கண்கள் திகுதிகுவென எரிந்தன.

"வா வா, கலத்தை எடுத்து வெச்சுக்க. சாப்பாடு போடறேன்."

வீல் என்று அவன் ஊளையிட்டுக் கொண்டே பாய்ந்து வெளியே ஓடினான்.

"எங்கே போறே? வாடா இங்கே!" —தாய்மை திடீரென அவளைப் பயங்கரமாய்க் கவ்வியது.

"டேய்! டேய்!" எனக் கூவிக் கொண்டே பின் தொடர்ந்தாள்.

குள்ளங் குள்ளமாய் உட்கார்ந்திருக்கும் குடிசைகளின் நெருங்கிய வரிசைகளின் நடுவில் சந்து, குறுகி நெளிந்து வளைந்து ஓடிற்று. அதில் நிர்வாணமாய் ஓடும் அவன் உருவத்தின் கோடுகள் மாத்திரம். தெரிந்தன. சுலபமாகவே

நலிந்த தேகம். அதுவும் இப்பொழுது முதுகோடு ஒட்டிப் போன நீண்டு குறுகிய வயிறு. கோவணம் பின்னால் வால் மாதிரி நீண்டு தொங்கி ஆடிற்று. உடல் குலுங்க அவனைப் பின் தொடர்ந்து அவள் ஓடுகையில், அவளுக்குத் திடீரென அவள் பிறந்த ஊரில் தனக்கு நேர்ந்த ஒரு சம்பவத்தின் நினைவு வந்தது.

அவள் ஊர் சரியான பட்டிக்காடு. அதுவும் அவளைப் பெற்றவர்களின் குடிசை ஒரு மூங்கில் காட்டின் விளிம்பிலேயே நின்றது. அங்குப் பகல் வேளையிலேயே பாம்புகள் நடை வழியில் படுத்துறங்கும். மரக்கிளைகளிலிருந்து தொங்கி நெளியும்.

அம்மாதிரி இடத்தில் ஒரு சமயம் நள்ளிரவில் ஜல உபாதையைத் தீர்த்துக் கொள்ள வெளியே வர நேர்ந்தது. அன்று முழு நிலா; பட்டை வீறிட்டுக் கொண்டிருந்தது. காற்றின் அலைச்சலில் மரங்கள் மெல்லிய பெருமூச் செறிந்தன. இலைகளின் நிழல்கள் தரைமேல் இட்ட கோலங்கள் நடுங்கி மிளிர்ந்தன.

அப்பொழுது நாலுகால் பாய்ச்சலில் ஒரு உருவம் காட்டு வெளியில் ஓடுவதைக் கண்டாள். முகம் புரியவில்லை. கால்கள் பாய்ச்சலில் பூமிக்கு மூன்று விரல்கடை உயரத்தில் அந்தரத்தில் நீந்தின. அடர்ந்த வால் பின்னால் நெட்டையாய் விறைத்துக் கொண்டிருந்தது. அது எங்கே அவ்வளவு வேகமாய், அவ்வளவு காரியமாய்ப் போய்க் கொண்டிருந்தது? தெரியவில்லை, ஆனால் அது வேட்டைமேல் இல்லை. அப்படியு ம்ஏன் அவளுக்குத் தோன்றிற்று என்று கேட்டால், அவளுக்குச் சொல்லத் தெரியாது. அது என்ன நாயா, நரியா, ஓனாய் என்று சொல்றாங்களே, அதுவா? இந்த உலகத்திலிருக்கிற எந்த நாலு கால் ஜாதியிலும் சேர்ந்ததாகத் தெரியவில்லை. அதைப் பார்க்கையிலேயே, அவளுக்கு இதுவரை ஒருவரும் பார்த்திராத, பார்க்கக் கூடாததைப் பார்த்து விட்டாற் போன்ற ஒரு பயத்தில் முதுகுத்தண்டு சில்லிட்டது. அது அவளைப் பார்க்கவில்லை. அது எதையுமே பார்க்கவில்லை. தான் ஏதோ ஒரு குறிப்பிட்ட வேளைக்கு முடிக்க வேண்டிய ஏதோ ஒரு

வேலையை, அந்த வேளைக்குள் நிறைவேற்றுவதற்கு விரைந்து கொண்டிருந்தது.

இரவின் தனிமையிலே தான் ஒரு தன்னந்தனியாய் எதிலுமே ஒட்ட முடியாமல் அது தனித்து ஓடுவதைப் பார்க்கையில், சகிக்க முடியாத, சொல்ல முடியாத ஒரு கிலேசம், ஒரு பரிவு, அவள் நெஞ்சை அழுத்திற்று. அது ஓடி மறைந்த பின்னர் அந்த இடத்தில், அதன் தோற்றத்தின் விறுவிறுப்பு அவள் நெஞ்சில் வெகு நேரம் தங்கியிருந்தது.

அவள் பிள்ளை ஓடுகையில் அவளுக்கு அந்த நினைவுதான் வந்தது.

அவள் கூவிக் கொண்டே அவன் பின்னால் வருவது அவன் செவியில் விழவில்லை, அவன் ஓட, அவள் ஓடக் குப்பத்தை விட்டு வெளிப்பட்டு 'ரோடை' அடைந்து விட்டனர்.

''டேய்!''

ரோடின் குறுக்கே விழுந்து அடித்து ஓடினான். அப்பொழுதுதான் அவள் அதைக் கண்டாள்.

''பூம்—பூம்!! பாம்!!! பாம்!!!''

இருளில் பிரம்மாண்டமான விழிகள் இரண்டு, மின்னலின் வேகத்தில் நீந்திக் கொண்டு அவனை எதிர் நோக்கி வந்தன. ராட்சஸ மீன் மாதிரி. அன்று அவள் புருஷனும் செங்காலியின் அப்பனும் கட்டை மரத்தின் பின்னால் கட்டிக் கொண்டு வந்து சேர்த்தார்களே ஒரு ராட்சஸ மீன், அது மாதிரி வழவழ வென வெள்ளி முலாம் பூசிய நீண்ட லாகவமான உடல்.

அவள் அலறினாள்.

''ஏய்யா—ஸூவர்!'' ட்ரைவர் சபித்தான். 'ப்ரேக்கு'கள் 'க்றீச்'சிட்டன.

''ஐயையோ! என் மவனே!;'

கார் முகத்தில் நீட்டிக் கொண்டிருந்த இரு சட்டங்கள் அவள் பையனைச் செண்டுபோல், ப்ளாட்பாரத்தின் மேல் அவள் புருஷன் காலடியில் தூக்கி எறிந்தன.

நாலா பக்கங்களிலிருந்தும் ஈசல் கூட்டங்கள் போல் கும்பல் எப்படியோ நொடியில் கூடிக் காரை மொய்த்துக் கொண்டது.

"எந்தத் தேவடியா மவன்டா அது? உரிங்கடா அவன் தோலை! பெரிய மவுண்ட ரோட்டுன்னு நினைச்சுட்டு ஓட்டறானாம்!"

"ஏனய்யா உனக்குக் கொளத்தை குட்டியிருக்கு தாய்யா?"

"ஏன்யா, இந்தக் காரு உனக்கு சொந்தமில்லியே; நீ டைவர் தானே...?"

"சொந்தக்காரன் மூஞ்சியைப் பாருங்கடா. தூ"—கும்பலுக்கு ஜுரம் ஏறிக் கொண்டே வந்தது,

"அட அப்புறம் சண்டை போடலாம்; குளந்தைக்குக் கொஞ்சம் காத்து விடய்யா—நெருக்காதீங்க—"

பையன் வாயிலிருந்து ஒரு சிறு கத்தல் கூடக் கிளம்பவில்லை. "யெப்—பாவ்—" என்று முனகினான்,

"என் ராசா, இதோ இருக்கேனே!" அவன் குரல் கோரமாய் உடைந்தது. உள்ளே உயிர்ச் சாமான்கள் அடியோடு ஒரு நொடியில் சுக்கல் சுக்கலாய் நொறுங்கிவிட்ட மாதிரி.

"எங்கேப்பா இருக்கே?"

"இதோ இருக்கேனே; கண்ணை முளிச்சுப் பாரு, என் மவனே!—"

பையனால் கண் முழிக்க முடியவில்லை. கைகள் முகத்தைத் தேடித் தடவி விரல்கள் கீழ் உதட்டின் மேல் கவிழ்ந்து படர்ந்த குத்து மீசை மேல் தயங்கி அடையாளம் கண்டு கொண்டன. தகப்பனின் இறுகிய காடைகளின் மேல் எரிநீர் வழிந்தது. வாய்விட்ட வீறலில்லாது மௌனமாய் இம்மாதிரி வெளிப்படும் கண்ணீர் பூமியில் சிந்துகையில்தான், எவ்வளவோ பெரிய கார்கள், ஏழடுக்கு மாடி வீடுகள் படைத்த குடும்பங்கள் பூண்டே இல்லாத நிர்மூலமாகி விடுகின்றன.

"அப்பா! என்னைக் கட்டை மரத்துலே கடல் மேலே கூட்டிப் போறேன்னு சொன்—னீ—ல்—ல?"

அப்படி அவன் சொல்கையிலேயே கட்டுமரத்தில் தனியாய்,கடல்மேல், தரைக்கு எட்டு மைலுக்கப்பால் போய்க் கொண்டிருந்தான். ஆனால் அவனுக்குப் பயமாயில்லை.

அவனைச் சுற்றிக் கண்ணுக் கெட்டியவரை. பல வர்ண, பலஜாதி மீன்கள் மந்தை மந்தையாய் ஆழத்திலிருந்து வெளிப் பட்டு மிதந்து கொண்டிருந்தன. திடீரென்று கட்டு மரத்தி லிருந்து கடலில் குதித்து அவைகளுடன் தானும் ஒன்றாய் நீந்திக் கொண்டிருந்தான். அவைகளின் கனிந்த கண்கள் அவனைப் பட்சத்துடன் நோக்கின. மரத்தின் கிளையைக் குலுக்கினால் போல் அவன் மேல் பூக்களும் பூவின் இதழ்களும் மழை சொரிந்தன.

அவன் உடலிலிருந்து புதிதாய்ப் பூத்துவிட்ட பூவின் மணம் 'கம்'மென எழுந்தது.

அவன் தகப்பனின் கைகளினிடையில் அவன் கசங்கிய பூவாய்க் கிடந்தான்.

# 5. இதழ்கள்

“—உம் ஊம்—பாகி, டைம் ஆச்சு!”

“இதோ வந்தூட்டேன்”

“பாகி, ஜட்கா வண்டி வாசல்லே வந்து நிக்கறது. பட்டணத்து ஜட்கா வண்டிக்காரனோடேயும் உன் தாயாரோடும் எவனும் சண்டை போட்டு மீள முடியாது.”

“எங்கம்மா பேச்சை இழுக்காமே உங்களால் முடியாதா?”

“அப்படி ஆயிடுத்தே! என்ன பண்ணுகிறது?”

“இந்த சமயம் நீங்கள் அவளை மன்னிச்சுடலாம்.”

“ஊம்! ஊம் ‘டைம்’ ஆச்சு—மேல் வேலையைப் பார்.”

“இதோ வந்துட்டேன்.”

“பாகீ, குத்து விளக்குக்கு நமஸ்காரம் பண்ணினையா?”

“அப்பவே பண்ணிட்டேன் அம்மா. இன்னொரு தடவை பண்றேன்.”

“பாகீ, தோட்டத்துலே வேப்ப மரத்திலிருந்து ரெண்டு இலை பறிச்சுண்டு வாயேன். எனக்கு எட்டல்லே. நம்மாத்துலே ரஸம் வைக்கிற ஈயச் சொம்பு மாதிரி கட்டை குட்டையா இருக்கேன், நான் என்ன பண்றது?”

“ஏன் அம்மா இப்படி உங்களையே சொல்லிக்கறேள்? அப்படி ஒண்ணும் நீங்க இல்லை. உலகத்திலே பொறக்கிற எல்லாரும் ஒரே உசரம், ஒரே மாதிரியிருக்க முடியுமா?”

“அட ராமா, தத்வம், தர்க்கம் எல்லாம் அப்பறம் பண்ணலாமே! வாசல்லே ஜட்கா வண்டிக்காரன் நிக்கறான் என்கிறது ஞாபகம் இருக்கட்டும்.”

“இதோ வந்துட்டேன்!”

பாகீரதி பின் கட்டுத் தோட்டத்திற்குப் போனாள்.

“அம்மா, இவளுக்கு நிசமாவே நாளாயிடுத்தோ?”

“நான் சரியாக் கணக்கு வெச்சுக்கல்லே. அந்த நாளுலே நாங்கள் பெத்த மாதிரியிருக்கா இந்த நாள்? நீ என் வயத்

துலே மூணு மாசத்துப் பொறியா இருக்கறபோதே உன் தாத்தா என் மாமனார்—நீ பொறக்கப் போற நாள், வேளை நட்சத்திரம் மொதக் கொண்டு குறிச்சு வைச்சுட்டு அவர் திடுக்குனு கண்மூடிட்டார். ஆனால் அவர் எழுத்துலே விட்டுப் போன வாக்கு மாத்திரம் இம்மிகூடப் பிசகல்லே. "டாண்ணு" மணியடிச்சாப்போலே பலிச்சுது."

"அம்மா, நீ என்னைப் பெத்த பெருமையைக் கேக்கல்லே, இவளுக்கு இப்போ நாளாயிடுத்தோன்னுதான் கேக்கறேன்.'

"யார் என்னத்தைக் கண்டா அப்பா? ஆனால் அந்த நாள் மொதக் கொண்டே 'மழை பெய்யறதும், மக்கப்பேறும் மகா தேவனுக்குக் கூடத் தெரியாது'ங்ககிற வசனம் சும்மாவா வழங்கி வரது?"

"இந்தப் பொம்மனாட்டிகள் கிட்ட மாத்திரம் நேர்க் கேள்விக்கு நேர் பதில் ஜன்மேதி ஜன்மத்துக்கு வராது!"

அம்மாவுக்கு ஆத்திரம் வந்துவிட்டது.

"ஆமா; உன் மாதிரி இங்கிலீஷும் கணக்கும் சட்டதிட்ட மாப் படிச்சுட்டு நிக்கல்லே, உன் இஷ்டப்படி பதில் சொல்ல. எனக்கு இப்படித்தான் பேசவரும். உன் கேள்விக்கு வேறென்ன பதில் சொல்ல முடியும்!"

"சரி சரி; நம்ம ரெண்டு பேரும் சண்டை போட வேண்டாம்.',

பாகீரதி பின் கட்டிலிருந்து வந்தாள்.

"தோ பறிச்சுண்டு வந்தூட்டேம்மா."

"தலைலே வெச்சுக்கோ."

"நீங்க சூட்டிவிடுங்கோம்மா!"

"சரி திரும்பு; நன்னாருக்கு' பூவும் பிஞ்சுமா கொத்தா யிருக்கு. பூவும் காயுமா நீங்க பூக்கற நாள் காய்க்கற நாள் தானே!"

"அம்மா நமஸ்காரம் பண்றேன்."

"சரி பண்ணு. எத்தனை தடவை பண்ணுவே? சும்மா குனிஞ்சு நிமிந்து இப்பொ உடம்பு அலரப்படாது."

"அம்மா, நான் ஏதாவது தப்புப் பண்ணியிருந்தால் மன்னிச்சுடுங்கோ."

''அதெல்லாம் அப்படி ஒண்ணுமில்லே. உலகத்திலே குத்தம் குறையேயில்லாமே ஒத்தரும் பிறந்துடலே. நான் தான் வயசுத் தள்ளாமை காலத்துலே கோபத்திலோ ஆத்தி ரத்திலோ மனசு புண்படப் பேசியிருப்பேன்; அதெல்லாம் நீ மனசுலே வெச்சுக்கப்படாது.''

பாகீக்கு நெஞ்சை யடைத்தது. அப்படியே மாமியாரின் முழங்கால்களைக் கட்டிக் கொண்டாள்.

''அப்படியெல்லாம் பேசாதேங்கோம்மா.''

ஆனால் கிழவி அப்படித்தான் பேசிக்கொண்டு போனாள். வெறி பிடித்ததுபோல் அவள் பார்வை முற்றத்து வெட்ட வெளியில் நிலைத்தது.

''எனக்கெல்லாம் வயசாயிடுத்து. என்னை ஒத்தரும் திருத்த முடியாது. நான் இனிமேல் திருந்துவதாகவும் உத்தேசமில்லை.''

பாகீரதியின் கண்கள் திகிலில் சுழன்றன.

''நான் ஒண்ணும் சொல்லல்லையேம்மா—''

கிழவி தன் எண்ணங்களிலிருந்து மீண்டாள். அவள் பார்வை மருமகள் மேல் குனிகையில் கனிந்தது!

''அட அசடே! நான் உன்னை ஒண்ணும் சொல்லல்லே.''

''ஜட்கா வண்டிக்காரன் ஒரு நாழியாகக் காத்துக்கொண் டிருக்கிறான் என்று நான் விண்ணப்பம் பண்ணிக்கலாமா?''

''இதோ வந்துட்டேனே.''

''பாகீ, இதுவரை எண்ணிண்டுதான் இருக்கேன்; நாலு தடவை 'இதோ வந்தூட்டேன்'னு சொல்லியாச்சு, இன்னும் இடத்தை விட்டு நகர்ந்தபாடில்லை.''

''உங்கள் மாதிரி எல்லாத்தையுமே முள்ளு முனையிலே வெச்சு காரியத்தை நடத்த முடியுமா எங்களாலே?''

''உன்னாலேன்னு சொல்லு. எல்லாப் பொம்மனாட்டி களையும் ஏன் உன் ஸெட்டிலே சேத்துக்கறே? உன்னைவிடத் துள்ளிண்டு துடியாயிருக்கறவா யில்லையா?''

''சரி; என்னாலேன்னு சொல்லிப்பிடறேன். அட ராமா, தொட்டத்துக்கெல்லாம் இந்தத் தர்க்கத்தைச் சொல்லுபடி போகல்லே!''

''உங்க அம்மாவுக்குப் பெண்ணாப் பிறந்தூட்டு என்னைத் தர்க்கம் பண்ணறேன்னு சொல்றையா?''

''இப்பொழுது உங்களுக்குப் பெண்டாட்டி!''

அவள் நேரே அவன் கண்களையே துருவும் பார்வையுடன் பார்த்துக்கொண்டு அம்மாதிரி சொல்கையில் அவனுக்கு அவளைத் தொடவேணும் போல் தோன்றிற்று. வெறுமெனக் கையை மாத்திரம் எங்கே நடுக்கூடத்திலே மறந்து விடுவோமோ என்ற பயத்தில் தன் கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டான். தாழ்ந்த குரலில், ''ஸரஸமெல்லாம் படுக்கை யறையில்; நடுக்கூடத்தில் அல்ல!'' என்றான்.

வெற்றிப் புன்னகையில் அவள் கன்னங்கள் குழிந்தன.

''ஒண்ணாச்சு, இப்போ ரெண்டாகப் போறது; இனிமேல் நம்ம ஸரஸமெல்லாம் எந்தச் சமயத்தில் எங்கே கிட்ட றதோ? கிட்டின வரைக்கும் லாபம்னு நடத்திக்க வேண்டியது தான்.''

''சரி, ரெண்டு குழந்தைகளும் கொஞ்சம் சமத்தா யிருங்கோ; இங்கே நான் கிழவி குத்துக் கல்லாய் இருக்கேன்.''

அந்தரங்கத்தின் அனுஸ்வரங்கள் எந்தச் சமயத்தில் நேரும் என்று சொல்வதற்கில்லை. நள்ளிரவில் தனியிடத்தில் 'நானும் நீயுமடி எப்படி எப்படியுமோடி' என்று இருக்கு மிடத்தில் இல்லாது, பட்டப் பகலில், நாலு பேர் நடுவில் நடுக் கூடத்தில், ஒரு இடுப்பின் அசைவில், ஒரு பார்வையின் ஓரத்தில், ஒரு தோளின் குலுங்கலில், ஒரு கன்னத்தின் குழிவில் ஒளிந்து கொண்டு வெளிப்படலாம். அதன் அழகே அதன் ஸமய மற்ற தன்மையில்தான் இருக்கிறது!

சில பூக்கள் பகலில் பூக்கின்றன; சில இரவில் பூக்கின்றன சில பூக்கள் ரகஸ்யமாய்த் தமக்கே பூத்துக்கொள்கின்றன. தொட்டால் நலுங்கிவிடும் இதழ்கள், கண்ணால் கண்டாலே கசங்கி விடும் இதழ்கள், நெஞ்சின் நினைவில் பட்டாலே நைந்து விடும் இதழ்களும் உண்டோ?

''என்னடா திகைப் பூண்டு மிதிச்ச மாதிரி நின்னுட்டே திடீர்னு?''

"ஒண்ணு மில்லேம்மா; ஏதோ யோசனையிலிருந்துட்டேன்."

"ஜட்கா வண்டிக்காரன் ஒரு நாழியாய்க் காத்திண்டுருக்கான்" என்றாள் பாகீ, குறும்புடன்.

"கிளம்பு—"

"போயிட்டுவரேன் அம்மா—"

"போய் வாம்மா—"

அவர்கள் நடை தாண்டுகையில் பாபூ அவசரமாய் வாசலிலிருந்து ஓடி வந்தான்.

"எங்கே போறே அம்மா?"

பாபுவின் அப்பாவுக்கு ருத்ராகாரம் வந்துவிட்டது.

"அ—ம்—மா!"

"அம்மா!—"

"என்னடாப்பா அ ப ரா த ம் பண்ணிப்பிட்டேன் இப்போ?', என்று கேட்டுக் கொண்டே அவன் தாயார் உள்ளேயிருந்து வந்தாள்.

"இவனை நான் வெளியே அனுப்பிவைன்னு சொன்னேனா இல்லையா?"

"சொன்னே."

"இது ஒரு அபஸவித்து. சமயத்துலே ஏதாவது கெண்டியாயநமான்னு கேட்டு வைக்கும்னு தானே சொன்னேன்!"

"சொன்னே—"

"உன்னை ஒத்தரும் சாக்ஷிக் கூண்டிலே ஏத்திக் கேக்கலே, அம்மா. நீ பதில் சொல்ற லக்ஷணம் அப்படியிருக்கே."

"இப்போ என்னை என்ன பண்ணச் சொல்றே?"

"உன்னை ஒத்தரும் ஒண்ணும் பண்ணச் சொல்லல்லே?" சமயத்துக்கு வந்து நிக்கறானே. 'எங்கே போறே'ன்னு கேக்கறான். பூனைக் குட்டியை மடியிலே கட்டிண்டு நான் சகுனம் பாக்கற அழகு நன்னாருக்கு!"

பாகிக்கு அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. பையனை இழுத்து அணைத்துக் கொண்டு திண்ணையில் உட்கார்ந்து விட்டாள்,

''சரி சரி; இனிமேல் நம்ப கிளம்பினாப் போல்தான்.''

''ஸாரதி, பொறுடா—''

கிழவி முகத்தில் ஒரு தினுசான வெற்றி ஒளி வீசிற்று. அவள் எதிர் குஞ்சுத் திண்ணயில் உடம்பை மெதுவாக இறக்கிக்கொண்டு உட்கார்ந்தாள்.

''பொறு; இதெல்லாம் இன்னி சமாசாரமா, நேத்தி சமாசாரமா? இதுக்கு வயஸே கிடையாது. இது எல்லாம் ஒரு கதை. நீயும் நானும் பிரிச்சு வைக்க முடியுமா? நம்மையெல்லாம் படைச்சு, தனக்குத் தாயும் தகப்பனுமில்லாமல் தனியா இருக்கும் பகவானாலேயே முடியாத காரியம். நம்ம ரெண்டு பேரையுமே எடுத்துக்கோயேன்? நம்மைப் பிரிச்சு வெக்கணும்னு எத்தனை பேர் எத்தனை தினுசா கஜகர்ணம் கோகரணம் போட்டுத் தலைகீழா நின்னு பாத்தா? அவாளாலே முடிஞ்சுதோ? நமக்குள்ளேயே ஒத்தருக்கு ஒத்தர் நெஞ்சு வரைக்கும் ஒத்தரைப்பத்தி ஒத்தருக்கு நெஞ்சீரல் எவ்வளவோ யிருக்கு. சொல்ல முடிஞ்சதும், சொல்ல முடியாததும், ஜதையிலடுக்கற வரைக்கும் வயத்தோடு வெச்சுண்டு கூடவே கொண்டுபோடும் எத்தனையோ விஷயங்கள்! நீ ஜனிச்ச வேளையும் நான் வயறு திறந்த வேளையும் அப்படி. அப்படியும் ஒத்தருக்கு ஒத்தர் விட்டுப் போறதோ! இப்பவும் உனக்கு ஆபீஸில் தலையை வலிச்சா, எனக்கு நெத்தி நரம்பு புடைச்சுண்டு துடிக்கிறது. என் குழந்தை நன்னாயிருக்கணும்னு நினைச்சுண்டு உடனே சக்கரை டப்பாவைத் திறந்து கொஞ்சம் அள்ளி வாயில் போட்டுக்கறேன். ஆனால் பாக்கறவாளுக்கும் கேக்கறவாளுக்கும் 'என்னவோ கிழவிக்கு, சாகற காலத்தில் தித்திப்பிலே பித்துப் பிடிச்சிருக்கு; சக்கரை சுருக்க ஆயிடறதே'ன்னு தோணும். ஆனால் அவாவாளுக்கு ஒண்ணொண்ணு தோணறத்துக்கு நான் என்ன பண்ண முடியும்?''

கிழவி இந்த இடத்தில் பாகியையே பார்த்தும் கொண்டு பேசினாள். ஆனால் பாகி சிணுங்கவில்லை. இன்றையப் பழக்கமா, நேற்றையப் பழக்கமா? ஒரு பக்கம் மாமியார்;

இன்னொரு உறவில் ஒன்று விட்ட அத்தை. அத்துடன் அவள் மாமியார் ஒரு தமிழ்ப் பண்டிதரின் பெண். மூடு சூளையாய்ப் பேசாவிட்டால், மாமியாருக்குப் பேசவே வராது. ஆனால் மாமியாரால் பேசாமல் இருக்க முடியாதாகையால், மூடு சூளையாய்த்தான் பேசிக் கொண்டிருப்பாள். நல்ல வேளை யாய் அவள் பேசுவதில் பாதி சமயம், பாதியது புரியாமலே போய் விடுவதால் இந்த மட்டுமாவது பிழைக்கிறது. இல்லாட்டா, ஒண்ணொண்ணையும் எடுத்துக் கட்டிண்டு, 'இதுக்கென்ன அர்த்தம், அதுக்கென்ன அர்த்தம்? இப்போ ஏன் அப்படிச் சொன்னாள். அப்போ ஏன் இப்படிச் சொன்னாள்னு ஒவ்வொரு இடைச் சொருகலையும் ஆராய ஆரம்பிச் சுட்டா இந்த வீட்டில் ஒரு காரியம் ஓடாது.

கிழவி பெருமூச்செறிந்தாள்.

"உனக்கும்தான் பாகி. ஆயிரம் நன்னாப் பண்ணிப் போட்டாலும், அம்மா கச்சட்டியிலே மாவைக் கரைச்சு ஊத்தாமல் சுண்டக் காச்சித் தேனாய் வைக்கற வண்டைக்கா வெத்தல் கொழம்புதானே வேண்டியிருக்கு, அப்படியே அடிக்கச் சட்டிலே ஆவி பறக்க என் கையாலே சாதம் போட்டுக் கிளறிப் பிரட்டி, தொட்டுக்கக்கூட இல்லாமல், முன் பிடிக்குப் பின் பிடி துணையாய் உருட்டி உருட்டி உள்ளே போட? அதனால் என்னத்துக்குச் சொல்ல வந்தேன்னா, தாய்க்கும் பிள்ளைக்கும் என்னிக்கும் விட்டுப் போகாது. கர்ப்பவாஸம் என்கிறதுக்கு அவ்வளவு 'பவர்' இருக்கு! ஏதோ மனுஷ ஜன்மத்துக்கு வித்தைப் பத்து மாசம் சுமக்கற துன்னு வெச்சிருக்கு. நீ இந்தக் குழந்தையை பன்னண்டு வருஷம் சுமக்கணும்னு பகவான் சொல்றான்னு வெச்சுக்கோ; மாட்டேன்போம்னு நெனைக்கிறையா? ஒரு நாளுமில்லை. சந்தோஷத்தோடு, ஆனந்தத்தோடு சுமப்போம். அப்பறம் இதுகள் எல்லாம் மரத்தை வேரோடு வெட்டிச் சாய்க்கப் போறதுங்கற ஆசை. எல்லாத்தையும் பாத்தாச்சு. நான் பாக்க வேண்டியது இன்னும் பாக்கியில்லே."

ஸாரதிக்கு அவனை அறியாமலே முகம் சுளித்தது. தோலைச் செருப்பாய்த் தைத்துப் போட்டாலும் இந்த

நெஞ்சீரல் என்றுதான் போகுமோ? அம்மா ஏன்தான் இப் படிப் பேசிண்டிருந்தால்தான் பிள்ளையை 'அத்தில்' வைத்துக் கொண்டிருப்பதாய் எண்ணமோ? என் பிழைப்பு இப்படி ஏன் ஆக வேண்டுமோ? ஆபீஸுக்குப் போனால் வீட்டுக் கவலை; வீட்டுக்கு வந்தால் ஆபீஸ் கவலை. ஜன்மம் எடுத்ததே கவலைக்குத்தான். போதாக் குறைக்கு ஒண்ணாச்சு, இப்போ ரெண்டும் ஆகப்போறது. எப்போத்தான் நிம்மதி? குழந்தை கள் பாடு நிம்மதிங்கறோம். அதுகளும்தான் எங்கே நிம்மதியா இருக்கின்றன? இதோ பாரேன்; பாபு முகத்தில் கோடி துயரங்கள்: பாபுவை எப்பவுமே அவனால் புரிந்துகொள்ள முடிந்ததில்லை. அவர்களிடையில் நெருக்கம் இல்லை, பாபு அம்மா பிள்ளை, பிறந்தது முதல் ஏதாவது வியாதி பிடுங்கிக் கொண்டு...'நோஞ்சா'னாய் அடுக்கடுக்காய் அலமாரி நிறைய பாட்டில் பாட்டிலாய் வாங்கிக் கொடுத்திருக்கும் மருந்து களும் டானிக்கும், சாறாய்ப் பிழிஞ்சு உள்ளேயிறக்கும் வண்டிச் சாத்துக்கொடி பழங்களின் சத்தும் எங்கேதான் போறதே? 'ஹூம் ஹூம்' என்று சதா சர்வகாலமும் சிணுங்கிக்கொண்டே அவன் தாயோடேயே அட்டையாய் ஒட்டிக் கொண்டிருப்பான். அவள் மடிஜலம் பிடிக்கக் குழாயடிக்குப் போனாலும் சரி. கூடைக்காரியிடம் கரு வேப்பிலை வாங்க வாசலுக்குப் போனாலும் சரி, காக்கைக்குச் சாதம் போடப் போனாலும் சரி, சமையலறையில் என்ன வேலையா யிருந்தாலும் சரி, புடவைத் தலைப்பை விடாது பிடித்துக்கொண்டே யிருப்பான். "உஹூம் உஹூம்' எனும் அந்த ஓயாத சிணுங்கல் சகிக்க முடியவில்லை. அது அவனைக் குடைந்து தின்று ஒரு வேலையிலும் மனம் நிலைக்க முடியாமல் அடித்தது. அவனுக்கு அவன் பிள்ளைமேல் சிறு கரிப்புக்கூட ஏற்பட்டது. ஆனால் பாகி எப்படித்தான் சகிக் கிறாளோ தெரியவில்லை. இப்பவும்தான் பாரேன்! அவன் கேக்கற கேள்விக்கெல்லாம் முகம்கூடக் கோணாமல் அவளால் எப்படிப் பதில் சொல்ல முடியறது; அவா ரெண்டு பேருக்குமே இப்போ மற்றவர்களின் சிந்தனை இருக்கோ என்பதே சந்தே கம். ஜட்கா வண்டியின் கட்டைகளினிடையில் குதிரை

பொறுமையிழந்து ஒருகால் மாற்றி ஒருகால் உதறிக்கொண்டிருக்கிறது.

"அம்மா நானும் வரேன்."

"நீ வரக்கூடாது."

"வரத்தான் வருவேன்."

"வரக்கூடாது. கண்ணோன்னோ? அப்புறமா அப்பா அழைச்சுக்கொண்டு வந்து காண்பிப்பா."

"அம்மாதிரியெல்லாம் வாக்குத்தத்தம் கொடுக்க வேண்டியதில்லை." அவள் கணவன் கோபத்துடன் இடைமறித்தான் "நான் இந்த வீட்டில் ஒவ்வொத்தரிடமும் ஒரோரு தினுசா மாட்டிண்டு தவிக்கிறது போதும். இந்த வாண்டுகிட்டே இப்பவே அகப்பட்டுண்டு அவஸ்தைப்படுவதாய் உத்தேசமில்லை."

"அவனுக்கு மேலே பச்சக் கொழந்தையா நீங்க இருங்கோ. முன்னாலே நீங்க தொட்டிலில் போய் படுத்துக்குங்கோ. உங்களை ஆட்டிப்பிட்டு அப்புறம் மடிக்குழந்தையைக் கவனிக்கலாம்."

"உன் புள்ளை சாமாசாரம் உனக்குத் தெரியாதா பாகி? அவன் பேசற 'லாவும் சட்டத்துக்கும்' அவன். கிட்ட வார்த்தையைக்கூடக் கொடுத்து மாட்டிக்கணுமா? சௌகரியா சௌகரியங்கள் சமயா சமயங்கள் ஒரே சமயம் போலிருக்குமா, இவனைக் 'கலுப்த'மாய்க் கட்டிண்டு வந்து காண்பிக்கறதுக்கு?"

"பாத்தையம்மா, அப்பா கூட்டிண்டு வரமாட்டா,"

"எல்லாம் கூட்டிண்டு வருவா."

"மாட்டா!"

"மாட்டாட்டாப் போறா. நானே வந்துடறேன்."

"எப்போ?"

"இன்னும் ஒரு வாரம், பத்து நாள் கழிச்சு,'

"எங்கேம்மா போறே?"

"ஆஸ்பத்திரிக்கு."

"ஏம்மா? என்னத்துக்கு?"

"நான் ஒரு அம்பிப் பாப்பாவோடு திரும்பி வருவேன்." அவள் முகத்தில் ஒரு குளிர்ந்த நீலத்தளிர் ஒளி வீசிற்று.

"நான் ஒரு அம்பிப் பாப்பாவுடன் திரும்பி வருவேன்" என்று சொல்கையில் அவள் அவ்வார்த்தைகளைப் பாபுவுக்குச் சொல்லவில்லை. தன்னைச் சூழ்ந்த மற்றவர்களுக்கும் சொல்லவில்லை. ஒருவருக்குமே தனியாய்க் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. உலகில் உயிரின் தோன்றுதொட்டிலிருந்து அதன் இருப்பிற்கு ஆதார நியாயத்தை யாவருக்கும் அறிவிக்கும் முறையில் அவள் வார்த்தைகள் அமைந்தன. அவைகளின் தொனியில் ஒரு அசரீரம் இருந்தது. அவள் அப்படிச் சொல்கையில் அவள் கணவன் நெஞ்சில் இன்னதெனப் புரிபடாத ஒரு பரவசமான கிளர்ச்சி உண்டாயிற்று.

"அம்பிப்பாப்பா இல்லேடா. அங்கச்சிப்பாப்பா!" என்றான்.

அவனுக்கென்னவோ இம்முறை ஒருபெண் குழந்தைமேல் ஆசை. அதுவும் அவன் தாயின் செந்தாழை நிறமும் பாகியின் தீர்ந்த மூக்கும் அவனுடைய தலைமயிர் அடர்த்தியும் அதற்கு வாய்த்துவிட்டால்—! அப்பா! குழந்தை கொத்திண்டு போறாப் போல் தானிருக்கும். தன்னிடம் ஒட்டிக்கொள்ளும் படியாய்ப் பார்த்துக் கொள்ளவேண்டும். பாபுபார், தன்னைப் பார்க்கையிலேயே அந்நியனைப் பார்ப்பதுபோல் அவநம்பிக்கையுடன்கடுகடுப்புடன் பார்ப்பதை! வண்டிக்காரனிடமிருந்து ஜாட்டியைப் பிடுங்கிப் பயலை வீறு வீறுன்னு வீறினால்தான் ஆத்திரம் தணியும்போல் இருந்தது. பாகி கணவன் பக்கம் முகம் திருப்பினாள். அதில் விசனம் லேசாய்ப் படலமாடிற்று.

"பொன்னுக்கு ஏன் ஆசைப்படறேள்? நமக்கு என்ன யோக்யதை யிருக்கு? உலகத்தில் பொண்ணாய்ப் பிறந்தவாளும் பொண்ணைப் பெத்தவாளும் படற கஷ்டம் போறாதுன்னு நானும் அதுக்குக் கூட்டணுமா?"

"ஆஹா. என்ன மேதா விலாசம், என்ன வாக் விலாசம்!" கிழவி கேலி பண்ணினாள். "ஏன்னா பொண்ணைப் பெத்துக்கறதோ புள்ளையாப் பெத்துக்கறதோ உங்கள் கைலே அடங்கி யிருக்கு, பாரு? பாகி, நீ என்னவோ இப்படிப் பேசறையே யொழிய, லோகத்தில் பெண்கள் பொறந்துண்டு தானிருக்கு. அதுவும் இந்தக் குடும்பத்துக்குப் பெண்வளம்

ஜாஸ்தி, நீ பொறந்த இடத்திலும் நாலு பெண்களுக்கு நடுவு லேருந்துதான் வந்திருக்கே. நீ என்னவோ முதல் பேறு பிள்ளைப்பேறுன்னு மகிழ்ந்துபோயிட வேண்டாம்.''

''டே பாபு! உனக்கு அம்பிப் பாப்பா வேணுமா, அங் கச்சிப் பாப்பா வேணுமா? நீ சொல்லுடா!''

''முன்னாலே பாப்பா எங்கேம்மா?''

பாகியின் முகம் வெட்கத்தில்சிவந்தது. அவனை அணைத் துக்கொண்டு அவன் கழுத்து வளைவில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவள் நிறை வயிறின் மேடு அவன்மேல் இடித்தது. நான் ஆஸ்பத்திரியிலிருந்து வரும்போது பாப்பா வோடு வருவேன், பாபு, உனக்குப் பாப்பா பிடிக்குமோ?''

''எனக்குப் பாப்பாவோடு விளையாட ரொம்ப ரொம்பப் பிடிக்கும். ஏம்மா அப்போ நான் பக்கத்தாத்துக்குப் போக வேண்டா மோன்னோ? நம்மாத்துப் பாப்பாவோடு விளை யாடலா மோன்னோ?''

''ஆமாம்.'' ஆனால் பாகிக்குத் திடீரெனப் பேச்சில் அலுப்புத்தட்டிற்று. ஆனால் பாபுவுக்கு அப்போத்தான் உற் சாகம் கிளம்பிவிட்டது.

''நான் விளையாட்டு சாமானெல்லாம் பாப்பாவுக்குத் தந்திடுவேன். நான் பாப்பாவைத் தூக்கிக்கலாமோன்னோ!''

''ஆஹா, நீ தூக்காமலா?''

''பக்கத்தாத்துப் பாப்பாவை நான் தூக்கினால் அந் தாத்து மாமி விடமாட்டேன்கறா. பாட்டி பார்த்தால் கூடத் திட்டறாம்மா.''

''கீழே போட்டுடுவையோன்னுதான்.''

''நான் நம்பாத்துப் பாப்பாவைக் கீழே போடவே மாட் டேம்மா.''

''எனக்குத் தெரியும்.''

''அதுக்கு விளையாட்டுக் காம்பிச்சுண்டே யிருப்பேன். அது எங்கிட்டையே எப்பவும் இருக்கும். நானும் அதுங் கிட்டையே யிருப்பேன்.''

''சரி பாபு, அம்மாவை விடு.''

"அம்மா சரியாப் பத்து நாளுலே பாப்பாவோடு வந்தூட ணும். அப்போத்தான் வுடுவேன்."

"வந்தூடறேன்."

"பாப்பாவோடே!"

"வந்தூடறேன்,"

"பத்து நாள்—"

"பத்து நாள்."

"எண்ணி—"

"எண்ணி."

"பாட்டி!"

"என்ன?"

"உன் வாயிலே எச்சில் ஒழுகறது."

"ஆமாம்! நீ ஒத்தன் சொல்ல வேண்டியதுதான் பாக்கி யிருந்தது. நீயும் சொல்லிட்டையோன்னோ, இனிமேல் குறைச்சலேயில்லை."

பாட்டி! புடவைத் தலைப்பால் கடைவாயை அழுத்தித் துடைத்துக்கொண்டாள்.

பின்கட்டில் அவள் தாழ்வார மேடையில் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் பேரன் காலைக் கீழே தொங்கவிட்டு ஆட்டிக்கொண்டு தோட்டத்தில் பயிராயிருக் கும் செடிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"பாட்டி அந்தப் பூவைப் பார்த்தியா?"

"எது?"

"அதோ, அந்த ரோஜா! செடி நடுவிலே! பாட்டி! குண்டா, எவ்வளவு பெரிசாயிருக்கு பாத்தியா?" அவன் கண்கள், பற்றிக் கொண்ட திரிகள்போல் திடீரென ஒளி வீசின.

அவன் குழந்தை விரல்கள் காட்டிய வழியே பாட்டி நோக்கினாள். அவளுடைய மங்கிய பார்வைக்கும் அந்தப் பூ அதன் முழுமையில் பெரிதாய்த்தான் தோன்றிற்று. "எப்போ பூத்தது இது?"

"பறிச்சுத் தாயேன்."

"எனக்கெட்டாதேப்பா? உங்கம்மா இருந்தா வெச்சுப்பா. அவளே ஆஸ்பத்திரியிலே யிருக்கா. பின்கட்டுப் பொண்ணையாவது பறிச்சு வெச்சுக்கோடின்னு சொல்லலாம்னா அதுக்கு என்னவோ பொறந்தாத்து நினைப்பு எடுத்து இன்னிக்குத்தான் போயிருக்கு."

"அப்போ என்னத்னதப் பண்றது பாட்டி?"

"என்னத்தைப் பண்றது? ஒண்ணும் பண்றத்துக்கில்லை. ஒரு நிமிஷம் பொறுத்து, "பூத்தும் சூடாத பூக்கள் எத்தனையோ?" என்றாள்.

இந்த மாதிரி சமயங்களில்தான் பாபுவுக்குப் பாட்டியைப் பிடிப்பதில்லை. 'புசுக்கு' என்று புரிந்தும் புரியாத வார்த்தைகளை ஏதாவது போட்டுலிட்டு அதை விளக்காமல் கம்மென்று பூஜ்யமாய் உட்கார்ந்துகொண்டிருப்பாள். கிழவிக்கே அதில் ஒரு திருப்தி. ஒரு அகந்தை. "புரிஞ்சுக்கறவா புரிஞ்சுக்கட்டுமே; புரியாதவா தவிச்சிண்டிருக்கட்டுமே!"

"பாட்டி, மழை வரப்போறது; மானம் ஒரேயடியா இருட்டிண்டிருக்கு."

"மழை பெய்யறதும் மக்கட்பேறும் மகாதேவனுக்குக் கூடத் தெரியாது."

அவள் சொல்லி முடிவதற்குள் படபடவென்று மழை பலத்த சாரலுடன் தோட்டத்தில் இறங்கிவிட்டது. ஒவ்வொரு தூறலும் பாபுவின் மணிக்கட்டு பருமனுக்கிருக்கும். படபடவென வாசல் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

"அம்மா—அம்மா!"

"இதோ வந்தூட்டேண்டா!" கிழவிக்கு எழுந்திருக்க முடியவில்லை. திடீரென ஒரு புது கனம் அவள் உடலை அழுத்திற்று. முயற்சியுடன் எழுந்து சென்றாள், பின்னாலேயே பாபுவும் போனான். வாசலில் ஸாரதி நின்று கொண்டிருந்தான். தெப்பமாய் நனைந்து உடை உடம்புடன் ஒட்டிக் கொண்டிருந்தது. மயிர் முகத்தில் வழிந்து நெற்றியோடு ஒட்டிக்கொண்டிருந்தது, அவன் முகம் ஸஹிக்க முடியவில்லை. அம்மாவைப் பார்த்ததும் அப்படியே கட்டிக்கொண்டான்.

"அம்மா! அம்மா! பாகி வாயில் மண்ணைப் போட்டுட் டாடி!"

"என்னடா பேத்தரே?"

"இல்லெம்மா, நிஜம்மாத்தான்! ஐயையோ! நான் என்ன செய்வேன்?" ஸாரதி கூடத்தில் குப்புறப்புரண்டு அலறினான்.

"பாட்டி! நேக்குப் பயமாயிருக்கே!" பாபு கையை உதறிக் கொண்டு அழ ஆரம்பித்தான். கிழவி அவனை அப்படியே சேர்த்து அணைத்துக்கொண்டாள். அவள் முகம் மூர்க்கமாய் அவள் மகன்மேல் திரும்பியது.

"டேய். குழந்தை பயப்படறான்; நீ மனுஷனா? ஆண் புள்ளைடா நீ, ஸாரதி; ஞாபகப் படுத்திக்கோ—"

அவள் வார்த்தைகள் சாட்டை போல் அவனை அடித்தன. ஸாரதி எழுந்து உட்கார்ந்தான். அவன் தன் தைரியத்தை மீண்டும் பெறச் செய்யும் தீவிரமான பிரயாணத் தில் அவன் முகம் கோரணியடைந்தது.

"ஆமாம் அம்மா, என்னை மன்னிச்சுடு,"

"பாட்டி! அம்மா எங்கே? இன்னிக்கு வரணுமே?—"

"பாபு! அம்மா வரமாட்டாள்."

"வரமாட்டாளா? ஏன் பாட்டி?"

"வரவே மாட்டாள்."

"ஹ!" பாபுவுக்கு ஒரு மூச்சே போய் ஒரு மூச்சு வந்தது. அவ்வளவுதான். உள் முறிவுக்கு மாத்திரம்.

"வர மாட்டாளா?" சப்தமே கிடையாது. ஆனால் இழந்த மூச்சு மாத்திரம் இழந்தது இழந்ததோடு அது அது நெஞ்சில் விட்டுப் போகும் ஓட்டையை இட்டு நிரப்புவது என்பதுமில்லை.

"அப்பா எனக்குக் குளூர்றது அப்பா!"

"இங்கே வா பாபு."

இரண்டு கைகளாலும் அவன் தகப்பன் அவனை வாரி யணைத்துக் கொண்டான். திடீரென அவன் மகனுக்காக அவன் நெஞ்சில் தீராத பசியெடுத்தது. மகன் அணைப்பில் நெஞ்சு ஆதரவைத் தேடுகையில் இத்தனை நாள் கரிப்பும் திடீரென அமுதமாய் மாறும் வேதனை பயங்கரமாயிருந்தது.

"அப்பா!"

"ஏன் ராஜா?"

"அம்மா வரமாட்டாளா?"

"வரமாட்டாள்—" துக்கம் தொண்டையை அடைத்தது.

"பாப்பா?"

"பாப்பாவும் இல்லை." கீழுதட்டைக் கடித்துக் கொள் கையில் மோவாய் நடுங்கிற்று. தன் மகனை இன்னும் இறுக அணைத்துக் கொண்டான். பாபுவின் குரல் அவன் அணைப் பிலிருந்து அவன் செவிகளுக்கு எட்டிற்று.

"அப்பா, அம்மா ஆஸ்பத்திரிக்குப் போயிட்டு அம்பிப் பாப்பாவோடு திரும்பி வருவான்னியே, இப்போ அம்மாவே வரமாட்டாங்கிறியே, இது ஏன்?"

பதில் சொல்ல முடியாமல் அவன் தகப்பன் மிரள மிரள விழித்துக் கொண்டு தவித்தான்.

அவன் பார்வை பின்கட்டில் தெரியும் தோட்டத்தின் பக்கம் சென்றது.

தோட்டத்தில் சிறு சிறு கால்வாய்கள் பிரவாகித்துக் கொண்டிருந்தன. குட்டைகள் தேங்கி நின்றன.

செடியின் உச்சாணிக் கொம்பில் ரோஜாப் பூ, பலவந்தப் படுத்தப்பட்டவளைப் போல், இதழ்கள் கலைந்து கசங்கி, பொலிவிழந்து, அலங்கோலமாய் நின்றது.

# 6. இதழ்கள்

''பார்க்கவி! பார்க்கவி!!''

பார்க்கவி அசைந்துகூடக் கொடுக்கவில்லை. தலையணை மீது ஐந்து தலை நாகம் படம் விரித்தாற்போல் கூந்தல் ஐந்து பிரிகளாய் அவிழ்ந்து அலை மோதிற்று.

''அடீ நாட்டுப் பெண்ணே!''

(நாறப் பொண்ணே!)

பார்க்கவி மல்லாந்து படுத்தபடி கால் கட்டைவிரலிலிருந்து கழுத்து வரை தன் உடலைக் கண்ணோட்டம் விட முயன்றாள். தூக்கத்தில் மேலாக்கு இடுப்புவரை இறங்கி விட்டது. ஆனால் இன்னும் அவள் சரி பண்ணிக்கொள்ள ஆரம்பிக்கக்கூட இல்லை. இப்பொழுது கிடக்கையில் அங்கங்கள் தளர்ந்து வீழ்ந்து கிடக்கும் இதவில் ஒரு விரலைக்கூட அசைக்க மனமில்லை.

''அடீ ராணியம்மா! காப்பி கலந்தாச்சு. எழுந்திருக்க மனசு பண்ணலாமே!''

கரும்பலகையில் ஆணியால் கோடு இழுத்தாற்போல் கிறீச்சிட்டு, கீழிருந்து அக்குரல் எட்டிற்று. பார்க்கவிக்குச் செவி நரம்புகள் துடித்தன. பல்லைக் கடித்துக் கண்களை இறுக மூடிக் கொண்டாள். 'இன்னிக்கு என்ன வேணுமானாலும் ஆகட்டும்; நான் இறங்கப் போறதில்லை. இந்த வீட்டில் இது வரைக்கும் நான் போடறபோதே, ஆறவெச்ச காப்பி நான் குடிச்சதில்லையாக்கும்! இன்னிக்குன்னு நாட்டுப் பெண் மேலே அலாதி அக்குசு வந்திருக்காக்கும்! கத்துங்கோ; கத்துங்கோ, நன்னாக் கத்துங்கோ. இனி என்ன பயம்? பயந்து பயந்து செத்ததுக்கெல்லாம் பலனை அனுபவிச்சாச்சு. இனிமே பயப்படாமே போற ஆபத்தில் போனாப் போறேன்-பார் பார், இதோ வரார்—இந்தச் சரீரத்தைத் தூக்க

முடியாம தூக்கிண்டு, புஸ் புஸ்னு கொல்லன் பட்றை துருத்தி மாதிரி மூச்சு விட்டுண்டு என்னை விரட்டிண்டு வராட்டால்தான் என்ன? மார்க்கபமோ சதங்கையாய்க் குலுங்குகிறது. என் மேலே பரிவுதானம் என்ன தட்டுக் கெட்டுப் போச்சு? 'நான் கூப்பிடறேன், நீ வரவில்லையா என்கிற ஹடம்தானே!—'

அவசர அவசரமாய் ஆடையைச் சரிப்படுத்திக் கொள்கை யிலேயே அறைக்கதவு படீரெனத் திறந்தது. நிலை வாசல் மேல் சாய்ந்தபடி மாமியார் நின்றார். ஏறிவந்த சிரமம் தாளவில்லை. மூச்சு இரைத்தது.

பார்க்கவி எழ முயன்றாள். தள்ளிவிட்டது.

'வந்தது வரட்டும், நான் இருக்கறபடிதான் இருக்கப் போறேன் என்றெல்லாம் தனக்குள் வீராப்பு எண்ணலாமே தவிர, நேரில் காண்கையில் நெஞ்சு அப்படியே சுருங்கி விடறது! ஏனோ தெரியல்லே.' பார்க்கவிக்குத் தன் மேலேயே கொள்ளை ஆத்திரம் வந்தது. அம்மாவின் தோற்றத்திற்கே பிறரை வாயடைக்கும் ஒரு ப்ரஸன்னம் இருந்தது. தூண்மேல் சாய்ந்து ஒரு காலை நீட்டி உட்கார்ந்தபடி தயிரைக் கடைந்து கொண்டே, "என்னடா சொல்ல வரே, மா விளக்கு மா திங்கற மாதிரி வாயைக் குதப்பிண்டு?" என்று கேட்டதுதான் தாமதம், "ஒண்ணுமில்லேம்மா!" என்று அவள் கணவன் அவசரமாய் வெளியே போய்விடுவான். ஒரு நாளா, இரண்டு நாளா? இம்மாதிரி, அவளுக்கு நினைவு தெரிஞ்சு இந்த அஞ்சு வருஷமா இரும்புக் கோலால் ஆண்டு ஆண்டு, ஈரமும் நயமும் இந்த வீட்டில் வறண்டு போய் முதலுக்கே மோசமா ஆயிடுத்து.

"சேசே! இப்போ அவசரம் என்ன? படுத்திண்டிரு. இன்னும் பொழுது விடியல்லே; சூரியன் புறப்பட்டு ஒரு மணி நேரம்தான் ஆறது—"

"இல்லேம்மா, விடிவேளையிலே கண்ணை அசத் திடுத்து—" எழவொட்டாமல் அவள் உடல் மறுபடியும் அவளைக் கீழே தள்ளிற்று.

"ஊ-ஹும், நீ சொன்னால் நான் கேட்பேனா என்ன? இன்னும் கொஞ்ச நாழி படுத்திண்டிரு; அதுக்குள்ளேயும் வந்தூடும்."

"என்னது?" பார்க்கவிக்குப் புரியவில்லை.

"சந்தனப் பேலாவும் கொட்டுமேளமும் சொல்லி யனுப்பிச்சிருக்கேன், உன்னைப் பள்ளியெழுப்ப."

நாக்கிலிருந்து ஒருங்கே குதிக்க நானூறு வார்த்தைகள் எண்ணங்கள், விஷயங்கள், உணர்ச்சிகள் தவித்தன. ஆனால் பார்க்கவிக்கு வாயடைத்து விட்டது.

"எனடீ, முழி முழின்னு முழிதானிருக்குன்னு முழிக்கறே? கொம்பேறி மூக்கி!" சவுக்கு நுனியில் கட்டிய ஈயக் குண்டு போல் வார்த்தைகள் திடீரெனத் தெறித்தன. "நீ வந்ததே மொதக்கொண்டு வீடு சுபிக்ஷமா யிருக்கேன்னு மூதேவி வேறு கொண்டாடியாறதோ? இந்தத் தள்ளாத வயசுலே, என்னை ஒக்காத்தி வெச்சுத் தாங்கற நாளுலே, நான் பட்டதெல்லாம் போறாதின்னு நான் போட்டு வச்ச காப்பியைக் குடிக்கறதுக்கு நானே மாடியேறிக் கூப்பிடணுமாக்கும். தவிடு திங்கறதுலே ஒய்யாரம் வேறே!"

சரி, இன்னிக்கு முழிச்ச வேளை சரியில்லே, இன்னிப் பொழுது நல்ல போதாப் போகணும். இன்னிக்குத்தான்னு உடம்பு என் வசத்துலேயில்லே.

பார்க்கவி பதில் பேசவில்லை. படுக்கையைச் சுருட்டி விட்டு எழுந்து நின்றாள். மாமியார் வாயிலை அடைத்துக் கொண்டு நின்றாள். பறங்கிப்பழ மேனி, தாடைச் சதையும் கழுத்துச் சதையும் தளர்ந்து இறங்கி, பேச்சில் வாயசைகையில் தாமும் ஆடின. சிங்கப்பிடரி போல் கூந்தல், மூப்பு மஞ்சள் பூத்து மயிர்க் கால்களிலிருந்து முரடிக்கொண்டு எழுந்து ஓடிற்று. அம்மா மஞ்சள் இழந்து எத்தனையோ வருடங்கள் அவள் இந்த வீட்டுக்குள் புகுவதற்கு முன்னாலேயே—ஆகி விட்டன. ஆனால் அவள் முகத்தில் இன்னும் லக்ஷ்மி பெருகினாள். கைராசி இன்னமும் விளங்கிக் கொண்டுதானி

ருந்தது. இன்னமும் அவர் கையில் குழந்தையைக் கொடுத்து வாங்கிக் கொண்டு போய்க் கொண்டு தானிருந்தார்கள். தன்னைக் கண்டால்தான் இப்படி. அம்மா சின்ன வயதில் ரொம்பவும் அழகாய்த்தானிருந்திருப்பார். ஆனால், பாவம், பற்கள் தாம் நிற்கவில்லை. வெறும் வாயை மென்று கொண் டிருப்பார்.

பார்க்கவி உடம்பை ஒடுக்கிக் கொண்டு சுவரோரமாய் நகர்ந்து வாசலைத் தாண்டினாள். "அதாண்டி கேட்டேன்! பல்லைத் தேய்க்காத பவிஷோடு மேலே இடிச்சுண்டே போ! ஏன்னா, உனக்கு இன்னும் பொழுது விடியாவிட்டாலும் வெள்ளி முளைக்கறதுக்கு முன்னாலே நான் ஸ்நானம் பண் ணிட்டு நிக்கறேனே, உனக்குப் பொறுக்குமா? இந்த ஒரு வேளை சோத்தைத் தானே பொங்கித் தின்கற மாமியார், அதையும் நாறாமல் ஏன் தின்கணும்? ஊஹூம்—மண்டை வெடிச்சுடாதா?"

அவர் மேல் தன் காற்றுக்கூடப் படவில்லை என்று அவளுக்குத் தெரியும். தெரிந்து யார் பதில் சொல்றது? தர்க்கந்தான் மிஞ்சும். படிப்படியாய்ப் பார்க்கவி மாடி இறங்கினாள். பின்னாலேயே அவளை முழுங்கிவிடும் பசி யோடு அம்மாவின் பார்வை அவள் முதுகைத் துளைப்பதை அவள் உணர்வாள்.

'இந்தப் பார்வைதான் அம்மாவின் வாயைவிட எனக்குத் திகிலாயிருக்கு. என் உடம்பின் ஒவ்வொரு அசைவையும், செய் கையையும் இவர் இப்படித் தொடர்ந்து கவனிக்கறப்போ என்னுடைய தப்புகள் மாத்திரம் என்மேல் ஈட்டிகள் மாதிரி தலை நீட்டிக்கொண்டு நிக்கறதுகள். நான் என்ன செய்வேன்? என்னிக்கு நான் வாய்விட்டு அலறிடுவேனோ! உதட்டைக் கடிச்சு அந்த ஊளறல் கத்தலை உள்ளுக்குத் தள்ளறத்துக் குள்ளே உன் பாடு என் பாடாயிடறது. அந்த அசதி தாங்கா மல் ஒவ்வொரு சமயம் சுவத்துலே சாஞ்சுடறேன். இந்த வேட்டைப் பார்வையால் எனக்கு என்னிக்குப் பைத்தியம் புடிச்சுடுமோ? இல்லாட்டா ஏற்கெனவே புடிச்சுடுத்தோ? ஆனால் எனக்குப் புடிச்சால் எனக்குத் தெரியுமோ...?"

தவலையைத் தூக்கிக்கொண்டு பார்க்கவி கிணற்றடிக்குச் சென்றாள்.

'என்னிக்குத்தான் எனக்கு விடியுமோ? இன்னிக்கு முழிச்ச வேளை சரியில்லே. எதன் முகத்துலே முழிச்சேன்? வழக்கப்படி பூ முகத்துலே முழிக்கல்லையா? பூ முகத்துலே முழிக்கணும்னு தானே தினம் ஜன்னலோரம் படுக்கையைப் போட்டுக்கறேன்! பகவான் பூவைத்தான் பிடுங்கிண்டுட்டார்னா, பூ முகத்துலேகூட முழிக்கக் கூடாதுன்னு இருக்கா? ஆனால் என் மாதிரி ஆயிட்டவாளுக்கெல்லாம் நல்ல சகுனம், கெட்ட சகுனம் எல்லாம் ஏது? நாங்களே தான் பெரிய சகுனமாயிடறோமே, 'நீயும் நானுமடி, எதிரும் புதிருமடி'ன்னு அம்மா பாடறமாதிரி...'

இருந்தாலும் அவளுக்குப் பூவின் மேல் அபரிமிதமான ஆசைதான். (அதனாலேயே அதை அவள் இழந்துவிட்டாளோ?) இந்த ஆசை சுயம் மாத்திரம் அல்ல; அதில் கொஞ்சம் பரம்பரை வாசனையும் கலந்திருந்தது. அவள் தகப்பனார் ஒரு நந்தவனத்தைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். தோட்டத்தின் நடுவில் பர்ணசாலைபோல் ஒரு ஓலைக் குடிசை. ராத்திரி வேளையில் ஜில் காற்று ஆளைத் தேவலோகத்துக்குக் கொண்டு போய்விடும்.

'அப்பா கயிற்றுக் கட்டிலைப் போட்டுண்டு உட்கார்ந்துடுவர். அப்பா தாடி வளர்த்துண்டிருந்தார். ஏனோ தெரியல்லே. தனக்குள்ளே ரிஷீன்னு தியானமோ? கருகருன்னு தாடி தொப்புள் வரை யிறங்கி மாலைக்காற்றில், ஜோரா வெட்டி வேர்த் தட்டி மாதிரி மெதுவா அசைஞ்சுண்டிருக்கும். அப்போ வாத்யத்தில் ஸ்வரப்பற்களை அமுக்கின மாதிரி ஒரு ஒரு சமயம் வித விதமான பூ வாசனை ஒண்ணும் பின்னாலே ஒண்ணு காற்று வாக்கிலே கிளம்பும். அப்பா தாடியை உருவிக் கொண்டே ஒவ்வொண்ணா ரொம்ப நுட்பமான அடையாளம் கூடத் தப்பிப் போகாமல் சொல்வார். பூ விஷயத்தில் அப்பாவுக்கு மிஞ்சித் தெரிஞ்சுக்க ஒண்ணுமேயில்லை. பூ மாத்திரம் என்ன? எதைப் பற்றியும் அவரால் அப்படிப் பேச முடியும்.'

அதுமாதிரி ஒரு சமயம் :

''அதோ அந்தப் பூ என்னோடே பேசறதும்மா! அதோ, அந்தச் சிவப்புலே வரி வரியா வெள்ளைக்கோடு போட்டிருக்கே ஆ, அதான்!''

''என்னப்பா பேசறது?'' அப்போ எல்லாம் அவளுக்கு அப்பா வாக்கு வேதவாக்கு. போகப் போகத்தானே தெரியறது. யார் யார் வார்த்தை எவ்வெவ்வளவு எடை தாங்கும்னு? ஆனால் அவர் வாயை வெறுமெனக் கிண்டினா லும் அவர் எப்பவும் சுவாரஸ்யமா யிருப்பார்.

அவள் கேள்வி காதில் விழாததுபோல் அவர் இருந்தார்.

''பூ என்னப்பா சொல்றது?''

''என்னத்தைச் சொல்றதுன்னா என்னத்தைச் சொல்றது?'' ஒரு முறைக்கு மறுமுறை கேட்டால் அவருக்குக் கோபம் வந்து விடும். ''உங்கள் மாதிரியெல்லாம் உள்நாக்கு தெரிய வாயைத் திறந்து வளவளன்னு வம்பளந்தால்தான் பேச்சா? பேச்சுன்னா பேச்சு என்று அர்த்தமில்லை, பேச்சுன்னா பாஷை என்று அர்த்தம்.''

''இப்போ இதன் பாஷை என்ன பாஷை?''

''அது அதுக்கு அதனதன் பாஷை உண்டு.''

''இப்போ இதன் பாஷை என்ன பாஷை''

''பூவின் பாஷை அதன் மணம்தான்.''

''மணக்காத பூக்கள் இருக்கே!''

''மணக்காத பூக்களின் பாஷை அவைகளின் அழகு தான்.''

''அழகில்லாத பூக்கள்?''

''அழகில்லாட்டா மணமிருக்கும். மணமில்லாட்டா அழகிருக்கும்.''

''மணமுமில்லே அழகுமில்லே, அப்போ?''

''அது பூத்திருக்கே அதான் அதன் பாஷை.''

''பூக்காத பூக்களைப்பற்றி என்ன சொல்றேள்?''

சட்டென ஒரு ஊமைத்தனம் அவர்களிடையே திடீ ரெனத் தேங்கிற்று. அதனால்தான் என்னடா அப்பா பதில் பேசலையே என்று அவள் தலை நிமிர்ந்து பார்த்தாள். அவர்

அவளை ஒரு தினுசாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். விழிகள் தழலாய் மாறியிருந்தன. சற்று நேரங் கழித்து அவர் வார்த்தைகள் சாதாரணமாய் வந்தாலும் அந்தக் குரலைக் கேட்க அவளுக்குப் பயமா யிருந்தது. ரிஷியின் சாபம்போல்.

''பார்க்கவி, நீ ஒரு அபஸ்மாரம். ஆமாம். சந்தேகமே யில்லை. ஒரு அபஸ்மாரம்.''

''ஏம்பா திடீர்னு கோவிச்சுக்கறேள்? நான் என்ன பண்ணிட்டேன்?''

''நீ இன்னும் என்ன பண்ணனும்? பெண்ணாய்ப் பிறந்தூட்டு பூக்காத பூக்களைப்பற்றி உனக்கு முதலில் எண்ணம் தோணித்தே, அது போதாதா? நீ ஒரு அபஸ்மாரம்.''

''என்னப்பா நீங்கள் ஏதோ சொல்லிண்டே வந்தேள். நானும் ஏதோ கேள்விகள் கேட்டுண்டே வந்தேன். இதில் உங்களுக்கும் எனக்கும் என்ன தர்க்கம்? இதில் என்ன தப்பு?''—அவள் உதடுகள் கோப அழுகையில் நடுங்கின.

''பார்க்கவி! உன்மேல் நான் கோபிக்கவில்லை. ஆனால் கேட்கத் தோன்றினாலும் கேட்கக்கூடாத கேள்விகள் இருக்கின்றன. செய்யக்கூடாத காரியங்கள், சொல்லக்கூடாத வார்த்தைகள், கேட்கக்கூடாத கேள்விகள் — இதில் நான் எதையும் மன்னிச்சுடறேன். ஆனால் தோன்றக்கூடாத எண்ணங்களை எண்ணுபவர்கள் தோன்றவே கூடாது. அப்படித் தோன்றினால் அவர்கள் ஒரு சாபக்கேடு. அவர்களுடைய எண்ணங்களுக்கு அவர்கள் பொறுப்பாளிகளல்ல. ஆனால் அவர்களுடைய எண்ணங்களுக்கு மட்டும் எண்ணியபடியே செயலாகிவிடும் வலிமையுண்டு. அப்படிப் பலிக்கையில் அவர்களைச் சுற்றி எப்பவுமே சூன்யந்தான். அப்போது அவர்கள் ஆபத்தான பிறவிகள் ஆகி விடுகிறார்கள்.''

அவர் விசனத்துடன் பெருமூச் செறிந்தார். எழுந்து போய் எதிரே ஒரு செடியிலிருந்து ஒரு பூவைக் கிள்ளிக கொண்டு திரும்பிவந்து கட்டிலில் உட்கார்ந்தார்.

''பார்க்கவி, நீ பிறந்தாய்; பிறந்து ஒரு வாரத்தில் உன் தாயாரை உருட்டிவிட்டாய்.''

வெடுக்கென ஒரு இதழைப் பிய்த்தெறிந்தார். அது காற்றில் சுழன்று சுழன்று சென்றது.

''உன் அம்மா இருந்த வரைக்கும் ஏதோ லக்ஷ்மி மாதிரி யிருந்தாள். அவள் இருந்த வரைக்கும் எனக்கும் எல்லாம் சரியாய்த்தா னிருந்தது. அவள் போனாள். நீ வந்தாய். புடிச்சு தய்யா எனக்கும் சனியன்! என் ஆஸ்தியெல்லாம் நாஸ்தி யாச்சு.''

இன்னொரு இதழ் காற்றில் பறந்தது. மூன்று இதழ் களுடன் மூளியாய் அவர் விரல்களிடை திரியும் பூவைப் பார்க்கவே அவளுக்குப் பயமா யிருந்தது. அவர் அவளைப் பார்க்கவில்லை. அவர் தன்னோடு பேசிக்கொண்டிருந்தார். இல்லை. தன் கைப்பூவோடு பேசிக் கொண்டிருந்தார். இதுதான் பூவின் பாஷையோ?

''உனக்கு முன் பிறப்பு எனக்கு ரெண்டு பெண்கள் உண்டு. இருந்த மாடு, மனை, வீடு, சொத்து எல்லாம் விற்று, கடனும்பட்டு, அவர்களைக் கட்டிக்கொடுத்து, அவரவர் வீட்டுக்கு அவர்களை ஓட்டியும் விட்டேன். அன்னியிலிருந்து அவர்கள் என்ன வானார்கள், இருக்காளா செத்தாளா என்று இன்னமும் தெரியாது. அவர்களைப் பார்த்து உனக்கு வயலா கிற வருஷம் ஆகிறது—'

இதழ்களைப் பிய்த்து உள்ளங்கையில் வைத்துக்கொண்டு ஊதினார். இரண்டும் இரண்டு திக்காய்ப் பிரிந்து மிதந்து மறைந்தன.

இன்னும் ஒரு இதழ் குற்றுயிராய்க் காம்பில் ஒட்டிக் கொண்டு காற்றில் அலைந்து தவித்தது.

''லக்ஷ்மி இருந்த வரைக்கும் ஒரு தம்ளர் ஜலத்தை இடம் விட்டு இடம் நான் நகர்த்தினதில்லை. ஆனால் உனக்கு நான் தாயாகவே இருந்திருக்கிறேன். நீ பச்சைக் குழந்தை யாய் இருக்கையில் உன்னை என் முழங்காலில் குப்புறப் போட்டுக் குளிப்பாட்டி யிருக்கிறேன். கடைவாயில் பாலா டையை அமுக்கிவைத்துப் பாலும் எண்ணெயும் கஞ்சியும் கஷாயமும் நானே புகட்டியிருக்கிறேன். இப்போ இங்கே நீயும் நானும் உட்கார்ந்து கொண்டு இதெல்லாம் எப்படி

நடந்தது, என்னவாய் நடந்தது என்று கேட்டாலும் நினைத் தாலும் எனக்கே திகைப்பாயிருக்கிறது.''

இன்னிக்கு அப்பா பேச ஆரம்பித்ததை அதுவே முடியற வரைக்கும் பேசி முடிப்பார். இன்னிக்குணம் அவருக்கு அப்படியிருந்தது.

''கடன்காரருக்குப் பயந்து முகமறைவாய் தாடி வளர்த்துக் கொண்டு இடமே மாறி வந்துட்டேன். ஆனால் பாம்புப் பிடாரன் கூடவே பாம்புபோல், நான் எங்கு போனாலும் என்னோடு நீ.

''பாம்புப் பிடாரனுக்குப் பாம்பாலேயே சாவு என்று ஒரு வசனம் உண்டு. அது வீண் போகாமல், நீ பிறந்த உட னேயே என்னைக் கடித்தாய் விட்டது. நான் சாகவில்லை. ஆனால் உயிரோடு இல்லை. இனிமேல்தான் என்ன நடக்கப் போகிறதென்று தெரியவில்லை. நீயும் ஆளாகி விட்டாய். பூக்காத பூக்களைப்பற்றி என்னோடு தர்க்கம் பண்ணிக் கொண்டிருக்கிறாய். சே, என் பிழைப்பு ஒரு பிழைப்பா!'' காம்போடு இதழை வீசி எறிந்தார். பூமியையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. அப்பாவுக்கு இன்னிக்கு என்னவோ வெறி, தெரியல்லே! தன்னுடைய தோல்விகளுக் கெல்லாம் அவளைப் பொறுப்பாக்கிக் கொண்டிருந்தார். அது தெரிந்தது.

x x x

உச்சி வெய்யில் கூட அவ்விடத்தில் தெரியாது; அவ்வளவு குளுமை. அது அவளுடைய ரகஸ்ய இடம். ஆற்றுக்கரை மேட்டில் ஒட்டினாற்போல் நின்ற இரு தென்னங் கன்று களிடையில், நெருக்கமாய்ச் செந்தாழம் புதர்கள் சூழ, ஒரு ஆள் மல்லாந்து படுக்குமளவு இடம் அங்கு யார் கண்ணுக்கும் புலப்படாது பதுங்கியிருந்தது. புதர்களின் நெருக்கத்தில் அங்கு எப்பவுமே தண்மை தரும் இன்ப இருள் தேங்கிற்று. அங்கு அவள் இப்பொழுது ஒரு புறமாய்ப் படுத்து இருக் கையில் பூமியைப் பொத்திய இடது செவியில், பூமிமேல்

அதிரும் அத்தனை சப்தங்களும் படுகையில் பூமியின் நாடியே கேட்பதுபோலிருந்தது.

இப்பொழுது குபீர் குபீர் என்று கிளம்பும் செந்தாழையின் மணம் சிந்தனையின் போதையுடன் கலக்கையில் நேரம் போக்கற்று நின்றுவிட்டது.

இன்னமும் சாப்பிடவில்லை. வயிறு காலி. ஆனாலும் இன்று பசிக்கணும் சாப்பிடணும்னு தோணல்லே.

'மாமியார்தான் எடுத்துப்போட்டுக் கொண்டு சாப்பிட்டு விட்டு ("என் கையும் காலும் என்வசமிருக்கிறவரைக்கும் நான் ஒருத்தர் கையையும் எதிர்பார்க்கப் போறதில்லை, ஈசுவரா, நான் காலும் கையோடு நல்லபடியா வளைய வரத்துலேயே என்னைக் கொண்டு போயிடு, இந்தப் பீடைகளிடம் காட்டிக் கொடுக்காமே!") கொல்லை ரேழி வாசல்படி மேல் தலைவைத்துக் காலை நீட்டிக் குறட்டையும்விட ஆரம்பிச்சாச்சு. அங்குக் காற்று சொகம்மா வரும். சமையலறையில் போட்ட சாமான் போட்டபடி கிடக்கும். மாமியாரின் எச்சிற்கலை காஞ்சிண்டிருக்கும். எந்த சாமானை மூடியிருக்கோ? திறந்து கிடக்கோ? கிடக்கிறது கிடக்கட்டும்; நான் தானே பாக்கி. சாப்பிட்டாலும் போச்சு, சாப்பிடாட்டாலும் போச்சு. இப்படியே சேர்ந்தாப் போலே ஒரு பத்து நாள் சாப்பிடாமல் இருக்க முடிஞ்சா நான்கூட பாக்கியில்லாமல் ஆயிடுவேன். நான் செத்த அப்புறம் எனக்கென்ன தெரியப்போறது?"

அப்படி நினைத்தாலும் அவளால் பசி தாங்க முடியாது என்று அவள் நன்கு அறிவாள். இந்த வீட்டுக்கு வந்த பிறகு முதல் பகிரங்கத் தகராறே அதில்தான் ஆரம்பித்தது. மாமியார் போர் மாதிரி சோற்றை உள்ளே இறக்கினாலும் சமயத்தில் மூன்று நாள் சேந்தாப்போல், முழுங்கு ஜலம் கூட இல்லாமல் வேலை செய்துகொண்டு சுறுசுறுப்பாய் வளைய வர முடியும்.

ஒருமுறை அவள் மாமியார் வம்படிக்க (தெரியாதா அவளைப்பற்றிக்குறைப்பட்டுக்கத்தான்!) பக்கத்திலே எங்கோ

போனவர், போனார் போனார் போனாரே!...பேச்சு சுவாரஸ் யத்தில் திரும்பியே வரல்லே. (அதென்னதான் அப்படி ஒரு பேச்சு இருக்குமோ, சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிண்டு கேக்கறவாளுக்கு அலுத்துப் போகும்படி...அவா தான் அப்புறம் அவள் கிட்டவந்து சொல்லிடறாளே. கடுகோ, பருப்போ கடன் வாங்கப் போறாப் போலே கரண்டியை வீசிண்டுவந்து. அம்மா உத்தரவு இல்லாமல் அவள் ஒரு உப்புக்கல்கூடக் கடன்கொடுக்க முடியாதுன்னு அவாளுக்கே தெரியும்—அவர்கள் எதிரிலேயே அவள் எவ்வளவு அவஸ்தைப் பட்டிருக்கிறாள்! போகட்டும் போகட்டும்; அய்யாகுடி அப்பன்குடி அவளுது என்ன தட்டுக் கெட்டுப் போச்சு. எல்லாத்துக்கும் போறவேளை வந்துடுத்து.) கலத்தில் சாதத்தை வைத்துக்கொண்டு அப்போதுதான் ஒரு கவளத்தை வாயில் போட்டாள். வெறும் வயிற்றில் விழுந் ததும் விக்கல் கண்டுவிட்டது. அதைச் சமாளிக்கத் தீர்த் தத்தை முழுங்கிக்கொண்டிருந்தாள். அம்மா வந்துவிட்டார். கலத்தில் சோற்றை வெச்சுண்டா காசிக்குப்போன கணவன் கூட வந்துவிடுவான் என்கிற வசனம் வீணாய்ப் போகவா ஏற்படுத்தியிருக்கா?

"பேஷ் பேஷ்! ஓஹோ, பசிக்கிறதோ? பொம்மனாட்டிக்கு அப்படி ஒரு பசியா? சரி இனிமேல் எனக்கு எவ்வளவு மரி யாதை கிடைக்கும்னு தெரிஞ்சுண்டேன். என் கையள்ளு அரிசியை நானே தனியாக் களைஞ்சு வெச்சுக்க வேண்டியது தான். இந்தாத்து ராஜகுமாரன் அந்த ஊர் ராஜகுமாரியைத் தேடிப் புடிச்சுண்டு வந்துட்டானோன்னோ, கதையும் நாவலும் நடத்தி! வீட்டுக்கு வந்ததும் ராஜகுமாரி ராணி யம்மாளாயிட்டா, அப்புறம் இந்தக் கிழம் கட்டைக்கெல்லாம் பேசறதுக்கு என்ன இருக்கு? வேணும் வேணும், எனக்கு நன்னா வேணும்; இதுக்கு மேலேயும் வேணும்!"

தட்டுச் சோறும் அப்படியே விஷமாய் மாறிவிட்டது. முழுங்கி முழுங்கிப் பார்த்தும் உள்ளே செல்ல மறுத்து விட்டது. வாசலிலே கொட்டும்படியே ஆகிவிட்டது. அதற்கு வேறே தனி வசவு!

அவளுக்குப் பசி தாங்கவில்லையென்று எப்போது கண்டு கொண்டாரோ, மாமியார் தன்னிஷ்டப்பட்ட போதுதான் சாப்பிட வருவார், அந்தப் போட்டியில் சாதம் ஆறிப் போய் முள்முள்ளாய் விறைத்துக் கொண்டாலும் அவருக்கு அக்கறை யில்லை. அவளுக்குக் கண்ணில் உசிர் வந்து நின்ற பிறகு. உதட்டையமுக்கி தனக்குள் ஒரு சிரிப்பு சிரித்துக்கொள்வார். ''சரி, இலையைப் போடறது, தட்டை வெச்சுக்கறது; இந்த நாளில்தான் நாம் பசிச்சப்போ சாப்பிட முடியல்லியே. பிறத்தியார் வயத்தைப் பார்த்து, நம்ம வயத்துக்குக் கொட்டிக்க வேண்டியிருக்கு!—''

பெரியவாள் எப்பொழுதுமே என்ன வேணுமானாலும் சொல்லலாம். அவர்கள் சொல்வதில் நியாயம் இருக்கோ இல்லையோ, அவாளுக்குப்பெரியவாள் என்கிற அவர்களுடைய ஸ்தானம் மாத்திரம் கெட்டி. அதை வெச்சிண்டு அவர்கள் யார்மேல் இருக்கிற ஆத்திரத்தையெல்லாம் யார்மேலே வேணுமானாலும் தீர்க்க வழி பார்த்துண்டு அட்டம் செய்ய லாம். அம்மாவுக்கு யார் மேலே ஆத்திரம் இல்லை? முதலில் அவருடைய கணவன், தன் மாமனார் பேரிலேயே ஆத்திரம் பொங்கி வழிந்தது. அம்மாவுக்கும் பிள்ளைக்கும் ஒருநாள் விட்டு ஒருநாள் நடக்கும் தர்க்கங்களில் அடிபடும் பழைய ஏடுகளிலிருந்து அப்படி இப்படியென்று முன்னும் பின்னுமாய் விஷயங்கள் வெளிவரும்.

கூட்டுக் குடும்பத்தில் வெகுநாள் கஷ்டப்பட்ட பிறகு, எப்படியோ தங்களைப் பிரித்துக்கொண்டு வந்த பிறகு, பத்து மாதம் சேர்ந்தாப்போல் குடித்தனம் நடத்தவில்லை. பஞ்சுப் பொதியில் பொறி வைத்தாற்போல், கண்ணப்பன் சிவதரி சனம் கண்டாற்போல், மாமனாருக்குத் திடீரென்று தேசத் தொண்டில் ஆர்வம் நேர்ந்துவிட்டது. உத்யோகத்தைத் துறந்து, இயக்கத்தில் இறங்கினார். எங்கேயோ ஊர் தள்ளி, உள்ளேயும் தள்ளி விட்டார்கள். உள்ளே போனவர் வெளியே வரவேயில்லை. ஒரு மாஸம் இரண்டு மாஸம் கழித்து ஒரு கடிதம் வந்தது. ''உங்கள் கணவர் திடீரென நேற்றிரவு சிறையில் காலமாய்விட்டார் என்பதை வருத்தத்

துடன் தெரிவித்துக்கொள்கிறோம்'' இல்லியா, அப்பா அடிக் கடி சொல்லுவா, ''இங்கிலீஷ் பாஷையில் பதவிசுக்குக் கேட் கணுமா? அதுதான் பாகா இழுபடுமே!'' என்று.

அம்மாவுக்கு ஒரே ஆத்திரம். ''கொண்ட பெண்டாட்டி யையும் பெத்த குழந்தையையும் மானத்தோட காப்பாத்த வக்கில்லாதவாளுக்குத் தேசத்தொண்டு என்ன வேண்டிக் கிடக்கு? தன்னைக் காப்பாத்திக்க வழியில்லை, தேசத்தைக் காப்பாத்தப் போனானாம். போனானே போனானே, என்னை நடுச்சந்தியிலே நிக்கவிட்டூட்டு! என் வயிறு எரியக் கண்டவாளெல்லாம் விடிஞ்சுடுவாளா?''

ஆயிரம் கத்தியும் வயத்தில் அறைஞ்சுண்டும் என்ன பண்றது? சகுந்தலை மாதிரி குழந்தையை ஏந்திண்டு பிரிஞ்ச இடத்திலேயே சேரும்படி ஆயிடுத்து. போன இடத்தில் இடிக்காமல் யார் விடறா? ''நீ வெச்சுக்கோ, நான் மாட்டேன் வேங்கைப்புலி!'' என்று ஏலம்போட ஆரம்பித்துவிட்டார்கள்.

இப்போதுகூட நினைச்சுண்டு அம்மா ஆத்திரத்தில் அழு வார். அம்மாவுக்கு மூணு ஓர்ப்படிகளாம். அஃன்னா மாதிரி மூன்று பேரும் கொல்லை ரேழியில் உட்காந்திண்டு அம்மா முன்னும் பின்னுமாய்க் காரியமாய் நடமாடுகையில், அவளைப் பார்த்துக் கள்ளச்சிரிப்பு சிரிச்சுண்டே கும்மியடிப்பார்களாம்.

ஒருத்தி : ''போன மச்சான்—'' என்பாள்.

இன்னொருத்தி (பிராசம் கெடாமல்) ''திரும்பி வந்தான்!''

மூணாமவள் : பூமணத்தோடே!'' என்று தாளத்தோடு முடிப்பாள்.

அம்மா மூத்த நாட்டுப் பெண்.

உலகம் தெரிய ஒரு முறை சறுக்கினால் அப்புறம் ஒரே சறுக்கல்தான்.

''அப்படி யெல்லாம் சகிச்சுண்டு உன்னை ஆளாக்கினப் புறம் சாக்கடையில் போய் ஸ்நானம் பண்ணிட்டு வந்தை யேடா?'' என்று அம்மா அடிபட்ட மிருகம்போல் கத்துவார்.

இந்த வீட்டில் எதைச் சாக்கிட்டு சண்டை வரும், அது எப்போ எப்படி ஓயும் என்றே சொல்ல முடியாது. வீட்டில்

சுழலும் காற்றுக்கே ஒரு விறுவிறுப்பு இருந்தது. அதில் சண்டையின் அண்ட கோசங்கள் எந்தச் சமயத்தில் நாம் நம் உருவைப் பெறப் போகிறோம் எனக் காத்திருந்தபடி நீந்திக் கொண்டிருக்கும்.

இப்போத்தான் ஆறு மாஸத்திற்கு முன்னால்-அவர் போறத்துக்கு ரெண்டு மாஸத்துக்கு முன்னால்-ஒரு முக் காலணாக் கடிதாசு வீட்டுக்கு வந்தது. விலாசம் விலாசமாத் தேடியலைஞ்சு திரிஞ்சுட்டு, தபால் ஆபீஸ் வால் ஒண்ணைத் தாங்கிண்டு, முத்திரையின் உதையெல்லாம் பட்டுண்டு, அது வந்த வேளைக்கும் அதை எழுதின தேதிக்கும் ஆறுமாஸ இடை நாள் இருக்கும். அவள் தகப்பனார் காலமாகிவிட்ட செய்தி கண்டிருந்தது. யாரோ அக்கம் பக்கத்தில் அரை குறையாகத் தெரிந்த ஒரு மாமி அவளுக்கேதான் எழுதியிருந்தாள், கொச்சை கொச்சையாக!

> ''உன் அப்பாவை மூணு நாளா தேடு தேடுன்னு தேடியும் அகப்படல்லே, நந்தவனம் நாத்தம் அடிக்க ஆரம்பிச்சுடுத்து. என்னன்னு பார்த்தா, ஒரு புதர் மறைவில் மனுஷன் விழுந்து கிடக்கான். உடல் முழுக்க நீலம் பாரிச்சுக்கிடக்கு. யாருக்குக் காத்திண்டிருக்கிறது? வெட்டியான் தலையாரி மணியக்காரன் எல்லாம் வந்துட்டா. நீ வரவரைக்கும்னா, நீ போய் அஞ்சு வருஷமாயும் இந்தப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்கல்லே. நீ எங்கேயிருக்கேன்னு யார் என்னத்தைக் கண்டா? எனக்கு மனசு கேக்கல்லே. எனக்குத் தெரிஞ்ச விலாஸத்துக்கு இதை எழுதிப் போடறேன். இதுவே போய்ச் சேர்றதோ இல்லையோ? சமத்தாயிரு. நான் வேறென்னத்தைச் சொல்லப் போறேன்...?''

அன்று முழுவதும் வீடு ஒரே ரகளை. அவருக்கென்ன, சமாசாரம் கேட்டதற்கு ஸ்நானம்கூடப் பண்ணாமல் வெளியே போயிட்டார். அம்மாதான் கூடத்தில் இரைஞ்சுண்டிருந் தார், பழங்கதையெல்லாம் புதுக்கதையாய்ப் படிச்சிண்டு.

''நன்னா வேணும் அவனுக்கு! கோவிந்தாக் கொள் ளிக்குத் தானே அவன் லாயக்கு! கிடைக்க வேண்டியதுதான்

கிடைச்சிருக்கு. ஏமாந்த கொள்ளி அகப்பட்டான் என் பிள்ளைன்னு அவன் தலையில் தோசியைக் கட்டியனுப்பிச்சுட்டானே! மறப்பேனா என்ன? ஒரு கல்யாணம்னா கிள்ளுக் கீரையா? முன்னே பார்த்து, பின்னே பார்த்து ஜாதகம் குலம் கோத்திரம் பார்த்து விஜாரிச்சு, பெரியவாளைக் கலந்து யோஜிச்சு, ஆயிரம் யோசனை பண்ணி நாலுபேர் நடுவே தாலியைக் கட்டி வீட்டுக்குப் பொண்ணை இழுத்துண்டு வருவா. இந்த மாதிரி அக்ரமம் எங்கே நடக்கும்? யாருக்கு அடுக்கும்? 'இவதாம்மா பார்க்கவீ—(பழிச்சுக் காண்பிக்கிறார்) ஹி ஹீ ஹீ-உன் நாட்டுப் பொண்ணு... அம்மாக்கு வீந்து நமஸ்காரம் பண்ணு!''— இவளை முன்னே பின்னே கண்டது யாரு? கோத்ரமே ஒண்ணாயிருந்தாலும் யாருக்கு என்ன தெரிஞ்சுது? எப்படி சம்பந்தம் பண்ணிட்டு வந்தானோ அப்படித்தானிருக்கும் அன்னியிலிருந்து வீடு. என்னிக்கு மகராஜியம்மா படி மிதிச்சாளோ அன்னியிலிருந்து அழிஞ்சுதய்யா என் குடும்பம்! என்னென்னெல்லாமோ ஆசை வெச்சுண்டிருந்தேன். இப்பவும் என்னை ஏமாத்திப்பிட்டான் என் சம்பந்தி! அவனைக் கண்ணால் மட்டும் கண்டேன்னா கிழிச்சி மாலையாப் போட்டுண்டுட மாட்டேனா, அப்புறம் தூக்கேறினாலும் சரின்னு!''

இன்னும் இதே ரீதியில் என்னென்னெல்லாமோ.

அப்பாவுக்கு அழுவாளா? அம்மாவின் ஆத்திரத்திற்கு பயப்படுவாளா? அதென்னவோ வாஸ்தவந்தான். அம்மா தன் பிள்ளைமேல் என்னென்னவோ ஆசையெல்லாம்தான் வைத்திருந்தார். தன்னுடைய சரியான வயது நாளில் இழந்த பதவியெல்லாம் மீண்டும் பெற்றுவிடலாம் என்று வயிற்றையும் வாயையும் ஒடுக்கி, படாத பாடெல்லாம் பட்டு இவனைப் படிக்க வைத்து, யார் மூலமாகவோ சிபாரிசு புடிச்சு உத்யோகம் கூடப் பண்ணி வெச்சு-ஒரொரு நாள் சண்டை வருகையில் இடிச்சுக் காண்பிப்பார்! ''என்னமோ உலகத்தில் இல்லாத ஆம்படையானை ஏமாத்திப் புடிச்சுட்டேன்னு இறுமாந்துடாதேடீ! எனக்குப் புள்ளை, அப்புறந்தான் உனக்கு ஆம்படையான் உனக்கு முன்னால் என் வயத்தில்

அவன் இருந்த நாளிலிருந்து எனக்கு அவனைத் தெரியுண்டீ! நான் இல்லாட்டா அவன் இல்லைன்னு தெரிஞ்சுக்கோ!— ஆமாம், சொல்லிப்பிட்டேன்—'' என்று கறுவுவார்.

அவள் அகமுடையான் இருவருக்கும் இடையில் சப்பளம் கொட்டி உட்கார்ந்திருப்பான். கறுப்பு முழி மாத்திரம் இரு வரையும் மாறி மாறி நோக்கும். கடைக்கண் பார்வையில் வெள்ளை முழியில் கடையும். அப்படி அம்மா அசரீரி மாதிரி பேசுகையில் அந்த மனுஷன் யார் பங்கும் எடுத்துக் கொள் ளாமல் பதுங்கிய விலங்குபோல் இருவரையும் மௌனமாய்க் கவனிக்கையில் அவளுக்குப் புரியாத திகிலாயிருக்கும், இன்னும் என்ன இருக்கோ, என்ன வரப்போகிறதோ என்று. ஆமாம், உண்மையில் அவரைப்பற்றி அவளுக்கு என்ன தெரியும்? எப்படியாவது பிறந்த வீட்டை விட்டுக்கிளம்பினால் போதும் என்று வந்து விட்டாள். ஆனால் இப்பொழுதுதான் தெரியறது பொரியற எண்ணெயிலிருந்து எரியற நெருப்பில் விழுந்து விட்டாள். என்னவோ கொட்டிக் கொட்டிக் குளவி விஷத்தை ஏற்றுமாம், அது மாதிரி அம்மா கறுவிக் கறுவி அவ ளுக்குள் ஏதோ இறுகி இறுகிக் கனத்துக் கொண்டு வருவது போல் தோன்றிற்று. அதை எதிர்த்துக் கேட்டுடலாமா, இதை எதிர்த்துக் கேட்டுடலாமா என்று தோன்றும். ஆனால் அம்மா பரந்து தளர்ந்து செந்தாழை மேனியோடு எங்கோ பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கையில், என்னவோ யாக குண்டத்தில் நின்றெரியும் நெருப்பைப் போல், கிட்ட அண்டக்கூட நெஞ்சு அஞ்சும். அம்மாவுக்கு அது என்ன சக்தியோ? அதன் பேர் தான் தைரிய லட்சுமியோ? அம்மா சாதாரணமாகக் கீழே உட்கார்ந்திருந்தாலும் ஸிம்ஹாஸனத் தில் உட்கார்ந்தாப் போலேத்தான் இருக்கு.

கரிப்பு என்கிறது என்ன நிறமாயிருக்கும்? கறுப்பா? சிவப்பா? பாம்பு விஷத்தைப் போல் பச்சையாயிருக்குமா?

இப்பொழுது களைப்பும் சிந்தனையுமாய் அவள் படுத்தி ருக்கும் அரை உறக்கத்தில் ஒரு கனவு கண்டாள்.

அவளும் அம்மாவும் பாம்புகளாய் மாறிவிட்ட மாதிரி யிருந்தது. இரண்டும் எதிருக் கெதிர் தலையை உயரத் தூக்கிக்

கொண்டு, கண்களில் கொடூரம் கொதிக்க ஒன்றையொன்று சீறிக் கொண்டு உக்கிரமாய்ப் படத்தைத் தரையில் அடித்து அடித்து விஷத்தைக் கக்குகின்றன. இரண்டு விஷமும் ஒன்று கலந்து திரண்டு—என்ன ஆச்சரியம். ஒரு பூ உருவாகிறது! யானைக்காது போல் பெரிய கறுத்த இதழ்கள், பச்சைக் காம்பிலிருந்து விரிகின்றன. பூவின் நடுவில் செக்கச்செவேல் என்று ஒரு இரத்தத் தண்டு கிளம்புகிறது. அதிலிருந்து சொரியும் இரத்தத் துளிகள் பூவின் இதழ்கள் மேலும் தரை மேலேயும் சிந்துகின்றன. சிந்திய இடத்தில் ஒவ்வொரு கண் சிமிட்டிக் கொண்டே திறக்கிறது.

கரிப்பு!

வீல் என்று அலறிக் கொண்டெழுந்தாள்.

பொழுது நன்கு சாய்ந்து, மரங்களின் நிழல்கள் நீள ஆரம்பித்து விட்டன.

தலைக்கு நேர் வானத்தில் ஒரு கிளிக் கூட்டம் பறந்தது. புஷ்பங்களை ஆகாயத்தில் தூவினாற்போல். நாமும் ஏன் அது மாதிரி காற்றில் மிதந்து போக முடிகிறதில்லை. சரி சரி, இப்படி யோசனை பண்ணிண்டிருந்தால், இன்னி முழுக்கப் பணிண்டிருக்கலாம். வேலையோ முழி பிதுங்கிக் காத்துக் கிடக்கு, நாளைக்கு வெள்ளிக்கிழமை. நமக்கேது வெள்ளிக் கிழமை? வேலைக்குத்தான் வெள்ளிக்கிழமை. வெள்ளிக் கிழமை பண்ணி'யாகனும். போறும் போறாததற்கு வேறே— 'நனைச்சு வெச்சிருக்கு'! நான் ஏதாவது வேண்டாம்னு சொல்லிடுவேனோன்னு அவரே பண்ணிவிடற காரியங்களில் அது சேர்த்தி.

ஆமாம், யாருக்கு என்ன வேண்டியில்லை? பண்டம் கெட்டுப்போனால் பத்து நிமிஷம், மனுஷா தவறினால் பத்துநாள். அவ்வளவுதானே?

இன்னிக்குச் சாப்பிடலாமா, வேண்டாமா? இன்னிக்கென்னவோ அதான் மலைப்பாயிருக்கு. வேண்டியுமில்லை. சரி, ஒரு நாள் சாப்பிடாட்டால்தான் என்ன? உசிர் போயிடாது. அட அப்படிப் போற உசிர் போகட்டுமே!

எல்லாக் காரியத்தையும் முடித்துக் கொண்டு நிமிர்கை யில் நல்ல நேரமாகிவிட்டது. கட்டையை நீட்டி விட்டால் போறும். இன்றுதான் மாடிப்படிச் சுவரைப் புடிச்சுண்டு படி களை ஒண்ணொண்ணாய் ஏறினாள். அடேயப்பா என்ன அசதி! அறைக் கதவு சாத்தியிருந்தது. மெதுவாய்த் திறந் தாள்.

''யார் அது? விட முடியாது போ. இன்னியிலிருந்து நான் இங்கேதான் படுத்துக்கப் போறேன். இந்த ரூமை உனக்கு ஒண்ணும் குத்தகைக்கு விட்டுடல்லே, இது உனக்கு மாத்ரம்னு—''

பாக்கி வார்த்தைகள் முடியு முன்னேலேயே கதவை மூடினாள். சிரிப்புக்கூட வாரது. அம்மா ஏன் இப்படி தன்னைத் தானே முடுக்கிண்டு கத்தறார்?

மாடியிறக்கத்தின் முதற் படியில் உட்கார்ந்தாள், கன்னத்தைக் கையில் தாங்கிக் கொண்டு. இன்னிக்கு நானே கொஞ்சம் சுருக்க, என்னாலும் தெரு கூட அடங்கிடுத்தே! இருளோடு இருளாய் இந்த மாதிரி இழைஞ்சிருக்கிறதும் இதமாய்த் தானிருக்கு.

என்னவோ நான் என்கிற தன்மையின் பிரிவான தனி மையோ பொறுப்போ இல்லாமல், கர்ப்பத்தில் தூங்கும் சிசுப் போல் ஏகாந்தமான இருள் அவளைத் தன் வயிற்றுள் அடக்க மாய் அடக்கிக் கொண்டாற் போல் இதழ்களுக்குள் பூவுக்கு வயிறு கட்டியிருப்பது போல்...அப்பா சொல்லுவா, 'அது களுக்கு என்ன கவலை? ஆயுசு என்னவோ குறைச்சல்தான். ஆனால் அதுகளுக்கு ஆயிசு வரை அழகும் சிரிப்பும்தான்...னு'

கீழே ஏதோ சாமான் உருண்டு சிந்தனையைக் கலைத்தது. போய்ப் பார்க்கலாமா, வேண்டாமா? என்னவாயிருக்கலாம்? ஓஹோ, சுவாமி பிறையுள் எலி மாட்டிண்டு விக்ரஹத்தைத் தள்ளி விட்டிருக்கு.

அம்மாதிரி அந்த சப்தத்தை அடையாளம் கண்டு கொண் டதுமே அந்த வெர்ட்டி அப்பொழுதான இரண்டு மாதங் களுக்கு முன்னால் நேர்ந்த ஒரு சம்பவம், நினைவு முழுக்கிலி

ருந்து மேடு எடுத்துக் கொண்டு எழுந்தது. அதை ஆயுசுக்கும் மறக்க முடியாது.

அன்று வெள்ளிக்கிழமை மாலை. வெள்ளிக்கிழமை வந்தாலே நல்ல கிழமையாகப் போகவேண்டும் என்ற கவலை யுண்டு. இந்த வீட்டில் வெள்ளிக்கிழமைக்கும் சண்டைக்கும் அவ்வளவு ஏர்வை. அப்போத்தான் விளக்கேற்றி விட்டு அடுப்பில் எதோ காரியமாய் இருந்தாள். திடீர் என்று எதிர் அறையில் ஒரு வீறல்.

"மோசம்! மோசம்!"

"என்ன? என்ன?" அவள் கணவன் மாடியிலிருந்து திடு திடுமென இறங்கினான்.

"நூறு ரூபாய் நோட்டு என் பெட்டியில் வெச்சிருந்தேனே? யார் எடுத்தேள்? உண்மையைச் சொல்லிடுங்கோ, யார் எடுத்தேள்?" ஒரே கர்ஜனை.

அம்மா கையைப் பிசைஞ்சுண்டு நிக்கறார். மூஞ்சியே வெடிச்சுடும் போல், தக்காளிப்பழம்போல் சிவந்துபோயிருக்கு.

அவள் கணவன் சிரித்தான். "என்னம்மா பேத்தறே? யார் எடுக்க முடியும்? கர்ணகுண்டலம் மாதிரி சாவிக் கொத்தோ உன் இடுப்பில் தொங்கிண்டே இருக்கு. எங்கே யாவது ஞாபக மறதியா வெச்சிருப்பே. சரியா தேடிப் பார்—"

"அடே, எனக்கா ஞாபக மறதி?"

"யானைக்கும் அடி சறுக்கும் அம்மா. எப்பவுமே நீயே எல்லாம் தெரிஞ்சவளா இருக்க முடியுமா?"

"நிறுத்துடா உன் பிரசங்கத்தை! மறு சாவி போட்டுத் திறந்திருக்கு — எனக்கென்னவோ சொல்ல வந்துட்டான் பெரிசா!"

"காக்கா கீக்கா கொத்தி-"

"ஆமாண்டா! கொத்திண்டு போய்க் கடையிலே கொடுத்து, 'செட்டியாரே செட்டியாரே! எனக்கு ஒரு வடை கொடுத்து மீதி சில்லரை தாங்கோ'ன்னு கேட்டுதா? இங்கே என்னவோ சூது நடக்கிறதுடா! தெரியாத்தனமா மாட்டிண்டுட்டோண்டா!"

அவளுக்கு முதுகுத் தண்டு சில்லென்றது. இதுக்கென்ன அர்த்தம்? அம்மா புழுவாய்த் துடிக்கறார். நின்ன இடத்தில் நிற்காமல் பரவாட்டல் ஆடறார். ஒண்ணா ரெண்டா, நூறு ரூபாய்கள். தட்டித் தட்டிச் சுண்டி சுண்டி எண்ணினால் நூறு, அம்மாவுக்குத் தனியாய்ப் பண லேவாதேவி உண்டு. சீட்டுப் பிடிச்சு, தம்பிடிக்குத் தம்பிடி கந்து வட்டி விட்டு ஒண்ணைப் பத்தாக்கி பத்தை நூறாக்கி—அம்மா ஒண்ணு சொல்வதில் சந்தேகமில்லை அவர் இல்லாட்டா இந்த வீடு இல்லை.

"இல்லை. இன்னிக்கு இதை நான் சும்மா விடப் போற தில்லை. அடிவரை ஆராயத்தான் பேோறன்—"

மாடிக்கும் கீழுக்குமாய்த் தேடாத இடமெல்லாம் தேடி யாறது,தென்னை மரத்தில் புல் புடுங்கியாறது. வீட்டில் இருக் கிற பெட்டிபேழை, டப்பா, பானை எல்லாம் தலை கீழாகக் கொட்டியாறது. "கொண்டாடி உன் சாவியை,"— அவள் பெட்டிக்குச் சாவியேது? அத்துக்கு ஒரு கம்பியை வளைத்து மாட்டியிருந்தாள். அவள் பெட்டியில் என்ன இருக்கு முன் னாலே? ஏதோ ஒரு புடவை. நாலு ரவிக்கை, போன வரு ஷத்துக் காலண்டரிலிருந்து அவளாக ஆசைப்பட்டுக்கத்தரித்து எடுத்த படம், வருஷப் புறப்புக்கு நமஸ்காரம் பண்ணின தற்காக அம்மா கொடுத்த வெள்ளி நாலாணாக்காசு; அவ்வளவுதான், ரூபாயா? அடே அம்மாடியோ! ரூபாய் இருந் தாலும் அவளுக்குச் செலவழிக்கத் தெரியாது.

ஆனால் அம்மாவுக்குப் பதைபதைப்பு அடங்கவில்லை. "இங்கே என்னவோ சூது நடந்திருக்கு, சந்தேகமேயில்லை. ஒரு காலணாக் காசு காண, ஒரு சொட்டு ரத்தம் சிந்தறேன், ஒரு பச்சை நோட்டு வெச்ச இடத்திலே காணாம்னா வயிறு எரியறதே—;' அம்மா சாப்பிடல்லே. ஆனால் அவர் மாத்திரம் இலையைப் போடுன்னு கேட்டு, மூக்கைப் பிடிக்க இழுத்து விட்டு, பேப்பரைத் தூக்கிண்டு வாசல் திண்ணைக்குப் போயிட்டார். புருஷாளே அப்படித்தான்.

அம்மா கூடத்திலேயே, தூண்மேலே சாஞ்சுண்டு எங்கோ வெறிச்சுந் பார்த்துண்டு ரொம்ப நேரம் ஒண்ணுமே பேசாமே உட்கார்ந்திருந்தார். அவளுக்குத் தூக்கங்கூட கண்ணைச்

சுத்த ஆரம்பிபிச்சுடுத்து. ஏதோ தீர்மானத்துக்கு வந்து அம்மா சட்டுனு எழுந்தார்.

''அம்பீ—''

''என்ன?'' அவள் கணவன் உள்ளே வந்தான்.

''நான் ஒரு தீர்மானத்துக்கு வந்தூட்டேன். எல்லோருமா கல்பூரத்தை ஏத்தித் தட்டிடுவோம் எடுக்கல்லேனு. இல்லாட்டா என் மனம் சமாதானமாகாது. பைத்தியம் பிடிச் சுடும் போல் இருக்கு.'' அம்மாவின் வார்த்தைகளைக் கேட் டதும் மாம்பழத்துள் கத்தி யிறங்குவதுபோல் அடிவயிற் றுள்ளே சில்லிப்பு துண்டமிட்டது.

''ஒரு நூறு ரூபாய்க்கு இவ்வளவு ரகளை பண்ணுவது நியாயமாயிருக்கா அம்மா? அப்புறம்—?''

''நியாயம் அநியாயம் எல்லாம் எனக்குத் தெரியுண்டா. எனக்கு அப்புறம், என்னால்தான் நீ பிறந்தே. அதை ஞாபகம் வெச்சுக்கோ! எனக்குக் கத்துக் கொடுக்க வேண்டாம். மனசு வெளிச்சமாயிருக்கறவா எதுக்குமே பயப்பட வேண்டாம். எத்தனை ரூபாயிருந்தாலும் அவாளுக்கு ஒண்ணுதான்—''

''சரி, உன்னிஷ்டம்...''

அம்மா கர்ப்பூரத்தை சுவாமி விக்ரஹத்திற்கு எதிரில் ஏற்றிப் பலகையைத் தட்டி ஊதினார். விக்ரஹம் அதிர்ந்து கீழே விழுந்தது. அவள் வயிற்றுள் சுவர் இடிந்தது! அடிவயிற்றை அமுக்கிப் பிடித்துக் கொண்டாள். அம்மாவின் கண்கள் திரிகள் மாதிரி எரிந்தன. விக்ரஹத்தை நிமிர்த்தி வைத்துக் கர்ப்பூரத்தை ஏற்றினார்.

''ஊம்—ஆகட்டும்—''

அடுத்தாற் போல் அவர் தட்டினார்; வயிற்றுள் இன்னும் நாலு கற்கள் இடிந்தன. அவர் தட்டிய தினுசைப் பார்த் தால் இன்னும் எத்தனை முறை தட்டச் சொன்னாலும் அவர் தயார். எப்படியாவது இன்னி ரகளைக்கு முடிவு கட்டினால் சரி. அவளுக்கே அப்படித்தானிருந்தது. ஆனால் சோடாக் கோலிமாதிரி பிதுங்கிய விழிகளுடன் விக்ரஹம் அவளைப் பார்க்கையில், அவளுக்கு என்னவென்றே தெரிவில்லை.

''ஊம்—ஆகட்டும்—''

"நான் மாட்டேன் அம்மா—"

"ஆ! பாத்தியா, பாத்தியா—பாத்தியாடா அம்பி!" அம்மா சிரிப்பில் புகை கிளம்பிற்று. "இதுக்குத்தான் சொன்னேன்; இந்த வீட்டில் ஏதோ சூது நடக்கறதுன்னு! இப்போ விளங்கிப் போச்சோன்னா?"

அழுகை, தைரியம், ஆத்திரம் எல்லாம் ஒருங்கே அவளை அழுத்தின. "உங்களுக்கு என்ன வேணுமானாலும் விளங்கிக் கட்டும். நீங்கள் என்ன வேணுமானாலும் நினைச்சுக்கலாம். எனக்கு அதைப் பற்றி அக்கறையில்லை. நான் மாட்டேன். அவ்வளவுதான். சாமியே உங்களுக்குத்தானிருக்கிறார். மத்த வாளுக்கில்லைன்னு மூக்கைப் பிடிச்சுண்டு பூஜை பண்ணிண்டு தலையில் தூக்கிவெச்சுண்டு நான் கூத்தாடவும் இல்லை. அடுத்த நிமிஷம் காலில் கட்டி இந்த மாதிரி அடிக்கவுமில்லை. ரெண்டுமே எனக்கு வேண்டாம்! மாட்டேன்னா மாட்டேன்-"

அவள் போட்ட கத்தலில் தொண்டை கிழிந்தது. கால் கட்டை விரலிலிருந்து ரத்தம் பாய் மாதிரி சுருண்டு கொண்டே வந்து தலைக்கேறிற்று. மடேரென்று அப்படியே குப்புற விழுந்து விட்டாள். அப்புறம் என்ன நடந்தென்று தெரியாது.

மறுபடியும் விழித்துக் கொள்கையில் அவளைக் கும்மிருள் சூழ்ந்திருந்தது. உடம்பைக் கல்மேல் அறைந்தாற்போல் கணுக்கணுவாய் முறித்து வலித்தது. "அம்மா—"

நினைவு மெதுவாய்க் கூட ஆரம்பித்தது. அவளோ அவள் தாயாரைக் கண்டது கூட இல்லை. ஆனால் அதெப்படி "அம்மா"ன்னுதான் முதலில் தோண்றது? அம்மா' என்கிறது ஆதிமூலக் குரலோ?

அந்தச் சமயம் அவள் மேல் ஒரு கை பட்டது. ஸ்பரிசத திலிருந்து கணவர் என்று அறிந்தாள்; ஆனால் வாய் திறக்க முடியவில்லை. பல் கிட்டிவிட்டது. அவர் தொடும் தினுசிலிருந்துதான் முழித்துக் கொண்டது அவருக்குத் தெரிய வில்லை எனத் தெரிந்தது, அவர் கை அவள் தோளிலிருந்து

மணிக்கட்டிற்கு இறங்கி, கைக் காப்பைக் கழற்ற ஆரம் பித்தது. முழுத் தங்கம்கூட இல்லை. உள்ளுக்குக் கட்டை கொடுத்து, மேலே தகடு அடித்ததுதான்.

நெஞ்சிலேயே சதை உரித்தாற்போல் அவளுக்கு ஒரு புது வெளிச்சம் உண்டாயிற்று. பயங்கர வெளிச்சம். முன்னது, பின்னது, தற்போது எல்லாம் ஒருங்கே புரியும் அதிர்ச்சியில் வாயிலிருந்து வார்த்தையும் விடுபட்டது.

"இந்தாங்கோ நானே, தரேன்—" சட்டெனக் காப்பை உருவி அவன் கைக்குள் திணித்தாள். கை சட்டெனப் பின் வாங்கிற்று. கால்கள் ஓடின. கதவு மூடிற்று. இப்போ எல்லாம் புரிந்தது. அம்மா இடுப்பில் சதா சர்வ காலமும் (தூங்கும் போது கூட) சாவிக் கொத்து ஏன் தொங்குகிறது. அவள் கணவனுக்கு திடீர் திடீரென ஏற்படும் பண சௌகரி யங்கள், அந்தச் சமயங்களில் 'ஆடு அன்னிக்கு, மாடு மத்தி யானம்' என்று அவர் நடத்தும் தர்பார்கள், சேர்ந்தாற்போல் நாள் கணக்கில் காணாமல் போய்விடுவது, ஆட்கள் அவரை அடிக்கடி தேடி வருவது, சில சமயங்களில் எதற்கும் துணிந்த அவருடைய முரட்டு தைர்யங்கள், திடீர் உற்சாகங்கள், அடுத்தாற்போலேயே மூணு நாட்கள் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டு யாருடனும் பேசாமல் கூனிக் குறுகி உட்கார்ந்திருக்கும் ஒடுக்கங்கள், குடும்ப விவகாரங்களில் எதையுமே காதில் வாங்கிக் கொள்ளாமல் இருப்பது, அநியா யங்களுக்குக்கூட அம்மாவுடன் ஆட்சேபிக்காமல் இருப்பது, தன் சிந்தனையே தன்னையடைத்துக் கொண்டிருப்பதால் பிறரோடு ஒட்ட இஷ்டமோ சக்தியோ இல்லாமல் இருப்பது, உறக்கத்திலும் விழிப்போடு இருக்கும் காட்டு விலங்குபோல் ஒரு சதா உஷார்—அவரிடம் எப்போதுமே நேர்ப்பார்வை யில்லை. ஓரப்பார்வைதான்—குடும்பச் செலவுக்கு அம்மா ஏன் பிள்ளையை நம்பியில்லை, நூறு ரூபாய் நோட்டு எப்படிக் காணாமல் போயிற்று (அம்மாவுக்குத் தெரிஞ் சிருக்காதா என்ன? உள் மனசுக்கு உள் மனது ஒண்ணு இருக்கே, அது தெரிஞ்சிண்டிருக்கும்) எல்லாமே, கும்மிருட்டில்

திடீர்னு விளக்குப் போட்டாற்போல் புரிஞ்சுது. ஞானோதயம் என்பது இப்படித்தானிருக்குமோ?

அன்றிலிருந்து எதையுமே அவர் காதில் வாங்கிக் கொள்வ தில்லை. காதிலே ஒரு சிறு அடைப்பு ஏற்பட்டு விட்டது. யாரோ சொல்றா, எதையோ சொல்றா, யாரையோ சொல்றா. என்ன சொன்னால் எனக்கென்ன?

ஆனால் அன்றிலிருந்து அம்மாவும் முன்மாதிரி அவ்வளவு கோபிப்பதில்லை. அவள் அன்று மூர்ச்சையாய் விழுந்ததில் அவர் கொஞ்சம் மிரண்டுட்டார்னு தோண்றது.

ஆமாம்; எது எப்படிப்போனால் என்ன, அதை நினைக்கக் கூட அவ்வளவு அலுப்பாயிருக்கு!

அதோ அன்னிக்கு—சரியா இன்னியோடே அறுபத்தி மூணு நாளாறது—ரேஸ் மைதானத்திலிருந்து, ஜட்கா வண்டியில் அவரைக் கட்டையாய்ப் போட்டுண்டு வந்து வீட்டில் சேர்த்தாள். குதிரை தோத்துப்போச்சாம். மார்த் துடிப்பு பட்டுனு நின்னு போச்சாம். எவ்வளவு பணம் கட்டி யிருந்தாரோ? யார் யார் பணத்தையெல்லாம் கட்டியிருந் தாரோ? கடைசியில் மனுஷனுக்கு என்ன அவமானமான முடிவு? இப்படியெல்லாம் மனசு எண்ணறதே தவிர, 'ஐயோ போயிட்டாரே அநியாயமா' என்ற உணர்ச்சி பீறிட்டுக் கொண்டு எழமாட்டேன் என்கிறது. எல்லாம் நியாயமாய்த்தான் போயிருக்கான்னு கூட நெஞ்சு, நெஞ்சுக்கு ரகஸ்யமா உண்மையை வெளியிடறது.

கிழவியைப் பார்த்தால்தான் பரிதாபமாயிருக்கு. நல்லதோ கெட்டதோ, ஒரே பிள்ளை. அவன் கைக் கொள்ளியை வாங்கிக்க அவருக்குக் கொடுப்பனையில்லை. ஆனால் அம்மா கூட அதிகம் அழவில்லை. அம்மா தைரியம் அசாத்தியம். பழையகாலத்து ராஜபுத்ர ஸ்திரீகளைச் சேர்ந் திருக்க வேண்டும். அதென்னவோ தெரியல்லே, கஷ்டத்தில் அவர் நெற்றியில் தேஜஸ் விளையாடற மாதிரி அவளுக்குத் தோணறது.

இப்போ ஒரு சந்தேகம் தோணறது. என் ஆம்படை யானைப்பற்றி நான் நினைக்கிறப்போ அவர்னு நினைக்கி றேனா, அவன்னு நினைக்கிறேனா, அதுன்னுநினைக்கிறேனா?

எதுவாயிருந்தால் என்ன? இனிமேல் எது எப்படிப் போனால் என்ன? செத்தமாட்டுமேலே எது ஏறினால் என்ன? என்னமோ உயிரோடு இருக்கிற மாதிரி தோணறதே யொழிய நிஜமாகவே நான் உயிரோடிருக்கேனோ இல்லியோ? இதை எனக்கு நிச்சயமாச் சொல்ல யாரிருக்கா?

"நான் இருக்கிறேன்—!"

அவள் திடுக்கிட்டுப்போனாள். அது அம்மா குரல் இல்லை.

"யார் அங்கே?" எழுந்து நின்றாள். நெற்றியில் வேர்வை முத்திட்டது.

"யார் அங்கே?" யாருமில்லை. ஸன்னமாய் மூச்சுப் போல் குளிர்ந்த காற்று கிளம்பி முகத்து வேர்வையை ஒற்றி யது. அவளுக்குப் புரிந்தது.

"அம்மா! அம்மா!" கதவைப் படீரென்று திறந்து கொண்டே உள்ளே ஓடி, இருளில் அவர்மேல் தடுக்கி விழுந் தாள். அவர் காலைக் கெட்டியாய் மார்போடு தழுவிக் கொண்டாள்.

"அம்மா, அம்மா, நான் உண்டாயிருக்கேம்மா!—"

அம்மா உடல் பூமிபோல் கிடுகிடென்று ஆடிற்று. மரு மகளைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டாள்.

இருளில் அவள் முகத்தின்மேல் இரு இதழ்கள் உதிர்ந்தன.

# 7. இதழ்கள்

''யானைத் தலையளவு பெரியபூச்செண்டுடன் இன்று மிஸ் ஹெர்மாயின் மேரிகோல்டு பார்க்க வந்தாள். வருவாள் என்று எனக்குத் தெரியும். இன்று தவற மாட்டாள். ''குட் மார்னிங். மிஸ்டர் ராம்! (என் முழுப் பெயரை உச்சரிக்க அவளுக்கு என்றும் நாக்குப் புரள்வதில்லை) நீங்கள் சிரஞ்சீவி யாக இருக்க வேண்டும். இந் நன்னாள் திரும்பத்திரும்ப வர வேண்டும்.''

''ஓ தாங்க்யூ. தாங்க்யூ. எவ்வளவு நேர்த்தியான செண்டு!''

மிஸ் ஹெர்மாயினின் கன்னங்கள் சிவப்புப்பூத்தன. அவள் புன்னகையில் மூக்குத் தண்டு சுருங்கிற்று. பழுத்த நெற் கதிர் களின் நிறத்தில் கேசம் சுருளாது பட்டையாய் வாள் வீச்சுப் போல் வேகமாய் நெற்றியிலிருந்து கிளம்பிப் பின்னுக்குப் பிடரியிலிருந்து முதுகில் தோள்பட்டை வரை வளைந்து திடீரெனக் கத்திரிப்பில் முடிந்தது. ஒடிய ஒடியச் சுறுசுறுப் பாய் அவள் வரும் நடையில் அவள் முகமே, நீண்ட காம்பின் மேல் காற்றில் அசைந்தாடும் பூப்போல்தான் இருந்தது.

ஐந்து வருடங்களாய் இப்படித்தான் வருகிறாள். நித்ய யௌவனியாய் ஒருவித மாறுதலுமின்றி இப்படியேதான் இருக்கிறாள். ஒவ்வொரு தடவையும் இதே பல்லவிதான்.

' மிஸ்டர் ராம்! இப்போது எப்படி யிருக்கிறீர்கள்? ஒன்றுமில்லையே! நல்லது, நல்லது. ஓய்வு, ஓய்வு, நிறைய ஓய்வு. ஓய்வுதான் மருந்து. ஜலதோஷம் கண்டால் அசட்டையாயிருந்து விடாதீர்கள். உடனே கவனிக்கணும். சரி, சரி, நான் போகணும். ஓ சிரமப்படாதீர்கள். எழுந்திருக்க வேண்டாம், நான் வருகிறேன்!''

ஐந்து வருடங்களின் ஐந்து முறைகளிலும் இதே திடும் பிரவேசம், இதே பஞ்சாதி, இதே மூச்சில் இதே அவசரமான மறைவுதான்.

கதவைத் தன் பின்னால் மூடிக்கொண்டு தடதடவெனப் படிக்கட்டுக்களில் இறங்கிச் செல்லுகையில் அறையே சற்று இருண்டாற் போலிருக்கிறது; தன்னொளியுடன், என் தெம்பிலும் கொஞ்சம் பிடுங்கிக் கொண்டு செல்கிறாள். சோர்வுடன் தலையணைமேல் மீண்டும் சாய்கிறேன். செண்டில் என் முகத்தைப் புதைத்துக் கொள்கிறேன். அதன் மணத்தில் தலை சுற்றுகிறது,

இப்படிப் போவதற்கு இவள் இங்கே வருவானேன்?

நான் பசித்தவன். ரொம்பவும் பசித்தவன். எதிலும் எனக்கு எவ்வளவு இருந்தாலும் போதவில்லை. எல்லோரையும் விழுங்கிவிட்டுக் காயும், பூவும், இலையும் உதிர்ந்த நான் மாத்திரம் நடுத்தண்டாய் நிற்கிறேன். இந்தத் தனிமை யாருக்கு வேண்டும் என்றால் யாரை விடுகிறது? உன் தனிமை உன் சுமை; என் பழங் கணக்குகள் என்னவை.

பசித்தவனின் பழங் கணக்குகள்.

x x x x

அம்மா!

அம்மா!!

மூல மூச்சின் ஜீவாவில் உருவான முதல் ஓசை. இதன் எதிரொலிக்கு மிஞ்சியது எது?

அம்மா! அம்மா!! அம்மா!!!

குபுக் குபுக் குபுக் என்று மூச்சடைக்கிறது. கழுதை வயதாகியும் குழந்தையின் வெட்கமற்ற கண்ணீர் கன்னங்களின் வாய்க்காலில் கரை புரள்கிறது.

நான் தளையவிழ்கிறேன்.

இவ் வெள்ளத்தில் இதழ்கள் ஒவ்வொன்றாய்க் கழன்றும், பிய்ந்தும், அலைந்தும், சுழன்றும் அதனதன் வழியே செல்கின்றன. உள் நினைவின் ஒரே இதழ்மேல் படுத்து அது போன படி மிதந்து செல்கிறேன்.

இந் நிலையில் நான் நினைவுகளில் எடுபடுகிறேன். அந்தந்த நினைவுகளின் எந்தெந்த வேளையோ அந்தந்த வேளையின் அந்தந்த உருவில் இருக்கிறேன்.

இருப்பதைக் காண்கிறேன்.

x x x x

**சி**வப்பு, மஞ்சள், ஊதா, வெள்ளை, நீலம், எல்லா வர்ணங்களும் மிஸ் ஹெர்மாயினின் பூச் செண்டில் அடங்கி யிருக்கின்றன. செண்டில் என் முகத்தைப் புதைத்துக் கொண்டிருக்கிறேன். என் கண்ணீர், பூக்களின்மேல், பனித் துளிகள்போல் நிற்கின்றன. உள் பிரக்ஞையெனும் ஒரே இதழில் படுத்து மிதக்கும் வெள்ளத்தில், செண்டும் என்னை விட்டுப் பிரிந்து தன் யானைத் தலையை ஆட்டிக்கொண்டு மிதந்து செல்கிறது. என்னிடம் அது இருக்கிறது; கூடவே இல்லவும் இல்லை. உடலினின்று உயிரின் பிரிவும் இதுதானோ?

x x x x

**இ**ப்பொழுது நான் கட்டிலில் படுத்திருக்கும் நிலையில் ஜன்னலின் வழியாகப் பக்கத்து வீட்டின் அகன்ற நடு முற்றம் தெரிகிறது. அதன் எதிர்த் தாழ்வாரத்தை ஒட்டினாற்போ லிருக்கும் சமையலறையின் இருட்டிலிருந்து அடுப்புத் தீ தெரிகிறது.

**இ**ருந்தாற் போலிருந்து எங்கள் வீட்டுச் சமையலறையைக் காண்கிறேன்.

அடுப்பெதிரில் அம்மா உட்கார்ந்திருக்கிறாள். குழந்தை யாய் அவள் மடியில் நான் படுத்திருக்கிறேன்.

என் முகத்தை மூடிய மேலாக்கைத் தள்ளிவிட்டுத் திரும்பி அடுப்பிலாடுந் தீயை வியப்புடன் நோக்குகிறேன். என் உதட்டோரத்தில் பால் வழிகின்றது.

அடுப்பிலிருந்து அக்கினி தன் எண்ணிறந்த கைகளை நீட்டி என்னை அழைக்கிறது. நீலமும் சிவப்பும் அரக்குமாய்ச் சாயங்கள் தீயின் விளிம்பிலும் நடுவிலுமாய்ப் பிறந்து வழிந்து ஒன்றோடொன்று இழைந்து, விதவிதமான முகங்களையும்

உருவங்களையும் நீட்டி அழித்துச் சலிக்காமல் மறுபடியும் இழைக்கின்றன.

பார்த்த முகங்கள், பாராத முகங்கள்.

இவ்வேழு மாதங்களுள் நான் எவ்வளவு முகங்கள் பார்த்திருக்க முடியும்? ஆனால் இவ்வேழு மாதங்களுள் நேர்ந்த முகங்கள் அல்ல இவை. ஏழாயிர வருடங்களின் முகங்கள்.

பின்னால் கையைக் கட்டிக்கொண்டு அப்பா உள்ளே வருகிறார். "என்ன, இன்னிக்காவது வேளைக்கு அகப்படுமா? இல்லை, இன்னிக்கும் எங்கள் மாமனார் வீட்டில்தானா?"

"என்னைக் கேட்டால்? இதோ, இதைக் கேளுங்கோ! இதுக்கு இப்பவே வேடிக்கை, எக்சிபிஷன் எல்லாம் வேண்டியிருக்கிறது. குடியேண்டா, எனக்குக் கொள்ளை வேலை கிடக்கு! குண்டு பெருச்சாளி, கஷ்கு முஷ்கு!"

சந்தோஷத்தில் அம்மா "பட்பட்"டென என் பின் புறத்தில் பின்புறம் அறைகிறாள். அப்பா கிட்ட வந்து குனிந்து என்னை நோக்குகிறார்.

"என்ன ஸ்ரீமதி! இதுக்கு என்ன, மூக்கு முழி கால் கையென்று புரியுமா? இது என்னவோ பூசணிக்காய் மேல் எழுதினாற்போல்—"

"சரி தான் போங்கோ, இந்த இடத்தைவிட்டு!" அம்மா சீறி விழுந்து அவசரமாய் என் மேல் மேலாக்கைப் போர்த்தி, என்னை இன்னும் இறுக அணைத்துக்கொள்கிறாள். "உங்கள் கண் ஒண்ணே போறும்போல் இருக்கே!"

மறுபடியும் துணியைத் தள்ளிவிட்டுச் சுற்றுமுற்றும் பார்க்கிறேன். சுவர்களில் நிழல்கள் வெறிக் கூத்தாடுகின்றன; என்மேல் அம்மா குனிகிறாள். அவள் மூக்குத்தியில் நட்சத்திரங்கள் சுடர் விடுகின்றன.

இம் முகம்—இந்த ஒரு முகம் மாத்திரம் எனக்கு இப்போது ஏழு மாதங்களானாலும், இதற்கு முந்திய ஏழாயிர வருடங்களாய்த் தெரிந்த முகம்—என்றும் மறவாத முகம்.

அம்மா!

"அடுப்பு வீணாய்ப் போகிறது. குடியேண்டா குடி, குண்டு பெருச்சாளி, கொழுக்கட்டை, கஷ்கு முஷ்கு!"

மறுபடியும் சமையலறையில்தான் இருக்கிறேன். மறுபடியும் அம்மா மடியில் குழந்தையைக் கொஞ்சிக் கொண்டிருக்கிறாள்.

"தம்பி!" பின்னால் கைகட்டிக் கொண்டு அப்பா உள்ளே வருகிறார்.

"என்ன சொல்கிறான் இந்த நூற்றுக் கிழவன்?"

"திருப்பித் திருப்பி என்ன அவனுக்கு? இது வரைக்கும் மூணு கிண்டி காப்பி, நாலு பிஸ்கோத்து, ஒரு முறுக்கு ஆச்சு. நீங்கள் ரஸத்துக்கு வாங்கிண்டு வந்தேளே மொக்கான் மொக்கானாய் அந்த மூணு தக்காளிலே ரெண்டு குளோஸ்! கண் மூடறவரைக்கும் வாய் மூடாப் பட்டினி. இன்னும் மம்மு எப்போ ஆகும்னு அரிச்செடுத்துண்டிருக்கான். பாருங்கோ குறவன் மாதிரி உறுத்து முழித்துக் கொண்டிருக்கிறதை!"

"குழந்தையை ஒண்ணும் சொல்லாதே. எப்படி இளைச்சுட்டான்! மரப்பாச்சியா ஆகிவிட்டான். வாடா கண்ணா. நாம் 'ஓ' போகலாம்!"

நான் அப்பா கையை உதறுகிறேன்.

"போப்பா! உன்னை அடீப்பேன்!"

"ஊம்! என்ன சொன்னே?" அம்மா என்னை முறைக்கிறாள். நான் உடனே என்னைத் திருத்திக் கொள்கிறேன்.

"போங்கோப்பா! அடிப்பேன் உங்களை!" அப்பா சிரிக்கிறார்; "ஓ! அம்மா இப்படித்தான் சொல்லச் சொன்னாளா?"

அம்மா பல்லைக் கடித்துக்கொண்டு என்மேல் கை ஓங்குகிறாள்.

"சரி சரி; ஸ்ரீமதி கொஞ்சம் சமத்தாயிரு. அவனுக்குப் பசி. ஆனவரைக்கும் போட்டுடேன்."

"சனியம்ன, உக்காரு. உனக்கு அப்பா சிபாரிசு வேறே வந்துடுத்தோன்னோ?"

அம்மா கரண்டியை வெண்கலப் பானையுள் போடுவதற்குள் எனக்குத் தாங்கவில்லை. பசி வயிற்றுள் தேளாய்ப் பிடுங்குகிறது. அலறுகிறேன்.

"இன்னிக்கு உன்னைப் புலியைக் கட்டி இழுத்துப்பிடுவேன். படவா. காக்காய்க்குப் போடவேண்டாமா?"

"நான்தான் போடுவேன்" என்று அழுச்சாட்டியம் பண்ணுகிறேன்.

"தொலைச்சுக்கோ!"

அம்மா சின்னத் தட்டில் வைத்துக் கொடுக்கிறாள். நான் தட்டைத் தூக்கிக்கொண்டு முற்றத்துக்குத் தத்தித்தத்தி நடந்து செல்கிறேன்.

அப்பாவின் கிலேசம் தட்டிய குரல் என்னை எட்டுகிறது. "என்ன இப்படிச் சீவனற்றுப் போயிடுத்து! எப்படி யிருந்தான், எப்படி ஆகிவிட்டான்? சப்பை எப்படி ஒட்டிப் போய் விட்டது பார்த்தையா?"

"என்ன பண்ணுகிறது? சவலைஎன்றால் இந்த அவஸ்தை தான்!"

தோய்க்கிற கல்லடியில் புதைத்த கடப்பைக் கல்மேல சாதத்தைக் கொட்டுகிறேன். அதில் பருப்பும் நெய்யும் காலை வெய்யிலில் பளபளக்கின்றன. நான் சுற்றும் முற்றும் பார்த்து விட்டுச் சாதத்தில் அந்தப் பாகத்தை மாத்திரம் விண்டு வாயில் போட்டுக் கொள்கிறேன்.

சிரிப்புப் பீறிடும் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்புகிறேன். என் முகத்தில் வழியும் திருட்டைப் பார்த்து அப்பா அம்மா இருவரும் சிரிக்கிறார்கள்.

பசி, பசி, அதென்ன பசியோ எனக்கே புரியவில்லை. தின்னத் தின்ன இளைக்கிறேன். வயிறு மாத்திரம் விகாரமாய்ப் புடைத்துக் கொள்கிறது. அப்பவும் பசி தீரவில்லை.

ஒரு பண்டிகை தினம். இலையைப் போட்டுத் தண்ணீர் தெளிப்பதற்குள் பசி தாளவில்லை. கைகால்களை உதைத்துக் கொண்டு கூடத்தில் புரண்டு புரண்டு அழுகிறேன். மாக் கோலங்களின் வடிவங்களும் செம்மண்ணும் என் வயிற்றிலும்

முதுகிலும் ஒற்றிக் கொள்கின்றன. அம்மாவுக்குப் பொறுக்க முடியவில்லை. உள்ளே போய் அப்படி அப்படியே வெண்கலப் பானையோடு சாதம், கற்சட்டியோடு குழம்பு, ஈயச் செம்போடு ரசம், தட்டோடு கறிபால், உருளியோடு பாயசம் எல்லாவற்றையும் கொண்டு வந்து என் எதிரே வைக்கிறாள்.

''இந்தா தின்னு, தின்னு இப்படியே தின்னு.''

என் வெறி 'கப்'பென அடங்கிவிடுகிறது. நான் எழுந்து உட்காருகிறேன். ஏனங்களைத் தொட்டுத் தடவித் தவிக்கிறேன். இதெல்லாம் இப்படியே சாப்பிட்டுவிட வழியில்லையா?

அப்பாவும் அம்மாவும் கொஞ்ச நாழி இந்தக் காட்சியை மௌனமாய் அனுபவிக்கிறார்கள். திடீரென அப்பாவின் முகம் மாறுகிறது.

''ஸ்ரீமதி. உள்ளே கொண்டு போய் வை. உடனே வெச்சூடு! இதென்ன வேடிக்கை வேண்டியிருக்கிறது. ஸ்வாமிக்கு நைவேத்யம் பண்ணுகிற மாதிரி! எடு எல்லாவற்றையும்!''

அப்பா வந்து என்னருகே உட்கார்ந்து என் கையில் ஒரு வடையைக் கொடுத்துவிட்டு என் முதுகைத் தடவுகிறார். தன் மேல்துண்டால் என் மூக்கின் ஒழுகலைத் துடைக்கிறார்.

x x x x

ஆனால் இது வயிற்றுப் பசி மாத்திரம் இல்லை. வயிறு மாத்திரம் இவ்வளவு பசிக்க முடியாது. கூட வேறு ஏதேதோ பசிகள். திண்ணமாய் இன்னெனப் புரியாத ஏதேதோ தாபங்கள், கோபங்கள், பொறாமைகள், ஏக்கங்கள் எல்லாம் இவ்வயிற்றுப் பசி மூலம் ஓரளவு தங்கள் தங்கள் நிறைவு காணவோ விடுதலை பெறவோ முயல்கின்றன. எனக்கே அப்பவே, கொஞ்சம் தெரிகிறது.

குழந்தை தொட்டிலில் கண் அயர்கிறாள். அம்மா, தாலாட்ட முனகியபடி இலேசாய்த் தொட்டிலை ஆட்டுகிறாள்.

அம்மா வாய்விட்டும் நன்றாய்ப் பாடுவாள். ஆயினும் எங்கோ நினைவாய் முனகுகையில், அதைவிட நன்றாயிருக்கும்.

சிந்தனையின் கீதம்.

கூடத்தில் விளையாடிக் கொண்டிருந்த நான் கனககாரியமாய் வந்து—ஏன், என்ன செய்கிறேன் என்று எனக்கே தெரியவில்லை—வெடுக்கெனக் குழந்தையின் தோளைக் கடித்து விடுகிறேன். குழந்தை வீல் என அலறுகிறது.

"அட கொலைகாரா!"

ஒரு கையால் குழந்தையை வாரிக்கொண்டு, அம்மா என்னை முதுகில் இரண்டு அறை அறைகிறாள். நான் அழுகிறேன். அவளுக்கு அப்பவும் ஆத்திரம் தீரவில்லை, குழந்தையைத் தூக்கியபடியே, என்னை துரத்தித் துரத்தி அடிக்கிறாள். இந்த அமர்க்களம் கேட்டு அப்பா வாசலறையிலிருந்து வருகிறார்.

"என்ன ஸ்ரீமதி?"

"குழந்தையை எப்படிக் கடிச்சுட்டான் பாருங்கோ. ரத்தங்கூடப் பிடுங்கிண்டுடுத்து."

அம்மா அழுகிறாள். எனக்கும் அழுகை வருகிறது. அப்பா என்னை வெறித்துப் பார்க்கிறார். பயமாயிருக்கிறது.

"ஏண்டா இப்படிப் பண்ணலாமா?"

எனக்குப் பயமாயிருக்கிறது. ஆனால் வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தைகள் "அப்படித்தான் பண்ணனும்" என அமைகின்றன. இது எந்த ஜாலத்தைச் சேர்ந்தது?

அப்பாவுக்குக் கோப நரம்பு நடு நெற்றியில் புடைத்துக் கிளை பிரிந்து 'பட் பட்' என அடித்துக் கொள்கிறது.

"என்னோடே பேசாதே போ!"

வேகமாய் வாசலறைக்குப் போகிறார்.

அம்மா குழந்தைக்கு மருந்து கேட்கப் பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் போய்விடுகிறாள்.

கூடத்தில் நான் மாத்திரம் தனியாய் உட்கார்ந்திருக்கிறேன். வீடு நிசப்தமாகிவிடுகிறது.

குழாய் ஜலம் 'ட்ரம்'மில் 'டங், டங், டங்' என்று விழுகிறது. திடீரென உலகத்தின் ஒண்டிப் பிறவியாய், எனக்கு நானே வேற்று மனிதனாய் என்னைக் காண்கையில் எனக்குத் திகிலாயிருக்கிறது.

''டாங்! டாங்!! டாங்!!!''

எழுந்து தத்தித் தத்தி நடந்து வாசலறைக்குச் செல்கிறேன்.

அப்பா ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறார். என் அரவம் கேட்டு அவர் தலை நிமிர்ந்து மறுபடியும் குனிகிறது.

நிலை வாசற்படிமேல் சாய்ந்தபடி சுவரை நகத்தால் கீறிக் கொண்டிருக்கிறேன்.

''அப்பா!''

''அப்பாவ்!''

''அப்போவ்!''

''அப்பா, நீ என்னோடு பேசணும்பா!''

அப்பா, என் பக்கம் திரும்புகிறார். அவர் முகம் மலர்கிறது, ''சரி, வா இங்கே.'' ஒரு விரலைக் கொக்கி மாதிரி வளைத்துக் கொண்டு கூப்பிடுகிறார்.

''என்னை இங்கே வந்து தூக்கிக்கோப்பா!''

அப்பாவின் புன்னகை விரிகிறது. எனக்குத் துக்கம் தொண்டையை அடைக்கிறது,

''அப்பா. என்னைக் கண்மணியென்று சொல்லப்பா!''

''அப்பா முகத்தில் ரத்தம் புழுங்குகிறது. அப்பா நல்ல சிவப்பு. அவருக்கு மூச்சுத் திணறுகிறது. நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு எழுந்து தடதடவென வந்து என்னை வாரி அணைத்துக் கொள்கிறார். மூர்க்கமான முத்த மாரி என்மேல் பெய்கிறது.

''என் கண்மணியே! என் ராஜா! என் செல்வமே, என் தவமே!'' அவர் தொண்டை கம்மி, வார்த்தைகள் குழறுகின்றன. அவர் கழுத்தை இறுகக் கட்டிக் கொள்கிறேன்.

அப்பாடி! எவ்வளவு இதமாயிருக்கிறது!

''அப்பா, நீ எனக்குக் கொடுத்தியே, நான் உனக்கு முத்தா.கொடுக்கிறேன்!''

ஆனால் என் உதடுகளின் முத்திரை அவர் கன்னத்தில் அழுந்துவதற்குள் திடீரென என்னைத் தூக்கம் கவ்வுகிறது. அவர் தோள்மேல் என் தலை துவண்டு சாய்கிறது,

x x x

ஆனால் அம்மாவுக்கு இன்னொரு குழந்தை பிறந்ததும் என் ஏக்கங்கள் பொறாமைகள் எல்லாம் எங்கோ மறைந்து விடுகின்றன. மனம் எப்படி என்ன சமாதானத்தை அடைந்ததோ? அறியேன். என் உடம்பு சுருக்கத் தேறி, என்னைப் பள்ளிக்கூடத்தில் பையன்களெல்லாம் "டேய் உளுந்து வடை!" என்று அழைக்கிறார்கள்.

x x x

நான் விளையாடிவிட்டு வீடு திரும்புகிறேன்: அம்மா கொட்டாங்கச்சியில் எதையோ வைத்துக்கொண்டு எனக்காகக் காத்திருக்கிறாள்.

"அம்மா, பச்சி தாயேன். பண்ணி வெச்சிருக்கையே!" என்று அம்பி அவள் காலைக் கட்டிக்கொண்டு நச்சரிக்கிறான்.

"ஓ பஜ்ஜியா, ஜாலி! ஜாலி!!" நான் குதிக்கிறேன். தொட்டிலில் பாப்பா என் குதிப்பைக் கண்டு சிரிக்கிறாள்.

"டேய், பாப்பாவைத் தூக்கி மடியில் வெச்சுக்கோடா. அம்பி, நீயும் அண்ணா பக்கத்தில் உக்காரு. ஆ, அப்படித் தான்!" அம்மா கொட்டாங்கச்சியை எங்கள் எதிரில் அப்படியும் இப்படியுமாய்ச் சுற்றுகிறாள். அவள் உதடுகள் அசைகின்றன.

"என்னம்மா அதுலே வெச்சிருக்கே? என்னம்மா அது? எனக்கு ஊ!"

அம்பிக்கு எப்பவும் தின்பதில்தான் ஞாபகம்.

என் தம்பிதானே!

"உஷ்! சும்மாயிரு!"

"மறுபடியும் இருமுறை சுற்றிவிட்டு, குடு குடுவென அம்மா சமையலறைக்கு ஓடுகிறாள். அங்கிருந்து வெடிக்கும் சப்தங்களும், மிளகாய் நெடியும் கிளம்புகின்றன.

அப்பா இருமிக்கொண்டே வாசலறையிலிருந்து கத்துகிறார்.

"இந்த வீட்டில் கேட்பார் யாருமில்லையே! கொலை நடக்கிறது.!'

பாப்பா தும்முகிறாள்.

நான் "தீர்க்காயுஸ்' என்கிறேன்.

இன்னொரு தும்மல்.

"சதாயுஸ்;"

அர்த்தம் தெரியாமலே அம்மாவைக் காப்பியடிக்கிறேன்.

x x x

ஆனால் வாரத்துக்கு வாரம் திருஷ்டி கழித்தும், தும்மலுக்குத் தும்மல் வாழ்த்தியும், பாப்பா தீர்க்காயுஸாயில்லை. ஒரு நாள் அவளுக்கு மார்பில் சளி தாக்கிவிட்டது.

விலாவில் சுவாசம் கொல்லன் துருத்தி போல் அழுந்தி வாங்குகிறது. 'கொர்—கொர்' எனும் அதன் சப்தம் வெண்கலத்தாலான சம்மட்டிபோல் இரவு முழுதும் எங்களை மண்டையிலடித்துக் கொண்டிருந்தது.

பொலபொலவெனப் பொழுது புலரும் வேளையில் சப்தம் அடங்கிற்று.

அந்த அதிகாலை நேரத்தில், அவள் வெளேரென்று, உதிர்ந்த பூவைப்யோல் துவண்டு கிடந்தாள்,

x x x

என் தம்பி மத மதவென்று வளர்கிறான். அவன் பக்கத்தில் நான் ஓணான் மாதிரியிருக்கிறேன்.

நடையில், இவன் எடுத்து வைக்கும் ஒரு அடிக்கு நான் இரண்டு அடியாய் அவன் பக்கத்தில் மூச்சிரைக்க ஓடவேண்டியிலக்கிறது.

அண்ணா மேல் அவனுக்கு உயிர். ஏனோ?

'அண்ணா, அண்ணா' வெனப் பேச்சுக்கு முன்னால் பின்னால், நடுவில், நாலு அண்ணா சொல்லி விடுவான். குஞ்சைச் சிறகால் அணைக்கும் கோழி போல,என்னைத் தன் அன்பால், வளர்ச்சியால், வலிமையால், என்மேல் வெய்யில் படாமல் போர்த்திக் கொண்டிருந்தான்,

எனக்கு அவன்மேல் ஆசை, பட்சம், அவன் பலத்துக்கு மரியாதை, உள்ளூற ஒரு பயம் எல்லாம் உண்டு.

பொறாமை?

இருக்கலாம். எல்லாவற்றையும் ஒப்புக்கொள்ளும்போது ஏன் அதுவும் இருக்கக் கூடாது? இல்லாமல் எப்படித் தோன்றும்? ஏனென்று தெரியவில்லை.

நான் உத்தியோகம் ஏற்க வண்டியேறுகையில், பச்சைக் குழந்தை மாதிரி "அண்ணா! அண்ணா!!" என விக்கி விக்கி அழுதான்.

"ஏய்! நான் உயிரோடுதாண்டா யிருக்கிறேன்" என்று கேலி பண்ணினேன். ஸ்டேஷனில் நாலுபேர் எங்களைத் திரும்பிப் பார்க்கும்படி அவன் நடந்து கொண்டதில் எனக்குக் கொஞ்சம் எரிச்சல்.

நாலு வருஷங்களுக்குப் பிறகு, அப்பாவுக்கு உடம்பு சரியில்லை என்று ஒரு மாத ரஜாவில் ஊருக்குத் திரும்பும் போது, தம்பியைப் பார்க்க அடையாளமே தெரியவில்லை. இப்படியும் ஒரு வளம் உண்டா என்ன? உடல் ஆலமரத்தின் அடிப்பாகம்போல் அகன்று உரமும் கம்பீரமும் செறிந் திருந்தன.

"என்னண்ணா முழிக்கிறே? நான்தாண்ணா!"

"நீ தானா அப்பா!" என்னையறியாது என் குரலில் மரியாதை புகுந்து கொண்டது. அவன் ஊதினால், உமிக்குக் காண மாட்டேன் நான்.

வாசலெதிரில் நந்தி மாதிரி ஒரு மொந்தை உருவத்தை உறைபோட்டு மூடி வைத்திருந்தது.

"மோட்டார் சைக்கிள், என் சிநேகிதனிடமிருந்து கடன் வாங்கி வந்திருக்கேன். இன்னிக்கு மத்தியானம் ஒரு 'ட்ரிப்' அடிக்கலாம்" என்றான்.

x x x

நாங்கள் எங்கெங்கோ சுற்றிவிட்டு வீடு திரும்பலாமா என நினைக்கும் வேளைக்கு அந்தி வந்துவிட்டது.

திடீரென அம்பிக்கு வெறி வந்துவிட்டது. மேட்டிலும் பள்ளத்திலும் வண்டியை அடித்துக்கொண்டு போகும் அதிர்ச்சியில் எனக்குக் குடலே வெளியில் கொட்டிவிடும்போல் தூக்கிப் போடுகிறது.

"டேய்! டேய்!! நான் கத்தக் கத்த அவன் வேகம் அதிகரிக்கிறது. அவன் வெறி என்னுள்ளும் பாய்கையில் உயிர்ப் பட்சி என்னைவிட்டுக் குதித்துவிடும்போல் உடலின் பரபரப்பு தாங்க முடியவில்லை.

ஸைகிள், ஜலம் வறண்ட ஒரு மடுவில் அம்பு வேகத்தில் இறங்கி ஏறிற்று. அடி வயிறு சில்லெனச் சுருண்டது.

அப்பொழுதுதான் கண்டேன், மடுவின் கரையிலிருந்து, அகன்று உயர்ந்த மொத்தாகாரமானதோர் உருவம், தலையை விரித்துப் பேயாட்டம் ஆடியபடி முன் சாய்ந்து எங்களை நோக்கி விரைவதை.

"மரம்...மரம்...மர—"

வண்டி மோதிய வேகத்தில்: எறிந்த கல் போல் நான் மேலெழும்பிக் காற்றில் பறந்து போய் மரத்தின் கிளைகளினிடையில் தொத்திக் கொண்டேன். மல்லாந்த பூச்சிபோல், என் கை கால்கள் நெளிந்தன. ஒருவாறாய் விடுவித்துக் கொண்டு கீழே குதித்தேன்.

தம்பி வெட்டிய மரம்போல் கீழே சாய்ந்து கிடந்தான். மார்பு திமில்போல் உயர்ந்தது, கால் கைகள் அகல விழுந்து கிடந்தன, மூக்கிலும் வாயிலும் காதுகளிலுமிருந்து ரத்த நூல்கள் வழிந்து கொண்டிருந்தன.

"சந்துரு!"

என் காட்டுக்குரல் 'கிறீச்'சிட்டுக் கொண்டே மேலே போய் உச்சத்தில் உடைந்து ஒன்பதாயிரம் சுக்கல்களாய், முன் இருளில் என்னைச் சுற்றிலும் தெறித்தது.

அவனுக்கு வலிப்பதற்குக்கூட நேரம் இருந்திருக்காது.

x x x

**ஆ**று மாதங்களுக்கு எனக்குத் தோள்கள் ஊமையாய் வலித்துக் கொண்டிருந்தன. எந்த சிகிச்சைக்கும் பிடிபடவில்லை,

என்ன இருந்தாலும் உடன் பிறப்பில்லையா?

நாளாக ஆகப் பாம்பு படத்தைக் கீழே போடுவதுபோல் தானே மறைந்தது.

நாளாக ஆக......

மூன்று வருடங்களுக்குப் பிறகு ஒரு தை வருகிறது. விடியற்காலையில் ஒரு சின்ன ரயில்வே ஸ்டேஷனில் பெருமூச்சு விட்டுக்கொண்டு நிற்கும் ஒரு வண்டித் தொடரி லிருந்து ஒரு சிறு கூட்டம் பெட்டியும் படுக்கையுமாய் இழிகின்றது. எங்களை வரவேற்பதற்குப் பெண் வீட்டார் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

''வரவேணும் வரவேணும்! பிரயாணம் சௌகரியமா யிருந்ததா? உட்கார, படுக்க தூங்க இடம் கிடைத்ததா?''

''ஆகா, எல்லாம் ரொம்ப சௌகரியம் போங்கோ.''

உண்மையில் நிற்கக்கூட இடமில்லை!

ஆனால், இம்மாதிரி ஒட்டைக் கேள்விகள், ஒட்டைக் கேள்விகளுக்கு ஒட்டைப் பதில்கள், பொய்ப் பரிமாறல் இல்லாத கல்யாணமே உலகில் கிடையாதோ?

எங்களுக்காக இரண்டு கார்கள் காத்திருக்கின்றன.

ஊருக்குள் நுழைகையில், வீட்டு வாசற்குறடுகளில்: ஆண்களும், பெண்களும் நின்று எங்களை வேடிக்கை பார்க்கிறார்கள்.

அப்பொழுது, தெருவின் திருப்பத்தில், தாழ்ந்த வளைவில், வண்டி யிறங்குகையில், வாசலுக்கெதிரில், பிரும் மாண்டமான ஒரு தாமரைப் பூக் கோலத்தின் நடுவில், ஒரு பெண் நின்று கொண்டு கோலத்தைச் செப்பனிட்டுக் கொண்டிருக்கிறாள். சப்தம் கேட்டு முகத்தில் வழியும் கூந் தலைத் தோள்பட்டையால் தள்ளிக்கொண்டு நிமிர்கிறாள்.

அவள் நிமிரும் அதே சமயத்தில், எங்கள் கண்கள் சந்திக்கின்றன. சூரியனின் பொற்கதிர் அவள் முகத்தில் படுகையில், அவள் விழிகளில் நீலம் பளபளக்கின்றது.

என்னைப் பார்த்துப் புன்னகை புரிகிறாள்.

அடுத்த நிமிஷம் வண்டி இன்னொரு முடுக்கில் திரும்பி விடுகிறது. நாங்கள் எங்கள் விடுதி சேருகிறோம்.

"டிபன் எல்லாம் பின்னால் வந்துண்டே யிருக்கு. முன்னால் தாகசாந்தியா ஒரு 'டோஸ்' காப்பி சாப்பிடுங்கள். என்னதான் இருந்தாலும் உங்கள் வீட்டுக் காப்பி மாதிரி இருக்குமா!"

நெடுநேரம், அந்த நிமிர்ந்த முகமும், விழிகளிலிருந்து தெறித்த நீலமும், குறுநகையும், நெஞ்சப் பதிவிலிருந்து மறைய மாட்டேன் என்கின்றன.

ஆனால் அடுத்த நாள், நான் கலியாண வாசலில், பாகி யின் கையைப் பற்றியதும், என் மை தீட்டிய விழிகள், அவள் மை தீட்டிய விழிகளைச் சந்தித்ததும், அந்த வேளைக்கு மற்ற தெல்லாம் மறந்துவிட்டது.

இவள் பாகீரதி. பாகி என் மனைவி; இவளை நான் கைப் பிடித்துவிட்டேன். இனி எனக்கு இவள். இவளுக்கு நான். தன்னால் நேரவிருக்கும் சடங்குகள் எல்லாம் இந்தத் தொடர், இந்தச் சங்கல்பத்தின் வெற்று நிழல்கள். இனி எங்களுக்கு ஒருவரையொருவர் விட்டால் கதியில்லை, விதியில்லை.

இவள் பாகீரதி. பாகி என் மனைவி.

x x x

ஆடி வெள்ளிக்கிழமை மாலை.

அம்மா எங்களைக் கூப்பிடுகிறாள்.

"என்னை ரெண்டு பேரும் பிடிச்சுண்டு சுவாமியலமாரி யண்டை கொண்டுபோய் விடுங்கள்" என்கிறாள்.

உடம்பு அலண்டு போகும் என்று எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை, எங்கள் மேல் சாய்ந்து கொண்டு சுவாமி படத்தருகில் போனதும், பலத்தைக் கூட்டிக் கொண்டு, தானே சுயமாய் நின்று குத்துவிளக்கை ஏற்றுகிறாள். பாகி! இப்படிவா—"

சிமிழிலிருந்து குங்குமத்தை எடுத்து மருமகளுக்கு இட்டுக் குத்துவிளக்கை அவளிடம் கொடுக்கிறாள்.

"இந்த வீட்டு விளக்கை ஏற்றி உன் கையில் கொடுத்தாச்சு. என்னை என் படுக்கையில் கொண்டுபோய் விடுங்கள்."

நாங்கள் குழந்தைகளாய் விக்கி விக்கி அழுகிறோம். எங்கள் மாரே உடைந்துவிடும்போல் இருக்கிறது. பாகியின் கையில், குத்து விளக்கின் சுடர் அசைவற்று, மெளனமாய், சாட்சியாய் நிற்கிறது.

'உஷ், இன்னிக்கு வெள்ளிக்கிழமை. இது அழற சமயமல்ல. அவளை நானே மெதுவாய்த் தாங்கிக்கொண்டுபோய்க் கட்டிலண்டை விடுகிறேன். "அப்பாடி!" என்று பெருமூச்சுடன் அம்மா சாய்கிறாள். அப்புறம் அவள் எழுந்திருக்கவேயில்லை.

சந்துருவின் சாவே அம்மாவுள் புரையோடி விட்டது. என்னவோ வளைய வளைய வந்தாளே ஒழிய, உயிரை மார்பில் பிடித்துக் கொண்டு, மருமகளிடம் ஏற்றிய குத்துவிளக்கைக் கொடுக்கத்தான் காத்திருந்தாள் என்று இப்போது தெரிகிறது.

சந்துருவின் எமனே அம்மாவின் எமன்.

x x x

அம்மாவின் எமனே அப்பாவின் எமன்.

அப்பாவுக்கு ஏற்கெனவே நாளோட்டின வியாதி. பிறகு சந்துரு. சந்துருவுக்குப் பின் அம்மா. அவர் தூங்கிக் கொண்டிருக்கிறார் என நினைத்துக் கொண்டிருந்தோம். அயர்ந்து தூங்குகிறவரை எழுப்ப வேண்டாம் என்று கொண்டு வந்த கார்ப்பியைக்கூடத் திரும்பக் கொண்டு போயாச்சு.

ஆனால் மூச்சே சுவாசக் குறடாய் மாறிவிட்டது.

x x x

நானும் பாகியும் ஜோடிப் புறாக்களில்லை; ஆனால் எலியும் பூனையுமாயுமில்லை.

இப்போது பின்னோக்குகையில், உலகத்திலிருக்கும் எல்லாத் தம்பதிகளையும் போல்தான் இருந்தோம். ஒரு நாள் சண்டை, மறு நாள் இழையல். ஒருவரிடமிருந்து ஒருவர்

எவ்வளவோ எதிர்பார்க்கிறோம். எதிர்பார்த்ததுக்கு எல்லையே கிடையாது. ஆனால் இருப்பதுதான் கிடைக்கும். இருக்கிற வரையில்தான் கிடைக்கும்.

எதை எதிர்பார்க்கிறோம் என்று கூடத் தெரியவில்லை அதனாலேயே புரியாமலே எங்களிடையில் நேரும் தர்க்கங்களும் சச்சரவுகளும் நேர்ந்து, அவள் கண்ணீர் விட்டுக் கொண்டு சுவரோரம் படுத்துக்கொண்டிருக்க நான் இன்னொரு சுவரை முறைத்துக் கொண்டிருக்க, நிஜமாகச் சண்டை எதற்காக ஆரம்பித்தது என்றுகூடப் புரியாமல் திகைப்பாயிருக்கும். உலகத்தில் நேரும் எல்லாச் சண்டைகளுமே அவலை நினைத்துக் கொண்டு உரலை இடிக்கும் சண்டைகள்தாம்.

ஆனால் சண்டைக்குப் பின்வரும் சமாதானப் பகுதிகளின் இதனை நினைக்கையில். அவைகளுக்காகவே சண்டைகளை வருவித்துக் கொண்டோமோ, கொண்டேனோ என்றுகூட இப்பொழுது தோன்றுகிறது.

x x x

இத்தனை சண்டைகளுக்கும் சமாதானங்களுக்குமிடையில் பாகிக்கு மூன்று குறைப் பிரசவங்கள் நேர்ந்து உடல் சீரழிந்தாள். அவள் ஏற்கெனவே நோஞ்சான்தான். இனி அவள் கருத்தரித்தால், அவள் உயிருக்கே ஆபத்து என்று வைத்தியர்கள் கூறிவிட்டனர்.

x x x

சில சமயங்களில் நினைவில், முன் பின் தொடர்பில்லாது பிரும்மாண்டமான தாமரைக் கோலத்தின் நடுவில் நின்றபடி வழிந்த கூந்தலை தோள் பட்டையில் தள்ளிக் கொண்டு ஒரு முகம் நிமிர்ந்து, காலை வேளையின் பொற்கதிர் பட்டுக் கண்களில் தெறிக்கும் நீலத்துடன் என்னைப் பார்த்து நகைக்கும்.

"நான் சிந்தனையிலாழ்ந்து வியப்புறுவேன். அவள் இப்போது எங்கிருப்பாள்? அவளுக்கு இப்பொழுது குழந்தைகள் இருக்குமில்லையா? நான் அவளைப் பார்த்தபோதே ஏற்கெனவே அவள் ஒருவன் சொத்தோ என்னவோ?

இதெல்லாம் நான் இப்பொழுது எப்படிக் கண்டு பிடிக்க முடியும்?

கண்டு பிடித்துத்தான் என்ன ஆகவேண்டும்?

அவள் யாரோ? நான் யாரோ? நாங்கள் மீண்டும் சந்திப்போமோ?

x x x

திடீரென எனக்கு ஒரு நாள் தெரிந்தது. அவளும் நானும் சந்திக்கப்போவதில்லை. என்னை அறியாமலும் அறிந்தும், உள் நினைவிலும் வெளி நினைவிலுமாய், அவளை எண்ணி எண்ணி அவள் ஒரு எண்ணத்தின் பதவியை அடைந்து விட்டாள். அவள் எண்ணமாகிவிட்ட பிறகு, புலனின் உருவாக இனி எனக்குத் தென்படமாட்டாள்; பட்டாலும் என் எண்ணத்தில் அவள் வகிக்கும் லட்சிய, நித்ய உருவில் இருக்க முடியாது.

x x x

உடலில் புகுந்து புறப்படுவது உடலின் வேட்கை மாத்திரம் அல்ல, எண்ணத்தின் வேட்கை கூட, எண்ணத்தின் வேட்கைக்கு மாற்றுத் தேடவோ, அல்லது அதை மறக்கவோ அப்பவும் வழி, உடல் வழிதான்.

அதனால்தானோ என்னவோ, பாகி மீண்டும் கருத்தரித்தாள். இத்தடவை கரு தங்கியது.

திடீரென எங்களிடையில் இதுவரை இல்லாத ஒற்றுமை, அமைதி, ஒருவருக்கொருவர் ஆதரவு இழைந்தது. அதன் இன்பத்தைவிட ஆச்சரியமே ஓங்கியது! இது எந்த ஜாலத்தைச் சேர்ந்தது? தங்கி நிற்குமா? அல்லது சில சமயங்களில் கடும் கோடையில் துணுக்காய் ஒதுங்கி நாலே தூறல்களில் பிசுபிசுத்துவிடும் மேகத்தின் கதிதானா இதற்கும்?

x x x

ஒரு நாள் திடீரென எனக்குத் தும்மிற்று. மார்புள் நெருப்புப் பிழம்பு வழிந்தாற்போல ஒரு சூடு. கண்ணில் லேசான கரிப்பு. நான் அசட்டையாயிருந்துவிட்டுப் பிறகு அகஸ்மாத்

தாய் வைத்தியரிடம் காண்பித்தேன். என்னைப் பரிசோதித்ததும் அவர் முகங் கோணிற்று.

பரீக்ஷைகள் எல்லாம் நடந்தபின் எனக்குக் காசம் கண்டிருப்பதாய்த் தெரிந்தது. நோய் அவசரமாகவே சுவாசப் பையில் பரவிவிட்டதாம்; ஆஸ்பத்திரியில் தனி விடுதிக்கு அப்புறப்படுத்தப்பட்டேன்.

எனக்குச் சீக்கிரம் குணம் ஆகவில்லை.

பாகியும் நிறை கர்ப்பிணி. அவள் நிலையையும் ஜாக்கிரதையாகக் கவனிக்க வேண்டியதாகி விட்டது.

பிரசவத்துக்குப் பிறந்த வீட்டுக்குப் போகுமுன், பாகி என்னைப் பார்க்க வந்தாள். வயிற்றின் சுமையைத் தூக்கமாட்டாமல் தூக்கிக் கொண்டு வருகையில், அவளைப் பார்க்க ஒரு பக்கம் வேடிக்கை, ஒரு பக்கம் பரிதாபமாயிருந்தது.

x x x

அவள் ஊருக்குப் போனபின், இரண்டு மூன்று கடிதங்கள் அடுத்தடுத்து வந்தன. அப்புறம் நாள் கழித்து ஒன்றிரண்டு கடிதங்கள்.

தலைக்குப் பின்னால் கைகளைக் கோத்துக் கொண்டு தலையணைமேல் சாய்ந்திருக்கையில் குருட்டு யோசனையில் எண்ணங்கள் ஏதேதோ எழும்.

பிறந்து உழன்று, இதுவரை நான் வாழ்க்கையில் கண்டது என்ன? இல்லை, இந்தக் காணல், வேணலின் முடிவு தான் என்ன?

என் நோய்வாய் நான் இங்கு படுகிறேன், அவள் சுமைவாய் பாகி அங்கு படுகிறாள். நாங்கள் கண்ட மிச்சம் இது தானா?

சந்துருவின் அகாலமான திடீர்மரணம் தேவலையா? அல்லது நாளுக்கு நாள் ஒரு கணக்கில், மூச்சுக்கு மூச்சு ஒரு துளியாய், என் சுயநினைவோடு என் பிராணனை நான் விட்டுக் கொண்டிருக்கும் இந்நிலை தேவலையா? இம்மரணத்தின் நோயின் அவஸ்தை ஒரு பக்கமிருக்கட்டும். இதில் எங்கோ

ஒரு மூலையில் ஒரு விதமான அவமானம் ஒளிந்து கொண்டு ஊமையாய் உறுத்துகிறது.

நான் இப்பொழுது உயிரோடிருக்கிறேனா, அல்லது ஏற்கெனவே இறந்துவிட்டேனா? அல்லது உயிரின் பழக்கத்தால் உயிரோடிருக்கிறதாய்ப் பாவித்துக் கொண்டு, அந்த உயிர் நிழலாடலில் உடல் இன்னும் செத்துக் கொண்டேயிருக்கிறதா?

இந் நிலையில் நான் வேண்டுவது என்ன?

பாகியா?

பாகியின் வயிற்றில் என் எண்ணத்தின் வேட்கைக்கு மாற்றாய் வளரும் என் குழந்தையா?

அல்லது பிரும்மாண்டமான தாமரைக்கோலத்தின் நடுவில் நின்றபடி, வழிந்த கூந்தலைத் தோள்பட்டையால் தள்ளிக் கொண்டு நிமிர்ந்த முகத்தில் காலை வேளையின் பொற்கதிர் பட்டு, நீலம் தெறிக்கும் கண்கள் என் கண்களைச் சந்தித்ததும் ஒளி வீசிக் கொண்டு படர்ந்த புன்னகையா?

x x x

ஒரு நாள் மாலை என் அறைக் கெதிரே இருக்கும் புற்றரைக்கு, மிஸ் ஹெர்மாயின் மேரிகோல்டு, என்னைச் சக்கர நாற்காலியில் தள்ளிக் கொண்டு சென்றாள்.

அவள் கன்னத்தைத் தொடவேண்டுமென எனக்குத் திடீரென ஆசை பிறந்தது. விபரீத நோக்கமல்ல; அவள் கன்னத்தின் வழவழப்புக்காக.

திடீரென்று மிஸ் ஹெர்மாயின், "மிஸ்டர் ராம், நீங்கள் ரொம்பவும் தைரியசாலி!" என்றாள்.

"ஏன்?"

"ஏனா? மலைபோல வந்திருக்கும் வியாதியின் ஆபத்திலிருந்து மீண்டு விட்டீர்கள். நீங்கள் இங்கு வந்தபோது உங்கள் மேல் எங்களுக்கு நம்பிக்கையில்லை."

"ஓ!"

"ஆனால், இதுவரை இருந்தது பெரிதில்லை. இனிமேல் தான் இன்னும் தைரியமா யிருக்க வேண்டும்."

"அதைப் பற்றி என்ன, சமுத்திரம் எல்லாம் தாண்டி யாகி விட்டது. வாய்க்கால் தாண்டுவதற்குத் தனித் தைரியம் வேண்டுமா?" என்று சிரித்தேன்.

"ஓ, நான் குறித்தது அதுவல்ல!" அவள் விழிகள் திடீரென நிறைந்தன. "ஓ மிஸ்டர் ராம், நீங்கள் ரொம்ப ரொம்ப பாவம்!" திடீரெனத் தன் ஜேபியிலிருந்து எதையோ எடுத்து என் கையைப் பிடித்து விரித்து அதனுள்ளே வைத்து, விரல்களை அமுக்கி மூடிவிட்டுச் சரேலென்று சென்று விட்டாள்.

நான் கையைத் திறந்தேன். மஞ்சள் கயிறுடன் ஒரு மாங்கல்யம்.—பாகியின் மாங்கல்யம்.

வெகு நாழி அதையே பார்த்துக் கொண்டிருந்தேன். புற்றரையில் அணில்கள் ஒன்றையொன்று துரத்திக் கொண் டிருந்தன. சிட்டுக் குருவிகள் கல் பெஞ்சிகளின் மேல் உட்கார்ந்து வளவளத்தன.

x x x

ஒரு முறையில் என் உள் பிரக்ஞையில் இது இப்படித் தான் நேரும் என்று முன் கூட்டியே அறிந்திருந்தேனோ என்னவோ?

ஒன்றரை வருடங்களுக்குப் பின் நான் ஆஸ்பத்திரியிலி ருந்து விடுதலை யடைந்தேன். என் உடைமைகள் 'டாக்ஸி' யில் வைக்கப்பட்டன, என் கையை யாரோ குலுக்கினார்கள்.

"குட்பை மிஸ்டர் ராம்! உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்,"

நான் வண்டியுள் உட்கார்ந்ததும், டிரைவர் "சார் எங்கே போகணும்?" என்று கேட்டான்.

திடீரென என் பார்வையைக் கண்ணீர் மறைத்தது. எங்கே போவது? உலகத்தின் ஒண்டிப் பிறவியாகிவிட்டேன். எனக்கு எங்கே என்ன இருக்கிறது?

"எங்கேயானும் போ..."

அவன் புத்திசாலி என்றே நினைக்கிறேன். பதில் பேச வில்லை. என் முகத்தைப் பார்க்காதது போல் அந்தண்டை திரும்பிக் கொண்டான். வண்டி நகர்ந்தது.

x x x

**வ**ருகிற வருடமும் வழக்கம் போல், இதே தினத்தன்று காலை மிஸ் ஹெர்மாயின் யானைத் தலையளவு பூச் செண்டு டன் உள்ளே நுழைகிறாள்.

"ஹல்லோ மிஸ்டர் ராம்! குட்மார்னிங்! நீங்கள் சிரஞ் சீவியாயிருக்க வேண்டும். இந் நன்னாள் திரும்பத் திரும்ப வர வேண்டும்!" அவள் வார்த்தைகள் தடைபடுகின்றன. நான் எழுந்திருக்கவில்லை. என்னுடைய கண்கள் மூடியிருக் கின்றன.

என்னிடம் வந்து தாதுவைப் பிடித்து இதயத்தில் செவி சாய்த்துக் கேட்கிறாள். என் கை துவண்டு விழுகிறது.

என் கைகளை யெடுத்து மார்மேல் சேர்த்து வைத்துச் சிலுவையின் குறியில் தன் தோள்களையும் நெற்றியையும் தொட்டுக் கொள்கிறாள். அவள் உதடுகள் அசைகின்றன. போர்வையை என் தலைமேல் இழுத்து விட்டுப் பூச் செண்டை என் பக்கத்தில் வைத்துவிட்டு, அடிமேல் அடி வைத்து வெளியே செல்கிறாள்.

நான் உள் பிரக்ஞையின் ஒரே இதழில், உயிர் வெள்ளத் தில் மிதந்து செல்கிறேன்.

# 8. இதழ்கள்

பக்கத்தில் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த கணவனை உவை அவசரமாய்த் தட்டி எழுப்பினாள். குரு கண்ணைக் கசக்கிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தான்.

“என்னது?”

“நான் உண்டாயிருக்கிறேன்.”

சட்டெனத் தூக்கம் கலைந்த குரு அவளை உற்று நோக்கினான். கேளாத கேள்வியில் அவன் புருவங்கள் நெறிந்து பின்வாங்கின. அவள் மீண்டும் “நான் உண்டாயிருக்கிறேன்” என்றாள்.

அவன் கண்களில் புன்னகையின் அரும்பொளி நிழல் தட்டிற்று.

“ஓ! வெரி குட் என்றானாம் வெள்ளைக்காரன்; அதுவே சரி என்றானாம் தமிழன்.”

“இல்லை, நான் உண்டாயிருக்கிறேன்.”

அவளை ஒரு கணம் சந்தித்துவிட்டு ஏதோ சொல்ல வாயெடுத்தவன் சட்டென மூடிக்கொண்டான்.

“சரி, காலையில் பேசிக்கொள்ளலாம்; இப்போது தூங்கலாம். நாளைக்கு ஆபீஸ் உண்டு; தெரியுமோ இல்லையோ?”

அவன் திரும்பிப் படுத்துவிட்டான். ஆனால் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. முழங்காலைக் கட்டிக்கொண்டு வெகு நேரம் உட்கார்ந்திருந்தாள்.

“நான் உண்டாயிருக்கிறேன்.”

அவள் சொன்னது அவளுக்கே வியப்பாக இருந்தது. அதுவும் அடித்து அடித்து மூன்று தடவை பொறித்த குஞ்சுகள் பறந்துவிட்டபின், கூட்டின் அடைசலிலிருந்து முழுவளர்ச்சியில் சிறகுகளை விரித்துக்கொண்டு எழும் ஒரு பட்சிபோல் அவ்வளவு தீர்மானமாய் அதற்கே சொந்தமாய் அந்த வாக்கியம் அவளை மீறி அவளிடமிருந்து பிரிந்து......

குரு பல்லை விளக்கிக் கொண்டு, முகத்து ஈரத்தை வேட்டிக் கொடுக்கில் துடைத்தபடி சமையலறையுள் நுழைந்தான். கலந்த காபியை எதிரே வைத்துக் கொண்டு உஷை சுவரைப் பார்த்துக் கொண்டிருந்தாள். காபிமேல் வெள்ளை படர்ந்து கொண்டிருந்தது. குரு குனிந்து அவள் முகத்தெதிரே விரலைச் சுண்டினான். அவள் முகம் அவன் பக்கம் திரும்பியது. ஆனால் பார்வையில் அடையாளம் இல்லை.

''அந்தச் சங்கை இதற்கு முன்னால் எங்கேயாவது பார்த்திருக்கிறேனோ?''

எதிரே உட்கார்ந்தான்.

''எது சங்கு?''

''வெள்ளை வெளேரென வழுவழுப்பாய், வயிறு பெருத்து உடனே அவசரமாய் நுனி குறுகி......''

அவள் விவரிக்கும் உருவில், அவள் விரல்கள் அவளையும் அறியாமல் குவிந்து துடித்தன. நுனி சிறுத்து அர்த்தம் நிறைந்த நீண்ட விரல்கள்.

அவன் காத்திருந்தான்.

''நேற்றிரவு நான் ஒரு கனாக் கண்டேன். சமுத்திரக் கரைமேல் ஜல ஓரமாய் நடந்து போகிறேன்! போய்க் கொண்டே இருக்கிறேன். அலைகள் கரைமேல் அறைந்து மீள்கையில் மையிருளில் நுரைக் கொப்புளங்கள் வாரி இறைத்த நட்சத்திரங்கள் போல், வெண்ணிலத்தில் கண் சிமிட்டுகின்றன. அப்போது கண்ணைப் பறிக்கும் வெண் மையில் பெரிதாய்க் காலடியில் ஏதோ பளபளத்தது. என்ன என்று குனிந்து கையில் எடுத்தும், அது ஒரு வெண்சங்கெனக் கண்டேன்.'' கனவு மயக்கத்தில் அவள் கண்கள் மங்கின; பேச்சு கொழ கொழத்தது.

அரை யோசனையும் குறை வாக்கியமுமாய் அவள் தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தாள். அவன் மனம் பரிதவித்தது. குழந்தை மழலையில் குழறிக் கொண்டு, தன் சப்தங்களுடன் தானே விளையாடிக் கொள்வதுபோல் அவள் பார்க்க நிராதரவாய், பரிதாபமாய் இருந்தாள்.

''வழவழெனப் பெரிசாய், வயிறு பெருத்து, உடனே வேக மாய் நுனி குறுகி, குழந்தையின் உதட்டோரத்தில் வைத்து அழுத்திப் புகட்டலாம்.''

அவள் நெற்றிப் பொட்டில் நரம்புகள் பச்சையாய்ப் புடைத்தெழுந்தன. அவள் பரவசமானாள். திடீரென்று சமுத்திர கோஷம் பொங்கி எழுந்து வேகமாய் அவள்மேல் இறங்கிற்று. இறங்கி உடனே எட்ட எட்ட வடிந்து கொண்டே போய் அடியோடு அடங்கியதும் இதமான மௌன வெள்ளம் உள்ளேயிருந்து எழுந்துஅவளை நிறைத்துக் கரை புரண்டது. சலனமற்ற அந்த ஜலத் தகட்டின்மேல் ஒரு தாமரை இலை அவளை நோக்கி மிதந்து வந்தது. அதன் ஓளிப்பச்சை மேல் நரம்புக் கோலத்தின் நடுவில் வெள்ளை வெளேரென்று ஒரு பொருள் கண்ணைப் பறித்தது. வயிறு பெருத்து, உடனே வேகமாய் நுனி குறுகிக் குழந்தையின் உதட்டோரத்தில் வைத்து அழுத்திப் புகட்டும் அளவிற்கு... கிர்-ர்-ர்-ர்-ர்—

அவன் பிடித்துக் கொண்டிராவிடில் அவள் குப்புற விழுந் திருப்பாள்.

கதவு திறக்கும் சப்தம் கேட்டு, குரு சட்டெனத் திரும்பினான்.

பக்கத்தகத்துப் பாட்டி.

''என்ன பாட்டி? என்ன பாட்டி?''

''ஒன்றும் இல்லையடா குரு!'' பாட்டி அவசரப்படவே மாட்டாள். அவள் அவசரப்பட முடியாது. சரீரம் தளர்ந்து கனத்து விட்டது. கனத்தைத் தூக்க முடியாமல் தூக்குகை யில் நடை அருவருப்பாய்த் தள்ளாடியது. பேச்சு, யோசனை எல்லாமே அவளுக்கு மெதுத்தான். யோசனை செய்து கொண்டே பேசுவாள், ஒவ்வொரு வார்த்தையாய்ப் பொறுக்கித் தொடுத்துக் கொண்டு.

''என்ன பாட்டி, சொல்லுங்களேன்! ஒன்றும்இல்லாமலா, ஒரு மணி நேரம் உள்ளே இருந்து விட்டு வந்தீர்கள்?''

''எல்லாம் நல்லதுதாண்டா!''

''அப்படி என்றால்?''

பாட்டி சிரித்தாள், பொக்கையோரத்தில் எச்சில் வழிந்தது.

"அத்தி பூத்ததுடா! உன் அம்மா இல்லையே என்றுதான் நினைத்துக் கொள்கிறேன்."

பாட்டியை வழி அனுப்பிவிட்டு, குரு அறையுள் நுழைந்தான். உஷைக்கு இன்னமும் மயக்கம் தெளியவில்லை. படுக்கையில் துவண்டு கிடந்தாள். குரு அவளைப் பார்த்துக் கொண்டே நின்றான். தலையணையின் வெள்ளையுறை மேல் பதிந்த வெளுத்த முகத்தின் இரு பக்கங்களிலும் அடை நரையில் கூந்தல் வரம்பு, தளர்ந்து வழிந்தது.

இப்பொழுதா? இத்தனை நாள் கழித்தா?

எத்தனையோ சாந்தியும் யாத்திரையும் பண்ணியும் பயனில்லாமல், அம்மாவுக்கும் நம்பிக்கை அலுத்துப் போய் நெஞ்சீரலுடனேயே அவளும் செத்துப் போன பின்பா?

இத்தனை நாள் கழித்து நேருவதால் எப்படி ஆகுமோ? வெகு நாள் மலடியாக இருந்து விட்டு ஒரு நாள் பூக்கும் மரம். ஒருநாள் பூத்தபின் இத்தனை நாளதையும் சேர்த்து ஒரேயடியாய்ப் பூக் கொட்டினாலும் கொட்டும். அல்லது—

அந்த ஒரே பூத்தான் பூக்கும் அத்தோடு சரி.

அதுவேதான் காய்க்குமோ, கருகிவிடுமோ? அதற்குப் பின் மரமேதான் இருக்குமோ? இருக்காதோ?

திடீரென அவனைப் பீதி பிடித்துக் கொண்டது. பின்னால் யாரோ நின்று அவன் தோள்மேல் மூச்சு விட்டாற் போல் இருந்தது. அவன் மேல் சிலந்திக் கூடுகள் பின்னிச் சுற்றிக் கொண்டன.

"உஷா, உஷா!"— அவள் தோளைப் பிடித்துக் குலுக்கினான். ஆனால் அவளுக்கு நினைப்பு வரவில்லை. கண்கள் மூடியபடியே இருந்தன, உதடுகளின் மேல் ஒரு புன்னகை படர்ந்து உறைந்தது. வெள்ளிச் செம்பில் பதித்த வரலட்சுமி முகப்புப்போல் முகம் திடீரென அழகிட்டது. அதன் உள்ளொளி அவன்மேல் படர்ந்தது. பின்னிடைந்து அவளைப் பார்த்து அதிசயித்து நின்றான்.

x x x

குரு பத்திரிகையைக் கையில் வைத்துக் கொண்டிருந்தான். ஆனால் அவன் மனம் படிப்பில் இல்லை.

ஜன்னல் சட்டத்தின் மேல் ஒரு குருவி பயம் இல்லாமல் வந்து உட்கார்ந்து, 'ட்வீக்', 'ட்வீக்' என்றது. இன்று மெய்யாகவே வேளை ரம்மியமாக இருந்தது. இன்று காரியா லயத்துக்குப் போகும் நாள் அல்ல. இப்படியே நாற்காலியில் சாய்ந்தபடி வெளியே காற்றில் அசைந்தாடும் மாமரத்தில் எத்தனை காய்கள் எந்த எந்தப் பக்குவத்தில் பழுத்துக்கொண் டிருக்கின்றன. இந்த மரத்தில் மொத்தம் எத்தனை இலைகள் என்று கண்ணால் ஒவ்வொன்றாக எண்ணும் நாள்.

வானம், காயக் கட்டிய பிரம்மாண்டமான நீலப் புடைவைபோல் காற்றில் படபடத்தது. தூய பனி வெள்ளை மேகத் திட்டியில், ஒரு கிளிக் கூட்டம் பறந்து செல்கிறது. பொன் வெயிலில் அவற்றின் பச்சை, கறை கறையாய்க் கண்ணைப் பறிக்கிறது.

உஷை கட்டிலில் உட்கார்ந்திருக்கிறாள். நிலைக் கண்ணாடியில் தெரிகிறாள். எங்கோ பார்த்துக் கொண்டு. அது என்ன யோசனையோ? கண்ணாடியில் அவள் கண்கள் அவன் பார்வையைச் சந்திக்கின்றன. எப்படியும், உஷைக்குக் கண்கள் அழகுதான். மைச்சிமிழைத் திறந்து வைத்தாற் போல், சில சமயங்களில், கண்களின் வெள்ளையை அடைத்த பெரிய கருவிழிகள். விழிகளின் எடுப்பிற்கு மூக்கு இன்னும் கொஞ்சம் கூட இருந்திருக்கலாம்.

'அட இந்தக் கூந்தல் இப்படியா நரைத்துப் போக வேண் டும்? அதை நினைத்துக் கொண்டால்தான் விசனமாக இருக் கிறது. இருவரும் சேர்ந்து வெளியில் போகச் சில சமயங்களில் வெட்கமாய்க் கூட இருக்கிறது. அவள் பொருட்டேனும் எனக்கு மயிர் நரைக்கக் கூடாதா? அல்லது மண்டையில் சிறு வழுக்கை விழக்கூடாதா? இருவருக்கும் பாந்தம் என்பது பின் எப்படி ஏற்படுவது?''

''உஷா, உஷா, காபியை இப்படித் தொட்டி தொட்டி யாய்க் குடிக்காதேயேன். அதனால்தான் மயிர் இப்படி நரைத்துப் போகிறது.''

"சரியாய்ப் போச்சு! இங்கு வந்து எவ்வளவோ மட்டுக் கட்டிப் போச்சு. உங்களுக்கு வேண்டா விட்டால் உங்கள் வீதத்தையும் அம்மாவிடமிருந்து வாங்கி என்னிடம் கொடுத்து விடுங்கள். நீங்கள் குடித்தால் என்ன நான் குடித்தால் என்ன?" என்று சொல்லிக் கொண்டே இன்னொரு விழுங்கு குடிப்பாள். குருவி மாதிரி தலையை ஒரு பக்கமாய்ச் சாய்த்துக் கொண்டு குறும்பாய்ப் பார்த்து அவனுக்கும் சிரிப்பை மூட்டி விடுவாள்.

இதோ இப்போது கண்ணாடியில் உஷையின் முகத்தில் சிரிப்புத் தோன்றுகிறது. பழைய, வாய் திறந்த, பற்கள் பள பளக்குங் கிண்கிணிப் பல் அல்ல. கிணற்றுச் சுவரின் உட் புறத்தில் நலுங்கும் நிழல்போல், விசனம் தோய்ந்து, மனமே இல்லாது உதட்டின் ஓர் ஓரத்தில் ஆரம்பித்துப் பட்டாசுத் திரிபோல் சப்தமற்று தன்னைத்தான் துரத்திக் கொண்டு, மறு ஓரத்தில் முடித்து திரும்பி மிரண்ட புன்னகை.

"என்ன சிரிக்கிறாய்?"

அவள் புன்னகை இன்னும் வெளிச்சம் அடைந்தது.

"இப்போது நான் கண்ணாடியில் இரண்டு உருவங்களைப் பார்த்தேன்." அவனும் கண்ணாடியில் இன்னொரு தரம் பார்த்துக் கொண்டான்.

"இல்லை, நான் பார்த்த உருவங்களை நீங்கள் பார்த்தீர் களோ இலலையோ?"

அவன் சுற்றும் முற்றும் பார்த்து விட்டு ஒன்றும் காணாமல் சற்றுக் கலவரம் அடைந்தான். எழுந்து சென்று கட்டிலில் அவளருகே அமர்ந்தான்.

"என்ன பார்ந்தாய்?"

"சர்வாபரண பூஷிதையாய் ஒவ்வோர் அசைவிலும் புதுப்புடவை சல சலக்க, கூப்பிய கைகளுடன் ஓர் உருவத்தை நான் பார்க்கிறேன். தன் கழுத்து மாலையை உங்களுக்குப் போட்டுவிட்டு உங்களை நமஸ்கரிக்கிறாள்."

அவனுக்குப் புரிந்தது. புல்லரிப்புத் தாங்காது உடல் ஒரு தினுசாய்ச் சிலிர்த்து ஒடுக்கிக் கொண்டது!

"ட்வீக், ட்வீக், ட்வீக்!"

குருவி ஜன்னல் சட்டத்தின்மேல் ஜோர் நடை போட்டது. ஜனனல்மேல் இலையும் கொடியும் காடாய்ப் படர்ந்து கனத்துத் தொங்கின. அதனாலேயே அந்த அறை யில் எப்போதுமே மந்தாரம் இட்டிருந்தது. ஆரம்பத்தில் ஜன்னலைச் சுற்றி அழகுக்குத் தொத்தவிட்ட கொடி இப்போது கட்டுக்கே அடங்கவில்லை. அதை வெட்டவும் மனம் இல்லை. சில சமயங்களில் அடியிலிருந்து எழும்பி வீசுகையில், கொடிகளிலிருந்து மலர்களைப் பறித்துக் குபீர் குபீர் என்று முகத்தில் வாரி இறைக்கும். அப்படியே இப்பொழுதும் கீழிருந்து இளங்காற்றுக் கிளம்பியதும் அவர் களின் மேல் இதழ்கள் சொரிந்தன. அறையின் அரையிருட்டில் இருவரும் கட்டிலின் மேல் சுவாரசியமாய்க் கதை கேட்கும் குழந்தைகள் போல் ஒட்டிக் கொண்டு, கண்ணாடியுள் இத்தனை வருஷங்களின் அடிப்புதைவிலிருந்து அதன் பின்னரங்கின் முழுமையுடன் எழும்பிக் கொண்டிருந்த ஒரு பிம்பத்தைக் கண்டு கொண்டிருந்தனர்.

அலங்கரித்த மஞ்சத்தின்மேல் தொங்கிய மல்லிகைச் சரங்கள் அவன் முகத்தின்மேல் மோதின. வெகு தூரத்தி லிருந்து கேட்டபடி மெத்து மெத்தென அவள் குரல் மல்லிகை யின் மணத்துடன் கலந்தது, தலை லேசாய்ச் சுற்றியது.

"இதுவரை கஷ்டம் என்பது இன்னதென்று அறியாமலே நான் வளர்ந்து விட்டேன். இப்பொழுது உங்களிடம் என்னை ஒப்படைத்துக் கொண்டு விட்டேன். இனி என்னுடைய எல்லாமே நீங்கள்தான்."

'இது என்ன, எந்த வெள்ளித்திரை பாஷை? "அவ னுக்குச் சிரிப்பு வந்தது. கொஞ்சம் கோபம் கூட. "நான் என்ன ராட்சசனா? கடிக்காமல் கூட விழுங்கி விடப் போகிறேனா?"

ஆனால் தன் உருக்கம் தனக்கே தாளாமல், நிறை விழியும் குவிகரமுமாய்த் தன் கன்னித் தூய்மையில் காத்துக் கொண்டு அவள் நின்ற நிலையில் அவளைக் காண்கையில் நெஞ்சடைப்புத்தான் வெற்றி கொண்டது. கைகளைப் பற்றி அருகே இழுத்துக் கொண்டான்.

"சே. எல்லாரையும்போல் என்னையும் நினைத்துக் கொண்டாயா, உஷை? இனி என் கஷ்டங்கள் எல்லாம் என் னுடையவை. என் சந்தோஷங்களெல்லாம் உன்னுடையவை"

அந்தக் கட்டம் நினைவுக்கு வந்ததும் குருவுக்கு நெஞ்சில் சிரிப்பு முட்டிற்று, சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். 'நான் பேசியது எந்த பாஷை? இப்பொழுது நினைவில் கூட்டு கையில் அது பொய்ம்மையாய் ஒலித்தாலும், அப்பொழுது அப்படி அல்ல. நெஞ்சு நிறைவை உருவாக்க முயன்றால் அப்படித்தான் நேருமோ?"

"இருங்கள், நமஸ்காரம் பண்ணுகிறேன்."

அவன் பாதங்களின் மேல் அவள் நெற்றி பதிகையில், அழுந்த வாரிய கூந்தலின் கருமை விரியன்போல் தரையில் சோப்பிப் புரண்டது.

"எவ்வளவு அழகான பெயர்! உஷை, உன் பேரை நாக்கில் உருட்டுகையில், மனத்தில் என்ன என்ன தோற்றங் கள் எழுகின்றன தெரியுமா? அதுவும் எல்லாம் ஒரே சமயத்தில்!"

"என்ன தோன்றுகிறது? சொல்லுங்களேன்!"-உஷை சட்டென அவன் பக்கமாய்த் திரும்பிப் புரண்டாள். ஒரு கையால் கூந்தலில் செருகியிருந்த புஷ்பச் செண்டிலிருந்து ஒரு சரத்தைப் பிய்த்து அவன் மேல் எறிந்தாள். இதழ்கள் கண் இமைகளின் மேல் உதிர்ந்து பனித்தன. அவன் விலாவில் அவளுடைய மோதிரம் கீறிற்று.

"பட்சிகளின் கோஷ்டிகானம். சேவலின் அறைகூவல். பசுக்களின் கழுத்து மணிகள். கன்றுக் குட்டிகளின் 'அம்மே!' வயல்களில் பச்சைக் கதிர்கள் பேசும் ரகசியங்கள். காய்களின மேல் படரும் செந்திட்டு. ஏற்றச்சாலிலிருந்துசரியும் ஜலத்தின் கொந்தளிப்பு, அதுவே பூஞ்செடிகளின் அடியில் பாய்கையில், மாறும் கிளுகிளுப்பு. அப்பொழுதுதான் பூத்த மலர்களின் புதுமணம், உஷாக்காலப் பூஜையின் ஆராய்ச்சி மணி, கோபுர ஸ்தூபியின் தகதகப்பு. வாசற் குறடுகளின் மேல் பிரம்மாண்ட மான கோலங்கள்."

அவன் கழுத்தைச் சுற்றி அவள் கைகள் இறுகின. நெற்றிமேல் நெற்றி அழுத்திற்று.

''—ப்பா! எவ்வளவு அழகாகச் சொல்கிறீர்கள்? நீங்கள் சொல்வதெல்லாம் எனக்கு எவ்வளவு பெருமையாக இருக்கிறது, தெரியுமா? ஆனால் நீங்கள் சொல்வது அத்தனையும் சரி. என் பெற்றோருக்கு நான் பிறந்த பின்புதான் விடிந்ததாம். நான் பிறந்த மூன்றாம் நாள் அப்பாவுக்குத்திடீரென்று உத்தியோகம் உயர்ந்ததாம். எதிர்பாராத இடத்திலிருந்து சொத்துக் கிடைத்—''

வெகு வேகமாய் ஒரு பெரிய கருவண்டு வெளியிலிருந்து பறந்து வந்து கண்ணாடி மேல் மோதி, சட்டெனக் காலடியில் விழுந்து கவிழ்ந்தது. புரண்டு கவிழ முடியாமல் அதன் கால்கள் நெளிந்தன. குரு அதன்மேல் துண்டைப் போட்டு எடுத்து ஜன்னலண்டை போய்த் துண்டை உதறினான். வண்டு விர்ரென்று பறந்து சென்றது. அதன் கதியைக் கண் மறையும் வரை கவனித்துவிட்டுக் குரு திரும்பினான், உஷை கையில் கன்னத்தை ஊன்றிச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

குரு பெருமூச்செறிந்தான். அவையெல்லாம் அந்த நாட்கள். உலகம் எங்கே விடிவேளையிலேயே நிற்கிறது! வெயில்தான் ஏறிக் கொண்டே இருக்கிறதே!

உஷை!

இரவின் இருளைக் கிழித்துக் கொண்டு புறப்படும் உதயத்தின் தேவதை, என்ன தைரியமான பெயர்!

ஆனால் இந்த உஷையின் பெயருக்கும் அவளுடைய தன்மைக்கும் துருவ தூரம். உஷையின் எதிரில் ஓர் எலி ஓடி விடக்கூடாது. ஆமாம்! கரப்புப் பறக்க கூடாது! அவள் துள்ளித் துடித்து அவன்மேல் விழுந்து விடுவாள். அம்மாதிரி அவள் பயங்களை அவன் இன்ப நேரங்களாய் வரவேற்றான். எதற்கெடுத்தாலும் சந்தேகம். ''இன்றைக்குக் காபி அடுப்புப் பற்ற வைக்கக் கரிப்பெட்டியில் கைவிட்டேன். என்னவோ 'சுருக்'கென்றது. அப்போது முதற்கொண்டு

தலையைச் சுற்றுகிறாப்போல் இருக்கிறது'' என்று அவள் ஆரம்பிப்பாள்.

''கரிப் பெட்டியில் ஓர் ஆணி நீட்டிக் கொண்டிருக்கிறது. எனக்குத் தெரியும். அதைப் பிடுங்கி எடுக்க வேண்டுகிமன்று சுத்தியை நேற்றையிலிருந்து தேடிக்கொண்டிருக்கிறேன்'' என்று அம்மா சொன்னால் கேட்க மாட்டாள். உடனே அத்தனை கரியையும் கீழே கொட்டி, பெட்டியைக் கவிழ்த்துத் தட்டிக்கொட்டியும் சமாதானம் அடையமாட்டாள்.

''என்னைக் கடித்தது இன்னமும் அங்கேயே உட்கார்ந்து கொண்டிருக்குமா நாம் அதை அடிக்கவில்லையே என்று காத்துக்கொண்டு!''

அம்மா அப்படி ஒன்றும் சாந்தத்திற்குப் பேரெடுத்தவள் அல்ல. எரிச்சல் வந்துவிடும். உஷையும் தொண தொண வென்று சொன்னதையே சொல்லிக்கொண்டு பொறுமையை வெகுவாய்ச் சோதிப்பாள்.

''இதுவரைக்கும் உயிரோடு இருக்கிறாயோ இல்லையோ! விபரீதமாக இருந்தால் இவ்வளவு தூரம் உன்னைப் பேசவே விட்டிருக்காது. உனக்கு இனிமேல் ஏதாவது நேர்ந்தால், அது என் பொறுப்பு. விஷக்கடியைப் பற்றி எனக்குக் கொஞ்சம் அநுபவம் உண்டு. என்னை இரண்டு தடவை பாம்பு கடித்து நான் மீண்டிருக்கிறேன்.''

அப்புறந்தான் உஷை சற்று அடங்குவாள்.

தெருவில் பிணம் போனால் ஜன்னலை இறுக சாத்தி விட்டு வெடவெடென உடல் உதற, சுவரோரத்தில் ஒடுங்கிக் கிடப்பாள். ''என் வீட்டில் எனக்கு நினைவு தெரிந்து சாவு நேர்ந்ததில்லை. எல்லோரும் நல்லபடியாக அப்படியே இருந்து விட வேண்டும்.'' அம்மா முகத்தில் சிரிப்பு தோன்றும். 'யார் வேண்டாமென்றார்கள்? ஆனால் எல்லோரும் ஒரு நாள் போய்த்தானே ஆகவேண்டும்?'' பிடிக்காத சமாசாரத்தைப் புதிதாய்க் கேட்டாற்போல், உஷை விழிப்பாள். மைச் சிமிழைத் திறந்து வைத்தாற்போன்ற கண்களின் வெள்ளையை அடைத்த பெரிய கருவிழிகள்.

அம்மா இரக்கம் இல்லாமல் மேலும் "பின் என்ன, நாம் எல்லாம் தேவாம்சமா? சிரஞ்சீவி வரம் வாங்கிக்கொண்டு வந் திருக்கிறோமா? நீயுந்தான் ஒரு நாள் என் வேளை வரும் போது—" என்பாள்.

"அம்மா அம்மா, அப்படிச் சொல்லாதேயுங்கள் எனக்குப் பயமாக இருக்கிறது." உஷை விக்கி விக்கி அழுவாள். அம்மா வின் முகத்தில் ஆயிரம் அர்த்தங்களுடன் புன் சிரிப்பு தோன் றும். குருவின் உடலில் ஆயிரம் தேள்கள் பிடுங்கும்.

ஒரு சமயம் உஷைக்கு உடம்புக்கு வந்துவிட்டது. ஒன்றும் விபரீதம் இல்லை. வாயைக் கட்டாத கோளாறினால் அபத் தியம் நேர்ந்து, மார்புச் சளி கட்டிக்கொண்டு, இருமலில் கொண்டுவிட்டது. பாறையாய் உராய்ந்துகொண்டதால், கவம் கழலாமல் லொக்கு லொக்கென ஓயாமல் இருமல் அவ் வளவுதான். உஷை ஒரு கையை உதறிக்கொண்டு, "நான் இனி மேல் பிழைக்கமாட்டேன். என்னை என் பிறந்த வீட்டில் கொண்டு போய் விடுங்கள். இந்த வீட்டு வைத்தியம் எனக்குப் பிடிக்கவில்லை" என விசித்தாள்.

அந்த நிமிஷத்தை இப்பொழுது நினைத்தால் கூடக் குரு வுக்குக் கண்ணெதிரில் மின்னல்கள் கிளை பிரிந்து பாய்ந்தன. அம்மா அப்போது மருமகளின் கையைப் பிடித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் பார்வையில் சிந்திய கேலி தாங்க முடியாமல் குரு தலை குனிந்தான்.

அம்மா ஊருக்கே நாடி பார்ப்பாள். வைத்தியனே அம்மா விடம் வந்து யோசனை கேட்டுக்கொள்வான்.

மூண்டெழுந்த ஆவேசத்தில் குருவுக்குக் கண்ணை இருட் டிற்று. நாற்காலியைத் தள்ளிக்கொண்டு எழுந்தது தான் தெரியும். உஷையின் கன்னத்தில் அவன் கை பட்டபின் தான் பட்டது தெரிந்தது. அந்த அதிர்ச்சியில் அவன் திகைத்துங் போனான்,

"ஏண்டா அவளை அடிக்கிறாய்?" அம்மாவின் குரல் சன்னமாய் இழைந்தது, "அவள் சொல்வதும் சரிதான்! பிறந்தகத்துக்குப் போய் விட்டுத்தான் வரட்டுமே! நமக்கு ஏன் பொல்லாப்பு?"

குரு வெருண்டு அம்மா பக்கம் திரும்பினான். "தயவு செய்து இந்தச் சமயத்தில் சும்மா இருக்கிறாயா, அம்மா?"

"அது சரி, நான் இனிமேல் சும்மா இருக்க வேண்டியது தான். ஆனால் என் எதிரில் நீங்கள் அடித்து விளையாடிக் கொள்வது அவ்வளவு அழகாயில்லை என்று மாத்திரம் சொல்லி விட்டு வாயை மூடிக்கொள்கிறேன்."

குரு தன் மனைவி பக்கம் திரும்பினான். "உன்னை உன் வீட்டுக்கு இப்போது அனுப்ப மாட்டேன். அம்மா கை பட்டுக் குணமாகாத உடம்பிலிருந்து அந்த உயிர் போனாலும் போகட்டும்!"

உஷைக்கு உடம்பு குணமாகிப் பத்து நாள்வரை இருவரும் பேசவில்லை.

உலகம் எங்கே விடிவு நேரத்திலேயே நின்று விடுகிறது? வெயில்தான் ஏறிக்கொண்டே இருக்கிறதே!

இரவோடு பகல் கலக்கும் விடியிருளில் வர்ண ஜாலங்கள் கலந்திருக்கின்றன. ஆனால் வெயில் ஏற ஏறச் சாயம் வெளுத் ததும் வேஷம் கலைகிறது. ஒருவரை ஒருவர் குற்றம் சொல்லிக் கொள்வதில் அர்த்தமே எங்கே? ஒருவர்போல் ஒருவர் இருக்கிறோமா? எல்லோருமே வேஷதாரிகள் தாம், ஒருவருக்கு ஒருவர், விடி நேரத்தின் வேஷத்தில் மயங்கி, வெயிலில் வேஷம் கலைந்ததால் ஒருவரை ஒருவர் உதறிவிட முடிகிறதா?

குரு பெருமூச்செறிந்தான்.

x x x x

அம்மா ஸ்நானம் பண்ணிவிட்டு எதிரே பஞ்சபாத்தி ரத்தில் ஜலத்தை வைத்துக்கொண்டு, ஜபமாலையை நெருடிக் கொண்டிருக்கிறாள். உஷை அடுப்புக் காரியத்தில் இருக்கி றாள். சமையலறையிருளில், அடுப்பில் தீ நாக்குகள் செந் தாழையின் கூரிய இதழ்கள் போல் நிமிர்ந்து நெளிகின்றன.

கஷ்டங்களை அதிகமாகப் பட்டு விட்டதால் தானோ ஏனோ, அம்மா சில சமயங்களில் ஒன்றிலும் ஒட்டாதது

போல் 'ஏனோ தானோ' என்று இருப்பாள். அநாவசியமாய் மனிதர்கள் அலட்சியம் செய்வது போல் கூடத் தோன்றும்.

"எனக்கு எல்லாரையும் பற்றி எல்லாம் தெரியும். யார் என்னைப் பற்றி என்ன சொல்கிறார்கள், நினைத்துக் கொண் டிருக்கிறார்கள் என்று தெரிந்து வைத்துக்கொண்டிருக்கிறேன்; முடிந்து வைத்துக் கொண்டிருக்கிறேன். எல்லாம் தின்று விழுங்கி நான் கொட்டை உமிழ்ந்தாயிற்று. எனக்கு என்னடா இனிமேல்? எந்தப் பட்டு பனாசுக் கட்டிக் கொள்ள வேண்டும்? எந்த நகை நட்டுப் பூட்டிக் கொள்ள வேண்டும்? இல்லை, எந்த பிறந்தகத்துக்குக் கொடுத்துவிடப் போகிறேன்? எந்தப் பெண்ணுக்குச் செய்துவிடப் போகிறேன்? நீ சம்பாதித்தால் உனக்காச்சு, உன் பெண்டாட்டி குட்டி குழந்தைக்கு ஆச்சு."

இப்படிப் பேசுவாளே தவிர, வீட்டின்மேல் அம்மாவுக்கு இருந்த பிசுக்கு, சிறிசுகளுக்கு இல்லை. திடீர் திடீரென்று காரிய வெறி பிடித்துவிடும். நினைத்துக் கொண்டு மருமகளிட மிருந்து கைக்காரியத்தைப் பிடுங்கிக்கொண்டு ஒரே மூச்சாய் மாதக் கணக்கில் செய்வாள்,

"இதெல்லாம் உனக்கு என்னத்துக்கு அம்மா? சின்ன வர்கள் காரியம், பெரியவர்கள் காரியம் என்று கிடையாதா?"

"ஏண்டா குரு, எனக்குக் கையும் காலும் இருக்கிற போதே ஒடித்துத் திண்ணையிலே உட்கார்த்தி வைக்க வேண்டும் என்று பார்க்கிறாயா?"

"ஐயோ, இதென்னம்மா விதண்டாவாதம்? நீ சொன் னால் அவள் செய்ய மாட்டாளா? இல்லாவிடில் செய்த வரைக்குந்தான் போதுமே!"

"ஏண்டாப்பா, அவள் செய்தால்தான் காரியம்; நான் செய்தால் இல்லையா?"

"என்னம்மா, அர்த்தத்தைத் திருப்புகிறாய்?"

"குரு உனக்குத் தெரியாது, (அம்மா இருந்த வரைக்கும் குருவுக்கு ஒன்றும் தெரியாது, தெரியக்கூடாது. ஐயோ, இந்தப் பெரியவர்களின் ஆட்சி!) அவள் சிறிசுதானே?

பயப்படுகிறாள். செய்து காண்பித்தால்தானே செய்யாதவர் களுக்குப் பயம் தெளியும்?''

''அதற்காக இல்லாததை எல்லாம் இழுத்துப் போட்டுக் கொள்ள வேண்டுமா?''

''அதற்கு என்ன பண்ணுவது? குடும்பமென்றால் இப்படித் தான். காரியம் செய்த கை சும்மா இருந்காது. இதெல்லாம் எனக்காகவா? ஏதோ இருக்கிறவரை இருந்துவிட்டு, ஒரு பேரனைச் சீராட்டிவிட்டு, வந்த இடத்துக்கு நான் போய்ச் சேருகிறேன்.''

உஷை வீட்டுக்கு வந்து ஐந்து வருஷங்கள் ஆகிவிட்டன. அம்மாதான் காத்துக்கொண்டிருந்தாள். அம்மாவின் ஆசை யின் விடிவிற்கு ஜாடைகள் கூடத் தெரியவில்லை.

x x x

ஒருநாள் பிற்பகல் கூடத்தில் உட்கார்ந்து மாமியார் மருமகளுக்குப் பின்னிக் கொண்டிருந்தாள். கூடத்துத் தூண் மேல், அதற்கும் மச்சுக் கட்டிடத்துக்கும் இடைச்சந்தில் செருகினாற்போல் பதுங்கிய குருவிக் கூட்டிலிருந்து கீச்சுக் கீச்சென ஒரே சப்தம்.

''பேஷ்!''

''என்னது அம்மா 'பேஷ்' என்கிறீர்கள்?''

''அடாடா, வாய் தவறி வந்துவிட்டதே! ஏன் 'பேஷ்' என்றேன் என்றால் அதற்கு ஒரு பயம் பயப்படுவாய்; அதற்கு ஒரு தூக்கம் கெடும் உனக்கு?''

''என்னம்மா கேலி பண்ணுகிறீர்களே! முன்போலேயா நான் இருக்கிறேன்? இப்போது நான் தேவலை இல்லையா?''

''அப்போது நீ தைரியசாலி ஆகிவிட்டாய் என்று சொல்லு!''

''ஆமாம்! நீங்கள் வேண்டுமென்றால் 'சோதனை' பண் ணிப் பாருங்களேன்.''

அம்மா ஏதோ சொல்ல வாயெடுத்தவள், திறந்த வாய் இன்னமும் மூடவில்லை. அதற்குள் உஷையின் மடியில் ஏதோ

பொத்தென வீழ்ந்ததும், 'வீல்' என உஷை அலறினாள். அவள் மடியில் ஒரு குருவிக் குஞ்சு, விழுந்த அதிர்ச்சியிலிருந்து சமாளிக்க முயன்றுகொண்டிருந்தது.

''பேஷ்! ரொம்பத் தைரியசாலியாக இருக்கிறாயே!'' அம்மா அதை அவள் மடியிலிருந்து எடுத்துக்கொண்டாள். அதன் திறந்த வாயின் தளிர்ச்சிவப்பு 'டால்' அடித்தது.

''மேஜையை எடுத்துக்கொண்டு வா. த்ஸோ த்ஸோ. பூக்குழந்தை! மேஜையைக் கொண்டுவந்தாயா?''

மேஜையை நகர்த்தி வந்து அதன்மேல் நாற்காலியைப் போட்டு, நாட்டுப் பெண் பிடித்துக்கொள்ள, மாமியார் ஏறிக் கூட்டுக்குள் குஞ்சைத் தள்ளி வைத்தாள். அவளுக்கு ஒரு துளி அருவருப்புக்கூட இல்லை. அந்த நினைப்பிலேயே உஷைக்கு உடல் குலுங்கிற்று.

''என்னடி சிவகாமு, மரத்துமேலே ஏறிக்கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டுக்கொண்டே பக்கத்தகத்துப் பாட்டி வந்தாள்.

''வாருங்கள் பாட்டி, வாருங்கள்.'' அம்மா மெதுவாய்க் கீழே இறங்கினாள்.

''என்னத்தைப் பண்ணுவது பாட்டி? பேராண்டியைச் சீராட்டித் தூங்கப் பண்ணிவிட்டு இறங்குகிறேன்.''

உஷைக்குச் 'சுருக்'கென்றது. சில சமயங்களில் அம்மாவின் பேச்சில் பிடிபடாத தாதுக்களெல்லாம் பேசும்.

''என்கிட்ட யாரும் சொல்லவில்லையே?'' பாட்டிக்கு முன்னது பின்னது மறந்துவிட்டது. ''ஏண்டி பேத்தி?''

''உஷை, ஏன் நின்று கொண்டிருக்கிறாய்? பாட்டிக்கு நமஸ்காரம் பண்ணேன்!''

உஷைக்கு ஒன்றும் புரியவில்லை. அம்மாவின் கட்டளைப்படி பாட்டியை நமஸ்கரித்து அம்மாவையும் சேவித்தாள்.

''நன்றாக இரு. மகராஜியாக! பிறக்கிறது பிள்ளையாகப் பிறக்க வேண்டும். எப்போது என்ன ஏது எல்லாம் எனக்குச் சொல்லியாக வேணும்டீ குட்டி!''

''நீங்கள் நினைக்கிறபடி யெல்லாம் இன்னும் ஒன்றும் நடந்துவிடவில்லை, நேற்றைக்குத்தான் குளித்தாள். இந்த

நமஸ்காரம் பின்னி விட்டதற்காக எனக்கு. மாட்டுப்பெண் தலையிலே வெள்ளி மயிர் ஒன்று முளைத்திருந்தது. அதற்காக உங்களுக்கு—''

திடீரெனத் தொண்டையை அடைத்துக்கொண்டு எழுந்து அழுகையை அடக்கிக்கொண்டு உஷை மாடிக்கு ஓடினாள்.

அழுது அழுது உஷைக்குக் கண்ணீர் வறண்டுபோய், விழியோரங்கள் 'வரக்கு வரக்'கென இழுக்கக்கூட ஆரம்பித்து விட்டன. முழங்கை வளைவினின்று நிமிர்ந்த முகத்தை எதிர்க் கண்ணாடியில் காணச் சகிக்கவில்லை. கன்னங்களில் கண்ணீர்க் கறை காய்ந்து, விழிகள் முட்டிக்கொண்டு முகமே வீங்கிப் போய்......

மாலைக் காற்றில் ஜன்னலின்மேல் கவிந்து படர்ந்த கொடிகளில் இலைகள் அசைந்தன. வீட்டுக்கு எதிரே சிவன் கோயிலின் கோபுர ஸ்தூபியின்மேல் உட்கார்ந்துகொண்டு ஒரு புறா கழுத்தை மினுக்கி மினுக்கிச் சிறகைக் கோதிக் கொண்டிருந்தது. கண்ணாடிக்குமேல் மாட்டியிருந்த படத்தி லிருந்து அவள் மாமனாரின் விசனம் தோய்ந்த கண்கள் அவள் மேல் குனிந்து அவளைத் தேற்ற முயன்றன. கீழிருந்து இரண்டு பாட்டிகளின் பேச்சும் மேலே மிதந்து வந்தது,

''சிவகாமு, அந்தப் பெண்ணைக் குற்றம் சொல்வதிலேயும் பிரயோசனம் இல்லை.''

''நன்றாக இருக்கிறது, பாட்டி! நீங்கள் ஒருத்தரே போதுமே எனக்கு! நான் யாரை என்ன குற்றம் சொன்னேன்?''

''சரி, சலித்துக்கொள்வதில் பலனில்லை.''

''அட ஈசுவரா! அவளை என்ன சலித்துக்கொண்டேன்?''

''சரி போ. உன்னோடு தர்க்கம் பண்ண நான் ஆளல்ல.'' பாட்டி பொறுமை இழந்தாள். ''நான் என்ன சொல்ல வந் தேன் என்றால், உன்குடும் பத்துக்கே நாக சாபம் இருக்கிறது. உன் மாமனாருக்குத் தாத்தா நாளிலே வீட்டில் வாழ்கிற பாம்பை அடித்துக் கொன்றுவிட்டாராம். வாழ்கிற பாம்பை

யாராவது அடிப்பார்களோ? அது பாட்டுக்கு வருகிறது போகிறது.''

''பாம்பு கடித்தால் வேண்டிய இம்சை இருக்கிறது. பாட்டி, எனக்குத் தெரியும், இரண்டு தட்வை கடித்து மீண்டிருக்கிறேன். செத்துவிட்டால் செத்தவர்களுக்குத் தெரியப் போவதில்லை. பிழைப்பதாக இருந்தால் பிழைக்கிற வரைக்கும் வேண்டிய இம்சை இருக்கிறது.''

பாட்டி காதில் வாங்கிக்கொண்டதாகத் தெரியவில்லை.

''அப்போதிலிருந்து, தலை முறைக்கு ஒரு பிள்ளைதான். போனால் போகிறதென்று விட்டு வைத்தாற்போல், இத்தனை பாவத்திலேயும் ஒரு சின்னப் பூர்வ புண்ணியம். நாக சாபமென்றால் லேசா என்ன?''

''ஓஹோ, சம்சாரம் குறுகிப்போனால் நாகசாபம். பெருகிப் போனால் நாகபாசமா?''

''சரி, அப்படித்தான் வைத்துக்கொள்ளேன்; சாமியை நம்புகிறோமோ இல்லையோ, சாபத்தை நம்பித்தானே ஆக வேண்டியிருக்கிறது? பட்டும் தெரியாத நாச்சியாராய்ப் பேசுகிறாயே, ஒன்றும் தெரியாத மாதிரி! நீ கொஞ்சமாகப் பெற்றாயா? ஒன்றா, இரண்டா? விதியோடு போட்டி போட்டுக்கொண்டு, குழிப்பிள்ளை வயிற்றிலாக, பன்னிரண்டு பெற்றுப் பூத்துக் குலுங்கினாய், ஆனால் உனக்கு உருப்படியாக மிஞ்சினது எத்தனை? போனது போகட்டும். அவைகளின் ஆயுளெல்லாம் வாங்கிக் கொண்டு குருவாவது அந்தத் தையல்நாயகி புண்ணியத்தில் சௌக்கியமாய் இருக்க வேணும். ஒவ்வொன்றாய்ப் பெற்று மணி மணியாய் வளர்த்து, ஒவ்வொன்றை ஒவ்வொரு தினுசாய்ப் பதினொன்றையும் பறிகொடுத்தும் நெஞ்சு இடியாமல் நிமிர்ந்து நிற்கிற உன் தைரியம், கிழவி, உன் சத்துருகூட மெச்சுகிற தைரியந்தான். அடேயப்பா! வேறே யாராவதாக இருந்தால், இத்தனை கஷ்டத்துக்கு அவர்களின் மேல் புல் முளைத்துப் போயிருக்கும்.''

"தைரியமாவது, பாட்டி! என் குழந்தைகள் போய் நான் இருக்க வேண்டும் என்று இருக்கிறபோது, கடவுள்தான் நெஞ்சைக் கல்லாய் அடித்து விடுகிறானே!"

திடீரென உஷைக்கு உடல் புல்லரித்தது. ஏதோ தரிசனம் கண்டாற்போல். தைரியம், பயம் இரண்டுக்கும் வித்தியாசங்கள்—ஒற்றுமைகள், எது தைரியம் எது பயம் என்னும் சந்தேகங்கள், ஊமைக் கனாக்கள், ஊசிக்காதில் யானை புகுந்து வெளிப்பட்டது எப்படி என்பதெல்லாம் ஒருங்கே வெளிச்சமானாற்போல் மண்டையோட்டின் உள் தகட்டில் ஒரு மின்வெட்டுத் தோன்றி மறைந்த உணர்ச்சி உடலை ஊடுருவிற்று. அந்த வேகம் தாங்கக்கூடியதாக இல்லை. உடல் கிடுகிடென்று ஆடிற்று, கட்டில் சட்டத்தைக் கெட்டியாக பிடித்துக் கொண்டாள்.

தென்றலின் மூச்சு எழுந்து முகத்தில் மோதியது. அவள் மேல் பூக்கள் சொரிந்தன.

அம்மா கொல்லைப்புறத்து மதில்சுவரில் எதையோ உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். தனக்குப் புதிதாய்த் திறந்த கண்களுடன் உஷை அவளைக் காண்கையில் அவள் ஏதோ ஒளிவட்டத்தின் நடுவில் நின்று கொண்டிருந்தாற்போல் தோன்றிற்று. ஒரே சமயத்தில் அவள் மேல் அன்பு, அச்சம், வியப்பு எல்லாம் அவளுள் கிளர்ந்தன. மெதுவாய் அவள் பக்கலில் போய் நின்றாள். அவளை அறியாமல் கைகள் பிசைந்தன.

அவள் வந்ததை அம்மா அறிவாள் எனினும், கண்டதாய்க் காட்டிக்கொள்ள மாட்டாள். சுவர்மேல் நாட்டம் மாறாமலே, "என்ன உஷை, பக்கத்தகத்துப் பாட்டி உனக்காக வக்காலத்துப் பேசுகிறாளே! எனக்கு நேற்றைக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அவள் என்ன, நான் படுத்துகிற மாமியாரில் சேர்த்தியாய் உனக்குப் படுகிறதோ?" என்றாள்.

உஷை நடுநடுங்கிப் போனாள். "நான் ஒன்றுமே சொல்லவில்லையே, அம்மா?"

"நீ சொன்னாலும் சரி, சொல்லாவிட்டாலும் சரி, என் சுபாவத்தில் எது மற்றவர்களுக்குப் பிடிக்கிறதோ பிடிக்கவில்லையோ, என்னை நான் இனி மாற்றிக்கொள்ள முடியாது; எனக்கு மாற்றிக்கொள்ளக் கூடிய வயசும் இல்லை என்று தெரியுமோ இல்லையோ?"

உஷையின் விழிகள் பெருக்கெடுத்தன. "நான் ஒன்றுமே சொல்லவில்லையே, அம்மா. என்னை மன்னித்துவிடுங்கள் அம்மா!"

அம்மா அவள் பக்கம் திரும்பினாள். "ஏதுக்கு மன்னிக்க வேணும்?"

உஷை உடனே குழப்பமடைந்தாள். அவளுக்கே புரியவில்லை. வார்த்தைகள் தட்டுக்கெட்டுத் தாமே வெளிப்பட்டன. "நான் இந்த மாதிரி தைரியம் இல்லாத கோழையாக இருக்கிறேனே, அதற்கு."

அம்மாவின் கண்கள் உஷையின் மேல் தங்கின. அவள் முகத்தில் லேசாய்ப் புன்னகை படர்ந்தது, அவள் பார்வை கூடச் சற்று இளகிற்றோ? தைரியமாய், "தைரியம் என்றால் என்ன, அம்மா?" என்றாள்.

"இதோ பார், இதுவும் ஒரு தைரியந்தான்." அம்மா மதிள்சுவரில் தான் பார்த்துக் கொண்டிருந்த இடத்தைச் சுட்டிக் காட்டினாள், "இந்தச் செடியைப் பார்த்தாயா? இந்தக் கல்சுவர் நடுவில் ஒரு துளிக்கீறல் மண்ணில் எப்படி ஒரு விதை விழுந்து முளைத்துத் தைரியமாய் இலை விட்டிருக்கிறது என்று இத்தனை நாழிகை யோசனை பண்ணிக் கொண்டிருந்தேன். நீயும் வந்தாய்."

அம்மாவின் ஆழ்ந்த பார்வையில் தன் முகம் சிவப்பது அவளுக்கே தெரிந்தது. புரியாத விசனம் லேசாய் அவளுள் படர்ந்தது. "நான் ஏன் இப்படி இருக்கிறேன்?" என்று தனக்கே சொல்லிக் கொண்டாள்.

அம்மா அவள் தோள்மேல் கை வைத்தாள். "உஷை, நீ எப்படியும் இல்லை. சரியாய்த்தான் இருக்கிறாய். உனக்கு ஒன்றுதான் தெரியவில்லை. உலகம் முழுவதும் வியாபித்திருக்கிற உயிருக்கு உன் உடல் ஒன்றுதான் உண்டு என்று

அதைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருக்கிறாய். நான் அப்படி நினைக்கவில்லையே என்று என்னோடு தர்க்கம் பண்ணாதே. ஒவ்வொருவரும் தான் பிறக்கிற கர்ப்பச் சூட்டோடு ஒவ்வோர் ஆதார சுபாவத்தைத் தாங்கிக் கொண்டு வருகிறார்கள். அதில் சேர்ந்தது என்று வைத்துக் கொள்ளேன். ஓர் உடல் போனால் நிமிஷத்துக்கு இன்னும் லட்சம் உடல் தனக்கு இருக்கிறது என்ற தைரியம் உயிருக்கு எப்போதும் உண்டு என்பதைத் தெரிந்துகொள். இல்லா விட்டால் உன்னையும் என்னையும் மாத்திரம் இந்த உலகம் நம்பிக்கொண்டிருந்தால், எப்போதோ சூனியமாகியிருக்கும். உன் உடலுக்குள்ளேயே எத்தனை உடல்கள் மறைந்துகொண் டிருக்கின்றன என்று உனக்குத் தெரியுமோ? உயிருக்கு என்றைக்குமே சாவு இல்லை. அதற்கு இருக்கிறதைத் தவிர வேறு தெரியாது, ஒன்று இல்லாவிட்டால் ஒன்று, ஒன்றின் பின்னால் ஒன்று என்பதுதான் உயிரின் இயற்கை. அதன் இயற்கைதான் அதன் கொள்கை. ஆசையாகப் பறித்து, சிரத்தையாக உன் கையால் நீயே தொடுத்து, கொண்டை யில் அலங்காரமாக இன்றைச் சாயந்தரம் செருகிக்கொண்ட பூவை நாளைக் காலை நீ தானே அதே கையால் பிய்த்து எறிகிறாய்? அதை நீ புரிந்துகொண்டால் எல்லாமே புரிந்து கொண்ட மாதிரி. அதன் மணம் மாத்திரம் சில சமயங்களில் நாள் கணக்கில் கூந்தலில் தங்கிப் போகிறது. அதுதான் அதன் தைரியம். அது மாதிரிதான் எல்லாம். இந்த நிமிஷம் பூத்து அடுத்த நிமிஷம் கசங்கிப் போகும் பூவுக்கு இவ்வளவு தைரியம் இருந்தால். நமக்கு இன்னும் எவ்வளவு இருக்க வேண்டும்? தைரியந்தான் சக்தி, தைரியந்தான் உயிர். உஷை, உனக்கு ஒரு கதை சொல்கிறேன்.'' உஷை அம்மாவைத் தொடர்ந்தாள். அம்மா சுவாமி அலமாரியில் இருந்த பூஜைப் பெட்டியைத் திறந்து அதிலிருந்து ஒரு சங்கை எடுத்தாள்.

''இந்தச் சங்கை நான் கல்யாணமாகி, இந்த வீட்டுக்கு வரும்போது என் அத்தை எனக்குத் தந்தாள். 'சிவகாமு, என் னிடம் இப்போது காசில்லை, பணமில்லை. இதை உனக்குத்

தருகிறேன். ஆனால் இதை நீ லேசாக நினைக்காதே. என் தாத்தாவுக்குத் தாத்தா நாளிலிருந்து நான்கு தலைமுறைகளாக நம் வீட்டில் இது இருக்கிறது. அவருக்கு ரொம்பப் பக்தி, ஆசாரம், பூஜை, புனஸ்காரம் எல்லாம் உண்டு. தேவி உபாசகர். நவராத்திரி ஒன்பது நாளும் சாப்பிடமாட்டார். ஒரே வேளை ராத்திரி ஒரு தம்ளர்' பால்; அவ்வளவுதான். பூஜையிலே உட்கார்ந்தால் நேரம் போவதே அவருக்குத் தெரியாதாம். அது மாதிரி ஒரு நாள் தம்மை மறந்த நிலையில் அந்தப் பாலையும் குடிக்கவில்லை. மறுநாள் காலை, 'ஐயோ, கொடுக்க மறந்துவிட்டேனே' என்று பாட்டி பதறிப் போய்ப் பால் பாத்திரத்தைத் திறந்து பார்த்தால் உள்ளே பால் இந்தச் சங்கு ரூபத்தில் அப்படியே உறைந்து போயிருந்ததாம். தாத்தாவிடம் கொண்டுபோய்க் காண்பித்தாள். 'இது தேவி பிரசாதம்' என்று சொல்லிப் பூஜையில் வைத்து விட்டார். அன்றையிலிருந்து குடும்பத்தில் ஒவ்வொரு குழந்தை பிறக்கிற போதும் இந்தச் சங்கில் தானே பால் நிறைந்திருக்குமாம். தாய்ப் பாலுக்கு முன்னால் இந்தச் சங்குப் பாலைத்தான் குழந்தைக்குப் புகட்டுவார்களாம். ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு தடவை நிறையும்; அவ்வளவுதான்.

''நீ இந்தக் காலத்துப் பெண்ணாய், இதெல்லாம் நிஜமா, நடந்திருக்குமா, சாட்சி நிருபணை எல்லாம் கேட்காதே. இந்தச் சங்கின் ஐதிகத்தைப் பற்றி எனக்கும் இவ்வளவுதான் தெரியும். அந்த நாளெல்லாம் நம்புகிற நாள்.

'நாள் ஆக ஆகப் பின்னால் வருகிற சந்ததிகளுக்குப் பக்தி, சிரத்தை, ஐதிகம், நம்பிக்கை, சீலம் எல்லாம் குறைந்து போய் விட்டன. அந்த அழுக்கு ஏற ஏற, குடும்ப வளங்களும் ஒடுங்கிப் போயின. நாளடைவில், இந்தச் சங்கு, பூஜைப் பெட்டியிலிருந்து எடுக்கப்பட்டு, வீட்டுக் குழந்தைகளின் விளையாட்டுச் சாமானாக மாறி, அப்புறம் அந்த மதிப்பும் போய், கண்டான் முண்டான் சாமான் பெட்டிக்குள் மாட்டிக் கொண்டுவிட்டது. என் அத்தைதான் அதை அங்கிருந்து தப்ப வைத்தாள். அப்போதெல்லாம் அலமாரியில் விக்கிரகந்தான் இருந்தது. பூஜை, அபிஷேகம், தனி நைவேத்தி

யங்கள் எல்லாம் ஜாடாவாக நின்று போயின. தின்கிற சோற்றைச் சாமிக்கு மறக்காமல் காண்பித்துவிட்டு, தின்றால் அதுவே பெரிது! அதே மதிப்பில், இந்தச் சங்கும் அலமாரியில் ஒரு மூலையில், என் அத்தை புண்ணியத்தில் கிடந்தது.

''அத்தையின் தலையெழுத்து, சின்ன வயசிலேயே, அகத்துக்குத் திரும்பி வந்துவிட்டாள். நிறையப் புக்ககத்துச் சொத்தோடே. அத்தைக்கு நல்ல மனசு; எல்லோர் மேலும் அவளுக்குப் பட்சம்; எல்லோரையும் நம்பிவிடுவாள். உடன் பிறந்தவர்களும் மன்னிகளும் அவள் சொத்தைச் சுரண்டிச் சுரண்டிக் கரைத்து, அவரவர்கள் காரியத்தைப் பார்த்துக் கொண்டு, அவளை ஓட்டாண்டியாக்கி அகத்துக்குச் சமையல் காரியாக்கி, அப்புறம், 'நீ வைத்துக் கொள்கிறாயா, நான் வைத்துக் கொள்ளட்டுமா?' என்று ஏலம் கூற ஆரம்பித்து விட்டார்கள்.

''ஆனால் அப்போதும் அத்தைக்குப் புத்தி வரவில்லை. அவளே கொஞ்சம் அசடு. 'இருக்கட்டும் இருக்கட்டும், என் வாஞ்சி தலையெடுக்கட்டும், அப்போது அல்லவா இவர்கள் அத்தனை பேருக்கும் இருக்கிறது!' என்று வீரியம் பேசிக் கொண்டிருந்தாள். ஏனோ தெரியவில்லை. அத்தைக்கு அவன் மேல் உசிர்.

''ஆனால் வாஞ்சியாவது, தலையெடுக்கிறதாவது! வாஞ்சி என் அண்ணன். படிக்கிற நாளும் உழைக்கிற நாளும் உடம்பு வணங்காமல் திரிந்துவிட்டு, உலகத்தில் இருக்கிற கெட்ட பழக்கங்கள் அத்தனைக்கும் இருப்பிடமாகி, ஒரு நாள் பிழைக்கப் போகிறேன் என்று கடல் தாண்டிக் கண்காணாமல் போனவன்; இப்போது அவன் பிழைத்திருக்கிறானா, இல்லையா என்றுகூட எனக்குத் தெரியாது.

''அத்தை வீணாய்ப் போய் வீட்டுக்கு வந்தபின், வாஞ்சி தான் குடும்பத்தில் முதல் குழந்தை, அவனை அப்போதி லிருந்து எடுத்துச் சீராட்டித் தாலாட்டித் தன் தீராத ஆசை களையும் நிறைவேறாத லட்சியங்களையும் அப்படியே அவன்

மேல் கொட்டி பெற்றவளைவிட அவன் மேல் பாசம் வைத் திருந்தாள்.

''ஒரு சமயம் வாஞ்சிக்கு மாபாரதமாக உடம்புக்கு வந்து விட்டது. எந்த வைத்தியத்திற்கும் பிடிபடாமல், புரியாத ஒரு காய்ச்சல் உடம்பை உருத் தெரியாமல் உருக்கி, ஆளை வெறும் எலும்புக்கூடாய், படுக்கையில் கைகால் போட்டது போட்டபடி சாய்த்துவிட்டது. ஆனால் காய்ச்சல் விடவில்லை. பழுக்கப் பழுக்கக் காய்கிறது.

''எனக்கு அப்போது பதினைந்து வயசு இருக்கும். அம்மா இல்லை. அப்பா மாத்திரம் உயிரோடு இருந்தார். அந்த நாள் நன்றாக நினைவிருக்கிறது. அப்பாவுக்கு உடம்பு சரியில்லை, தள்ளாமை. ரேழித் திண்ணையை விட்டு அதிகமாய் நகருவதில்லை. திடீரென்று அவருக்கு என்ன தோன்றிற்றோ தெரியவில்லை. தட்டுத் தடுமாறிக்கொண்டு உள்ளே வந்து, வாஞ்சி கையைப் பிடித்துப் பார்த்தார். வாஞ்சி கண்ணும் கன்னமும் குழி விழுந்து, வாயைப் பிளந்து கொண்டு தூங்கினானோ, நினைவில்லாமல் இருந்தானோ, இரண்டும் தெரியவில்லை.

''தருமு. தருமு!'— அப்பா கூப்பிட்டார். அத்தை லொங்கு லொங்கென்று சமையலறையிலிருந்து ஓடி வந்தாள். அத்தைக்குப் பெரிய சரீரம்.

''தருமு, குழந்தைகளுக்கு ஆன வரைக்கும் சுருக்கச் சோற்றைப் போட்டு எழுப்பு. வாஞ்சியைத் திண்ணைக்குச் சுருக்கக் கொண்டுபோய் விடவேணும்.''

''அத்தை எப்போதுமே சிவப்பு, முள்ளங்கிச் சிவப்பு. அவள் முகத்தில் ரத்தம் குபீரென்று குழம்பிற்று. அத்தை எப்போதுமே தலைக்கு எண்ணெய் வைக்க மாட்டாள், அத்தைக்கு எப்போதுமே மேட்டு விழி; அதிலே விளக்குப் பார்வை வேறே. தலை பரட்டையாய், ஒன்றரைக் கண் உருளுகிறபோது, அத்தை காளியாய்க் காட்சியளித்தாள்.

''என்னடா பிதற்றுகிறாய்?'' அத்தைக்கு அப்பா பத்து வயசாவது பெரியவர். ஆனால் அத்தைக்கு எப்போதுமே நாக்கு நயம் கிடையாது. வார்த்தையில் மரியாதை கிடையாது.

"அப்பா தலைமேல் இடி விழுந்தாலும் பதற மாட்டார். என்ன பண்ணுகிறது? கர்மாவை அநுபவித்துத் தானே ஆக வேணும்? 'வாஞ்சி இன்னும் இரண்டு மணி நேரம் தங்க மாட்டான்.'

"அத்தையின் முகத்தை நான் மறக்க மாட்டேன். மாவுப் பொம்மை கரைகிற மாதிரி முகத்தில் மூக்கு, விழி, வாய், கன்னம், நெற்றி, மோவாய் எல்லாமே சவுங்கி, உள் இடிந்து ஒன்றோடு ஒன்று பிசைந்து கொண்டு, உரு அழிகிற கோரம் வாஞ்சியின் முகத்தைவிடப் பயமாக இருந்தது. நான் கண்ணை மூடிக் கொண்டேன்.

"வா-ஞ்-சீ-ஈ-ஈ-!"

"உடலையே பட்டை உரிக்கிற மாதிரி, மொளமொள வென்று முறிகிற சப்தத்தோடு வீரல்; அப்படியே வாஞ்சிமேல் விழுந்து விட்டாள்.

"அவள் உடம்பிலிருந்து அப்படியே பால் பீறி உடைப் பெடுத்துக் கொண்டு, வாஞ்சியின் முகம், வாய். உடல் படுக்கையெல்லாம் வெள்ளமாக நனைந்துவிட்டன. அந்தப் பாலபிஷேகத்தில் வாஞ்சியின் முகம் திடீரென்று களை கொடுத்தது."

உஷைக்கு உடல் சிலிர்த்தது.

"அத்தைக்குப் பிரக்ஞை வர மூன்று நாளாச்சு. ஆனால் வாஞ்சி பிழைத்து விட்டான். அதற்குப்புறமே அத்தையைக் கண்டால் எங்களுக்கெல்லாம் உள்ளூற ஏதோ ஒரு பயந்தான். அவள் இந்த உலகத்து மனுஷியல்ல. அவள் வழியே தனி வழி. என் மனசுக்கு ஒரு தோற்றம்; அத்தையின் முகமே, எச்சிலைத் தொட்டு அழித்த கோடு மாதிரி, லேசாய்க்கலைந்து போச்சோ என்று. அந்த க்ஷணத்தின் உடம்பு ரத்தமெல்லாம் பாலாய் மாறி விட்டதோ? அப்புறம், கறிகாய் நறுக்கும் போதோ, வேறு வீட்டுக் காரியமாகவோ, விரலில் வெட்டுக்காயம் பட்டால் ரத்தம் கொட்டாமல், பாலாய் வடிந்தது என்று பார்த்தவர்கள் பார்க்காதவர்கள் எல்லோரும் பார்த்த மாதிரி சொல்லிக் கொள்வார்கள். ஆனால் இதெல்லாம்

பொய்யோடு நிஜம் சேர்ந்து பொய்யாவது, நிஜத்தோடு பொய் சேர்ந்து நிஜமாவதிலே சேர்த்தி.''

அம்மா பெருமூச் செறிந்தாள். நீண்ட நாழிகை பேசி விட்டாள். அவளுக்குக் கொஞ்சம் சிரமமாக இருந்தது.

"ஏதுக்கு இந்தப் பேச்சு வந்தது? ஆ, தைரியத்தைப் பற்றி அல்லவா! இந்தச் சம்பவம் நிகழும் போது அத்தைக்குக் குறைந்தது ஐம்பத்தைந்து வயசாவது இருக்கும். இத்தனைக் கும் அவள் வாஞ்சியைப் பெற்ற தாய்கூட அல்ல. இருந்தும் தாய்மை என்கிற உணர்ச்சிக்கு அத்தனை சக்தி இருக்கிறது. இல்லாவிட்டால், அத்தனைநாள் கழித்துப் பேசாத இடத்தில் பேசி, வாஞ்சியின் உயிரைக் காப்பாற்ற முடியுமா? உயிரின் தைரிய லட்சணத்திற்கு இதைவிட அத்தாட்சி எது?''

உஷை கீழே விழுந்து அம்மாவின் கால்களைக் கெட்டி யாய்ப் பிடித்துக் கொண்டாள்.

"அம்மா, நீங்கள் சொல்லுங்கள். எனக்குத் தைரியம் வருமோ?''

அம்மா அவள் மேல் குனிந்தாள். அவ்வளவு பரிவுடன் உஷை அம்மாவை என்றும் பார்த்ததில்லை. அவள் கையை இழுத்து அவள் அடிவயிற்றின் மேல் வைத்து அம்மா அழுத்தினாள்.

"உஷை, பார், உன் வயிறு எவ்வளவு மெதுவாக இருக் கிறது! உன் நெஞ்சோடு பிறந்த பயத்தை என்றைக்கு உன் உடல் உதறுகிறதோ, உன் குடும்ப வித்தை ஏற்றுத் தாங்க அன்றைக்கு உனக்குத் தைரியம் வரும்.''

"நீங்கள் சொல்கிற தைரியம் எனக்கு எப்போது வரும்?''

"வரும், அதன் வேளை வரும் போது—''

"வேளை என்றால் என்ன?''

அம்மாவுக்குத் திடீரென்று முகம் கடுத்தது. "உஷை வீட்டுக் காரியங்கள் போட்டது போட்டபடி கிடக்கின்றன. கதை கேட்டது போதும்; வேலையைப் பார்!''

இனி அம்மா பேச மாட்டாள். அவளுக்குச் சுயநினைவு வந்து விட்டது. அவள் தன் கவசங்களுள் புகுந்து விட்டாள்,

ஆனால் அன்றையிலிருந்து உஷை மடி, ஆசாரம், விரதம் பூஜைகளில் மும்முரமாய் இறங்கி விட்டாள்.

வீட்டுக்கு எதிரேயே கோயில், அம்மாளுக்கு அபிஷேகத் துக்கு ஜலம் எடுத்து வைப்பதும், கோயிலில் இழைகோலம் போடுவதும், பூத்தொடுத்துக் கொடுப்பதும், கோயிலுள் இருந்த நந்தவனத்தில் அரசமரத்தைச் சுற்றுவதுமாய் வீட்டு வேலை நேரங்கள் தவிர, பாக்கிப்போது கோயிலிலேயே குடியாய்க் கிடப்பாள். இம்மாதிரி பக்தி வெள்ளத்தில் அவள் திளைத்துக் கிடப்பது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஒரு விளையாட்டும் வினையுமாய்க் கவலைப்பட ஆரம்பித்து விட்டான்.

"ஏதேது, என் உத்தியோகத்துக்கு ஆபத்து வந்துவிடும் போல் இருக்கிறதே. 'ஏன் ஐயா, இன்றைக்கு ஆபீசுக்கு லேட்?' என்று என் எஜமான் கேட்டால், நான் என்ன சொல்ல? 'இன்றைக்கு வெள்ளிக்கிழமை அல்லவா? என் அக முடையாள் மங்கள ஸ்நானம் பண்ணிவிட்டு அரசமரத்தை நூற்றெட்டுச் சுற்றுக்கள் சுற்றிவிட்டு, தேங்காய் வெற்றிலை பாக்குக் கொடுக்க, ஒரு பழுத்த சுமங்கலியைத் தேடிவிட்டு, அப்புறந்தான் சமையலுக்கு அடுப்புப் பற்ற வைக்க முடிந்தது. இத்தனைக்கும் வடைக்கு நான் அரைத்துக் கொடுத்தேன்' என்று சொல்லட்டுமா?"

அம்மா திண்ணையில் காலை நீட்டி உட்கார்ந்தபடி தோலோடு வறுத்த வேர்க்கடலையைத் தரையில் 'ணக்கு, ணக்கு' என நெற்றிக் கொண்டே, சுவருக்குச் சொல்லிக் கொண்டிருப்பாள்.

"கதை கேட்ட ரோசத்தில், இப்படியெல்லாம் அரச மரத்தைச் சுற்றிவிட்டு, அடிவயிற்றைத் தடவிப் பார்த்துக் கொண்டால் ஆகிவிட்டதா? அதற்கு வேளை வர வேண்டாமா?"

உஷைக்கு உடம்பெல்லாம் ஊசியாய்க் குத்தும்.

"அம்மா, நீங்கள் சொல்கிற அந்த வேளைதான் என்ன?"

"நான் சொல்கிற வேளை, தைரியம், உசிர், தாய்மை, அடிவயிற்றின் மிருது எல்லாம் ஒன்றேதான்."

"நீங்கள் சொல்கிற அந்த ஒன்றுதான் என்ன?"

ஒரு கையில் பூஜைத் தட்டும், மறு கையில் மடி ஜலமுமாக, மடிக்கட்டுடன் உஷை நிற்கையில், அவள் முகத்தின் ஆர்வம், எல்லோர் மனத்தையும் உருக்கும் தன்மையதாக இருக்கும்.

அம்மாவின் நெஞ்சைத் தவிர.

"அம்மா, சொல்லுங்களேன், தெரியாமல் தானே கேட்கிறேன்? நீங்கள் குறிக்கும் அந்த ஒன்றுதான் என்ன?"

"அது அவரவர் புரிந்து கொண்டதற்குத் தக்கபடி, இருதயம் பூத்ததற்குத் தக்கபடி, அவரவர் எண்ணத்துக்குத் தக்கபடி, எண்ணம் கைகூடினதற்குத் தக்கபடி."

குவிந்த இதழ்களுக்குள் மாட்டிக் கொண்ட வண்டுபோல், உஷை மனம் தத்தளிப்பாள்.

x x x

முன்பின் சோடையில்லாமல், திடீரென இருட்டிக் கொண்டு திடுதிடுவென மழை இறங்கிக் கொட்ட ஆரம்பித்து விட்டது. விரல் பருமனுக்கு இறங்கிக் கொண்டிருக்கும் மழைக் கம்பிகளைப் பார்த்துக் கொண்டு உஷை கட்டிலில் உட்கார்ந்திருந்தாள். கீழே கொள்ளை வேலை அப்படியே கிடந்தது. ஆனால் இன்று ஏனோ அவளுக்கு மனம் இருப்புக் கொள்ளவில்லை, பழையனவும் புதியனவும் எல்லாம் ஒன்று பிசைந்து கொண்டு நெஞ்சில் கும்பிக் கிளறி, ஒரு தினுசான மனஎரிச்சல் கண்டு கொண்டிருந்தது. குரு கேலி பண்ணுவான். "இன்று உஷைக்கு வெறிதான்; எல்லோரும் பராக்!"

இன்றைக்கு விடிந்த வேளை சரியாக இல்லை. எழுந்திருக்கும்போதே வேலைக்காரி சொல்லிக் கொள்ளாமல் நின்று விட்டாள். பாலைக் காய்ச்சிக் கீழே இறக்குகையில் கையைச் சுட்டுக் கொண்டு பால் கீழே கொட்டிவிட்டது. நாளைக்கு மோருக்கு 'லாட்டரி!' எதிரும் புதிருமாய் இரண்டு பேர்தான் என்றாலும் வீடு என்னவோ. காடாக இருந்தது. மாடியிலிருந்து கீழ்வரை பெருக்கி யெடுப்பதற்குள், இடுப்பு ஒடிந்து விட்டது. கிணற்றில் ராட்டினம் விழுந்து விட்டது. இந்த

மழைக்குச் சமையலறையில் தெப்பலுற்சவம் நடந்து கொண்டிருக்கும். சாக்கடை ஜலமும் குடி ஜலமும் சர்வம் ஜகந்நாதம். தினம் வேளா வேளைக்கும் வேளையில்லாத வேளையிலும் 'வாங்கிலியாமா?' என்று கழுத்தை அறுக்கும் காய்கறிக் கூடைக்காரி இன்று கண்ணிலேயே படவில்லை. குருவுக்கு மார்க்கெட்டுக்குப் போகவோ, சாமான் வாங்கி வரவோ உடம்பு வணங்காது. ஆனால் கலத்தில் மாத்திரம் அஞ்சும் மூன்றும் அடுக்காய் விழ வேண்டும். இன்று இலையில் சுட்ட அப்பளத்தைப் போடும்போது அல்லவா இருக்கிறது குஸ்தி?

சே, இதென்ன பிழைப்பு!

புருஷன் மனைவி சச்சரவுகள் இப்போதெல்லாம் இலை மறைவு தலைமறைவு பார்ப்பதில்லை. அறை வாசற்படி தாண்டிக் கூடத்துக்கு வந்து எத்தனையோ நாட்கள் ஆகி விட்டன. எப்போது எப்படி மூளும் என்று அவர்களே அறியார். யார்மேல் குற்றமாக இருந்தாலும் சரி, நாலு வார்த்தை அவன் சொன்னால் ஒரு வார்த்தையாவது திருப்பிக் கேட்கும் படிதான் தோன்றிற்று. உடனே ஒன்று ஒன்பதாகிவிடும்.

குருவுக்கு எல்லாமே வேடிக்கை; எப்போதுமே கேலிதான் அவனுடைய வேடிக்கைகளும் கேலிகளும் எப்போதுமே சிரிப்பு மூட்டுவனவாக இல்லை. அவனுடைய கோபங்களுக்கு எப்போதுமே தணிந்து போக முடியவில்லை. அவனுடைய பொறுப்பற்ற, கவலையற்ற. எப்போதுமே சிரித்த முகத்தைப் பார்க்கையில் அவளுக்கே சில சமயங்களில் தோன்றும், தானே வலுச்சண்டைக்கு இழுக்க வேண்டும் என்று.

'அவர் எப்படியேனும் போகட்டும்; நான் ஏன் இப்படி ஆகிவிட்டேன்?' அவர்களை அடக்கிக் கட்டி மேய்த்துக் கொண்டு போக இப்போது அம்மாவும் இல்லை. அவள் காலம் ஆகிவிட்டது. திடீரென்று, ஒரு நாள் காலை, அம்மா ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லையே என்று போய்ப் பார்த்தால், தூக்கத்தின் மூச்சு, உயிரின் சுவாசமாய் இழுத்துக் கொண்டிருந்தது.

பெரியவர்கள் இருப்பதில், இடைஞ்சல்கள் பல இருந்தாலும், அவர்கள் இல்லாததால் நேரும் இம்சைகள் அதை

விட அதிகமாக இருக்கின்றன. அம்மா போனதும் வீடு 'லொட்டெ'ன ஆகிவிட்டது.

அம்மா போவதற்கு முன்னாலேயே, உஷையின் பக்திப் பெருக்குத் தணிந்து ஓய்ந்து வறண்டு எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன. இத்தனை கேலிக்கும் கிண்டலுக்கும் இடையில் அது எப்படி வளரும்?

"அவரவர் புரிந்து கொண்டதற்குத் தக்கபடி, இருதயம் பூத்ததற்குத் தக்கபடி."

சொன்னவர் போனாலும் சொன்னவர் சொன்ன வார்த்தைகள் இன்னும் சீண்டிக் கொண்டுதான் இருக்கின்றன.

இப்போதைக்குத் தெரிந்தது ஒரு பெரும் அசதிதான். நெஞ்சில் பூஞ்சைக் காளான் பூத்துப் படர்ந்து கொண்டிருந்தது.

குருவிடம் ஆதரவு அதிகம் எதிர்பார்ப்பதற்கில்லை. ஆண்களுக்கு என்ன!

இரண்டு தடவை வெளியே போய் வளைய வந்தால் பொழுது ஓடிவிடுகிறது. அவர் சுபாவம் தனி. இருக்கட்டும். தான் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தால் அவரையும் தொங்கப்போட்டுக்கொள்ளச் சொல்ல முடியுமா?

"உஷா, உஷா!-ஏ உஷா ஆ ஆ!!"

பதில் குரல் கொடுக்காமலே, உஷை சர்வ மெதுவாய் எழுந்து கீழே சென்றாள். நன்றாகக் கதவை உடைக்கட்டும். என்றைக்குமே இந்த ஆர்ப்பாட்டந்தானே?

கதவைச் சரியாய்த் திறப்பதற்குள், தள்ளிக் கொண்டு குரு புயல்போல் உள் நுழைந்தான். குரு தனியாக இல்லை.

"மிஸ் பீனா, என்ன வெளியிலேயே நிற்கிறீர்களே! வாருங்கள், வாருங்கள். உஷை, இடி இடி என்று இடிக்கிறேனே, காது செவிடாகி விட்டாயா? சூடாகக் காபி இரண்டு கப் கொண்டு வாயேன்."

குரு சொன்ன மாதிரி உஷைக்குக் காது கேட்டதோ இல்லையோ?அவள் கவனம் முழுவதும்அவன் பின்னால் நின்ற

உருவத்தின் மேல் சென்றிருந்தது. மறையிருளில் அங்கங்கள் புலப்படவில்லை.

''வாருங்கள், வாருங்கள், மிஸ் பீனா. இவள்தான் உஷை; என் மனைவி. சங்கோசப்படாதேயுங்கள். உங்கள் வீடு மாதிரி.''

அரைத் தூக்கத்தில் கேட்கும் வெள்ளி மணிகளின் கிண் கிணிப்பு; வெட்கப்பட்ட முனகல் சிரிப்பு. வெளியிருட்டி லிருந்து உள் வெளிச்சத்தில் அந்தத் தோற்றம் குகையில், உஷை கண்டது முகமல்ல, மூக்கல்ல, விழியல்ல; உயர்ந்த சந்தனக் குழம்பு நிறத்தில், தந்தத்தால் கடைந்த உடல்மேல், மழை நனைப்பில் சதையோடு சதையாய் ஒட்டிக் கொண்ட நீல ஜார்ஜெட் புடவையின் அடியிலிருந்து பிதுங்கிய வடிவ மேடுகளும் பள்ளங்களும், சரிவுகளும்,குழைவுகளும், ஸாட்டின் ரவிக்கை முடிச்சடியில் வழிந்த அடிவயிற்றின் தளதளப்புமே. உஷையின் பார்வை எதிரில் எழுந்தன. பழுக்கக் காய்ச்சிய குடைக் கம்பியால் யாரோ நெற்றிப் பொட்டில் துருவியது போலிருந்தது. செவிகளிலும் மூக்கிலும் வாயிலும் கண் களிலும் ஆவி பறந்தது. சுவரைப் பிடித்துக் கொண்டாள்.

அந்தப் பெண் வாசற்படியிலேயே தயங்கி நின்றாள்.

''இல்லை மிஸ்டர் குரு. மழை நின்று விட்டது. நான் போய் வருகிறேன்.''

''சேசே, என்ன இப்படியா! உஷை உஷை!''

உஷை தாள்ளாடித் தள்ளாடி, படிப்படியாக எண்ணி எண்ணி, மாடியேறினாள். இப்படியும் ஓர் அசதி உண்டா என்ன? கட்டிலில் விழுகையில் தன்னோடு கண்ணாடியில் இன்னோர் உருவமும் தொப்பென்று விழுவதைக் கண்டாள்.

அடையாய் நரைத்த தலையுடன் சுண்டி அடையாளமே மாறிப்போன கிழட்டு முகம்.

தடதடவென்று ஒரு தாண்டில் இரண்டு படிகளாக அவன் ஏறி வரும் சப்தம் எங்கிருந்தோ வந்தது.

''உஷை!'' அவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. ''என்ன இன்றைக்கு உனக்கு? மக்கர் பண்ணு கிறாய்? வந்தவளை 'வா' என்று சொல்லக் கூட வாய்

இல்லையா? அவள் என்னோடு ஆபீஸில் வேலை செய்கிறாள். நடுவழியில் மழையில் மாட்டிக் கொண்டுவிட்டோம்.''

உஷை பதில் பேசவில்லை.

''குளிரெடுத்து அந்தப் பெண்ணுக்கு உடம்பெல்லாம் வெடவெடவென்று உதறுகிறது. உன் புடைவை ஒன்றை அவளுக்குக் கொடேன்.''

பொங்கிய ஆவேசத்தில் உஷைக்கு உள்ளூற உடல் கிடு கிடென்று ஆடிற்று. அந்த வெறியில் ஓர் இன்பத்தை அநு பவித்த மாதிரியே தோன்றிற்று. ஆனால் அவளிடமிருந்து வெளிப்பட்ட குரலின் அமைதி அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது.

''எடுத்துக் கொள்ளுங்களேன்! எல்லாமே உங்கள் சொத் துத்தானே?''

''இதற்கென்ன அர்த்தம், உஷை?''

''ஓஹோ, நான் கேட்க வேண்டிய கேள்வியை நீங்கள் கேட்கிறீர்களா?''

''உஷை, என்ன பிதற்றுகிறாய்? எனக்கு ஒன்றும் புரிய வில்லையே!''

''ஊம்-ஊம்-புரியுமா? புரியாது புரியாது.'' புயல் பிய்த்துக் கொண்டதும் தொண்டை கிரீச்சிட்டுக் கொண்டு எழுந்தது. அந்தக் கொந்தளிப்பில், இத்தனை வருஷங்களாகத் தெரியாம லும் மறைந்தும் அமுங்கிப்போயிருந்த எத்தனையோ மனக் கசப்புக்களும் ஆத்திரங்களும் க்ஷாத்திரங்களும் ஆசாபங்கங் களும் இறக்கைகளை அடித்துக் கொண்டு கிளம்புகையில் அவள் மேல் கவிந்த அவற்றின் நிழலில், கண்கள், நினைவு' சுயபுத்தி எல்லாமே இருண்டன.

''இது எத்தனை நாளாக நடந்து கொண்டிருக்கிறது? இந்த அக்கிரமம் எத்தனை நாளாய் நடந்து கொண்டிருக்கிற தென்று கேட்கிறேன்!''

''ஐயோ கடவுளே!'' குரு தலையில் அடித்துக் கொண் டான். அவனுக்குப் புரிந்து விட்டது. புரிந்ததும், இடி இடி யெனச் சிரிப்பு வந்து விட்டது. வயிற்றைப் பிடித்துக் கொண்டான்.

'சிரியுங்கள், சிரியுங்கள். சிரித்து மழுப்பிவிடலாம் என்று நினைக்காதேயுங்கள். நான் இனி ஏமாந்தவள் அல்ல.''

குரு சிரித்துக்கொண்டே இரு கைகளையும் நீட்டிக் கொண்டு அவளை நோக்கி வந்தான். உமை துள்ளி எழுந்து ஒதுங்கிச் சீறினாள்.

''தொடாதேயுங்கள். இனி என்கிட்டே வராதேயுங்கள். உங்களைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது என்று நினைக் காதேயுங்கள்.''

குரு சட்டென நின்றான். அவன் விழியோர நரம்புகள் கோபத்தில் குறுகுறுத்தன.

''ஓஹோ! என்னைப் பற்றி உனககு எல்லாம் தெரியுமா? என்ன என்ன அம்மா தெரியும்?''

''உங்கள் வர்க்கமே கொண்ட மனைவிக்குத் துரோகம் பண்ணுபவர்கள் என்று.''

''உங்களைப்பற்றியும் எனக்குத் தெரியும். உங்கள் நெஞ்சில் மலம் தவிர வேறு ஏதும் கிடையாது. இல்லாத எண்ணத்தை மனசில் புகுத்துபவர்கள் நீங்கள்தான்.''

''ஆஹா! நீங்கள் பச்சைக் குழந்தை அல்லவா? வாயில் விரலை வைத்தால் கடிக்கத் தெரியாது.''

''உன் எண்ணம் அப்படி இருந்தால் யார் என்ன செய்ய முடியும்? நம்பாதவனை நம்பு நம்பு என்று கெஞ்ச முடியுமா என்ன? கெஞ்சினால் மாத்திரம் நம்பப் போகிறாயா? கெஞ்சு கிற ஆசாமி நான் அல்ல.''

''நீங்கள் என்னை நம்பு நம்பு என்று கேட்கவேண்டாம்.''

''அப்படியானால் நம்பாதே நம்பாதே என்று சொல் லட்டுமா?''

''சொல்ல வேண்டுமா என்ன?'' அவள் சிரிப்புப் புகைந்தது. ''கைப் பூணுக்குக் கண்ணாடி வேறேயா?''

அவனுக்குச் சீற்றம் மீறிவிட்டது. கையை ஓங்கினான்.

''அடியுங்கள். அடியுங்கள். இதுதானே உங்களால் முடியும்? உள்ளதைச் சொன்னால் யாருக்கும் உடம்பெரிச்சல் தானே?''

"சரி, அப்படியே வைத்துக்கொள்." கடித்த பற்களி னிடையிலிருந்து வார்த்தைகள் சீறின.

"உண்மைக்கும் உண்மை யல்லாததற்கும் வித்தியாசம் உனக்குத் தெரியுமானால் உன் மேதாவித்தனம் உன்னோ டேயே இருக்கட்டும். உன்னிடம் நான் எதையும் ருஜூப் படுத்திக் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. நான் ஆண் பிள்ளை; என் இஷ்டம். உன் புடவைத் தலைப்பில் என்னை நீ முடிந்து வைத்துக்கொண்டு இல்லை. முடிந்துகொள்ள முடியாது. முடிந்து கொள்ளவும் விடமாட்டேன். உன்னால் ஆனதைப் பார்த்துக்கொள்."

கதவைத் தடாலென்று சாத்திக்கொண்டு வெளியே சென்றான்.

உஷை மடாரென்று கீழே விழுந்து விட்டாள்.

x x x

நினைவு திரும்பியதும் உஷைக்கு முதல் முதலாய்த் தெரிந்தது. உடலை முறித்துப் போட்ட ஓர் அசதி. கண்ணிமைகளைத் தூக்க முடியாதபடி ஒரு கல்கனம் மேலே அழுத்திற்று. தீவிர முயற்சியில் அதைப் புரட்டிவிட்டுக் கண் களைத் திறந்தாள்.

மேகங்களைக் கிழித்துக் கொண்டு, அழுத முகத்துடன் சூரியன் புறப்பட்டுக் கொண்டிருந்தான். வானவெறிச்சில் ஓர் ஒற்றைப் பட்சி திசையற்றுப் பறந்துகொண்டிருந்தது. முந்திய மாலையின் நிகழ்ச்சிகள் பழைய வேகத்துடன் புரண் டெழுந்தன. எழுந்து உட்கார்ந்து சுற்று முற்றும் நோக்கினாள்.

குரு வீடு திரும்பிய அடையாளங்கள் ஒன்றும் இல்லை. போட்டது போட்டபடி. இனிமேல் இவ்வளவுதான். பிர யோசனம் இல்லை, பிரயோசனம் இல்லை. இறங்கிக் கீழே சென்றாள். வீடு 'ஜோ' வென்றிருந்தது, போட்டது போட்ட படி. எதுவும் பிரயோசனம் இல்லை, இதுதான் முடிவின் ஆரம்பம். 'போதுமடாப்பா, போதும் இந்த ஜன்மம்! எல் லோருக்கும் இருக்கும் அலுப்பு எனக்கு மாத்திரம் இல்லையா என்ன?'

வாயிற் கதவை மூடக்கூட உஷை கவலைப்படவில்லை. அவள் இப்பொழுது எந்தக் கவலையும் படவில்லை. அவளுக்கே காற்றில் மிதப்பதுபோல் இருந்தது.

தங்கமாய்த் தகதகக்க கோபுரத்தில் பித்தளை ஸ்தூபி யின் மேல் ஒரு கிளி கீச்சுக் கீச்சென்றது. நந்தவனத்தில் பூக்களும் செடிகளும் தங்கள் பளிச்சென்ற முகங்களை ஆட்டி அவளை வரவேற்றன. ஆனால் உஷை எதையும் கவனிக்க வில்லை. இன்னும் ஒருவரும் சுவாமி தரிசனத்துக்கு வரவில்லை. காற்றில் அலைந்த நெற்றி மயிரை ஒதுக்கிக் கொண்டு உஷை அரசமரத்து மேடைமேல் ஏறினாள். மரத் தடியில் பாம்புப் புற்றுத் தொடர்கள் இடுப்பளவு உயரத்துக்கு ஓங்கி நின்றன. அவற்றுள் ஒன்றில் விரலை வைத்துவிட்டாள்.

கைபட்டதும் மண் பிசுபிசுவென உதிர்ந்தது. அப் பொழுதுதான், அப்புறந்தான், அவள் இழைத்த செய்கையின் பிரக்ஞை வந்தது. ஆனால் விரலை எடுக்க முடியவில்லை. விர்விர்ரென்று மின்சார வேகங்கள் அலைமோதி உடலை ஊடுருவின. 'குபுக் குபுக்' கென்று அடிவயிற்றை மீண்டும் மீண்டும் சுருட்டுகையில் நெஞ்சில் ஒரு புதுவிதமான களிப்பு மதமதத்து அவளைப் பரவசத்தில் அழுத்தியது. உயிருக்கும் சாவுக்கும் இடையில் எல்லைக் கோட்டின்மேல் நின்றால் இப்படித்தான் இருக்குமா? இனி என்ன நேரப்போகிறது?

'என்ன ஆச்சரியம்! எலிக்குப் பயப்படும் எனக்குப் புற்றில் கை வைக்கும் வேளைகூட வந்துவிட்டது! பார்த்தாயா?

'ஓஹோ, அம்மா சொன்ன வேளையும் இதுதானோ? இதுதான் அம்மா குறித்த தைரியமோ? நீ ஏன் என்னைக் கடிக்க இன்னும் வரவில்லை? எங்கே ஒளிந்து கொண்டிருக் கிறாய்?

'என் கிட்ட உனக்குப் பயமா? உன் புற்றில் விரலை வைக்கும் என் தைரியமும் என்னைக் கடிக்க உன் பயமும் இரண்டுமே ஒன்றுதானா? அம்மா சொன்னாரே, எல்லாமே குறித்த அந்த ஒன்றில் சேர்ந்ததோ, என் தைரியமும் உன் பயமும்?

'வா வா, நீ என் குழந்தை; இல்லாவிட்டால் நான் உன் குழந்தை. எனக்கு உன் மேல் ஆசையே ஏற்படுகிறது. வா,

என்னைக் கடி. ஒரு வழியாய் என்னை முடி. இல்லையோ, என் விரலை நக்கு. என் பயத்தை நக்கு. என் குடும்பச் சாபத்தை நக்கு.'

புற்றின் அடிவாரங்களிலிருந்து ஏதோ வழிந்து குழைந்து எழுவதுபோல் தோன்றிற்று. உஷை கண்ணை மூடிக்கொண்டாள். ஒரு பெரும் கேவல் அவளிடத்தினின்று கிளம்பிற்று.

"உஷை, உஷை!"

உஷைக்குத் தலை சுற்றிற்று. கால்கள் விட்டுக் கொண்டன. மேடையிலிருந்து கீழே உருண்டாள்.

குரு அவளை அப்படியே இரு கைகளாலும் வாரிக் கொண்டான்.

x x x

**வே**ளை வந்ததும் உஷை ஓர் ஆண் மகவை ஈன்றாள். ஜாடை அப்படியே அம்மாவை உரித்து வைத்திருந்தது.

அம்மாவின் சங்கில் தன் பாலைக் கறந்து உஷை குழந்தைக்குப் புகட்டினாள். அவள் முதுகை யாரோ ஆதரவாய்த் தடவினாற் போலிருந்தது. உஷைக்கு உடல் சிலிர்த்தது.

"அவரவர் புரிந்துகொண்டதற்குத் தக்கபடி,
இருதயம் பூத்ததற்குத் தக்கபடி,
அவரவர் எண்ணத்துக்குத் தக்கபடி,
எண்ணம் கைகூடினதற்குத் தக்கபடி."



## ஆசிரியரின் நூல்கள்

1. ஜனனி
2. இதழ்கள்
3. பச்சைக் கனவு
4. கங்கா
5. அஞ்சலி
6. அலைகள்
7. தயா
8. புத்ர
9. அபிதா
10. த்வனி
11. உத்தராயணம்
12. லா. ச. ரா.வின் சிறப்புச் சிறுகதைகள் Vol. I
13. பாற்கடல்
14. சிந்தாநதி
15. கல் சிரிக்கிறது
16. கேரளத்தில் எங்கோ
17. லா. ச. ரா.வின் சிறப்புச் சிறுகதைகள் Vol. II
18. மீனோட்டம்
19. புற்று
20. பிராயச்சித்தம்
21. கழுகு

